தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு — 169

# ஐந்து தமிழிசை
# நாட்டிய நாடகங்கள்

திருத்திய பதிப்பு

சிறப்புக்கௌரவப் பதிப்பாசிரியர்
திரு. வ. வேணுகோபாலன்
தஞ்சாவூர்




வெளியீடு:
இயக்குநர்
சரசுவதி மகால் நூலகம்
தஞ்சாவூர் – 613 001

கி.பி. 1990 விலை ரூ. 50-00

தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு — 169

# ஐந்து தமிழிசை நாட்டிய நாடகங்கள்

திருத்திய பதிப்பு

சிறப்புக்கௌரவப் பதிப்பாசிரியர்:

திரு. வ. வேணுகோபாலன்

தஞ்சாவூர்




வெளியீடு:

இயக்குநர்

சரஸ்வதி மகால் நூலகம்

தஞ்சாவூர்-613 001

கி. பி. 1990 விலை. ரூ. 50-00

# பொருளடக்கம்

# பதிப்பாசிரியர் உரை

தஞ்சை சரசுவதி மகால் நூலகத்தில் பாதுகாக்கப் பெற்று வரும் பல ஆயிரக்கணக்கில் உள்ள ஓலைச்சுவடிகளில், தெலுங்கு லிபித் துறையில் படிவம் எடுக்கப்பெற்றுள்ள சுவடிகளில் காணப் பெறுபவை. இவ்வைந்து தமிழிசை நாட்டிய நாடகங்கள் என்ற தொகுப்பாகும். இவைபோன்றே கிரந்தமொழிச் சுவடிகளும் தெலுங்கு லிபியில் எழுதப் பெற்றவை ஆயிரக்கணக்கில் உள்ளன.

இத்தொகுப்பின் முதற்பதிப்பு 20—1—1980-ல் இந்நூலக வெளியீடாக வெளியிடப் பெற்றது. முதற்பதிப்பு வெளியீடு செய்த நாளில், இந்நாடகத் தொகுப்புக்கு ஆய்வு முன்னுரை வெளியிட வாய்ப்பில்லை.

இந்நாள் இந்நூலகத்தின் இயக்குனரும் பன்மொழிப் புலவரும் தமிழ்ப் பேராசிரியருமான உயர்திரு மு. சதாசிவம் அவர்களின் அன்புக் கட்டளையை ஏற்று ஆய்வு முன்னுரை எழுதியுள்ளேன்.

இவ்வைந்து தமிழ் நாடகங்களும், தமிழிசைப் பாக்களுடன் சந்திவசனம், தமிழ் உரைநடைப் பேச்சு நிறைந்த நூல்கள், இந்நூலகத்தில், தெலுங்கு லிபியில் (தெலுங்கு எழுத்தில்) எழுதிவைக்கப் பெற்றுள்ள சுவடிகளாகும் என்பது குறிப்பிடத் தக்கது.

இத்தமிழ் நாடகங்கள், தமிழ் எழுத்தில் எழுதப்பெற்ற ஓலைச்சுவடிகள், இந்நூலகத்தில் காணக் கிடைக்கவில்லை.

இந்நூலகத்தில், தமிழ்ப்படைப்பு நூல்களான ஐந்து நாடகங்களும், காகிதத்தில் படிவம் (காப்பீடு) எடுத்து எழுதிய போது, தெலுங்கு லிபியைத் தமிழ் எழுத்தில் எழுதியிருக் கிறார்கள். காப்பீடு வால்யூம் (தொகுதி) 353, 367, 1999 ஆகிய எண்கள் உள்ளனவற்றில் இந்நாடகங்களைக் காணமுடிகிறது.

தெலுங்கு லிபியிலிருந்து, தமிழ் எழுத்துக்களில் படிவம் எடுத்தெழுதிய காலம் 1923. காலக்குறிப்பு காப்பீடு தொகுப்பில் குறிப்பிடப் பெற்றுள்ளன. மற்றும் இவைபோன்றே அதிரூபவதி கல்யாணம், சங்கரநாராயண கல்யாணம் என்ற இரு நாடகங் களும் உள்ளன. 'அதிரூபவதி கல்யாணம்' என்ற நாடகம்

1985-ல் இந்நூலக வெளியீடாக வெளிவந்துள்ளது. நாடக ஆய்வு முன்னுரையுடன் அந்நூலைப் பதிப்பித்திருக்கிறேன். இரண்டாம் பதிப்பாக வெளிவருகின்ற இவ்வைந்து தமிழ் நாடகங்களைப் பற்றின விவரங்கள்:

1) பூலோக தேவேந்திர விலாசம் M. No. 644-188 பிரதி ஒன்றே உள்ளது. 5—7—1923ல் படி எடுக்கப் பெற்றுள்ளது.

2) சந்திரிகாஹாஸை விலாசம் M. No. 681-220 பிரதி ஒன்றே உள்ளது. 20—7—1923ல் படி எடுக்கப் பெற்றுள்ளது.

3) விஷ்ணு சாகராஜ விலாசம் M No. 639, 940, 641-178 என்ற எண்களில் உள்ளவை. 4—8—1923-ல் படி எடுக்கப் பெற்றுள்ளது.

4) சகசி மன்னர்மீது பாடப்பெற்ற குறவஞ்சி நாடகம் M. No. 527, 528. இரண்டு பிரதிகள் உள்ளன. 1923ல் படி எடுக்கப் பெற்றுள்ளது.

5) காவேரி கல்யாணம் M. No. 683, 699 என்ற எண்கள் உள்ளவை 1923ல் படி எடுக்கப் பெற்றுள்ளது. பிரதி இரண்டு உள்ளன.

சோழர் காலத்தில் 'சரஸ்வதி பண்டாரம்' என்ற பெருமையுடன் விளங்கிய தஞ்சை சரசுவதி நூலகமான இச்சுவடிகள் காப்பகத்தில் ஓலைச்சுவடிகள் 20,000-க்கு மேற்பட்டவை உள்ளன. மற்றும் பிற்காலத்து காகிதச்சுவடிகளும் உள்ளன. கிரந்தம் தமிழ், தேவநாகரி, நந்திநாகரி, தெலுங்கு, மராத்தி ஆகிய மொழி எழுத்துக்களைக் கொண்ட சுவடிகளும், மிகச் சில கன்னடம், மலையாளம், ஒரியா மொழிச் சுவடிகளும் உள்ளன.

ஓலையிலும், காகிதத்திலும் படைப்புநூல்களை எழுதி வைத்துப் பாதுகாக்கப் பெற்றுள்ள இந்நூலகத்தில் தமிழ்ச் சுவடிகள் மிகவும் குறைவாகவே உள்ளன. இலக்கியம், இலக்கணம் மருத்துவம், சோதிடம் ஆகிய துறைகளில் இயற்றப் பெற்றவை. நான்காயிரத்துக்கு உட்பட்ட எண்ணிக்கையில் உள்ளன.

ஓலைச் சுவடிகளில் உள்ளவை கிரந்தம், தெலுங்கு, தமிழ் ஆகிய மூன்று மொழிகளிலும் உள்ள நூல்களாகும்

இவ்வைந்து தமிழ் இசை நாட்டிய நாடகப்படைப்பு நூல்கள், தமிழ் எழுத்தில் எழுதப் பெற்ற சுவடிகள் இந்நூலகத்தில் காணப்பெறாமைக்கு யாது காரணம் என்று அறியமுடியவில்லை.

தமிழ் நாடகங்களை இயற்றிய தமிழ்ப்புலவர்கள், தமிழ் எழுத்தில் எழுதாமல் தெலுங்கு எழுத்தில் எழுதினார்கள் என்று கூறமுடியாது. யாரும் நினைத்துப் பார்க்கவும் முடியாது.

தமிழ்மொழியில் இயற்றப்பெற்ற நாடகப்படைப்பு நூல்களை தெலுங்கு எழுத்தில் எழுதிவைத்திருக்கும் சுவடிகளே நமக்குக் கிடைத்திருப்பது வியப்புக்குரியதாகும். எனினும் 1684-ல் 17ஆம் நூற்றாண்டில் தஞ்சையில் அரசுக் கட்டிலில் அமர்ந்த மராட்டிய மன்னன் இரண்டாம் சகசியின் காலத்துத் தமிழ்ப் படைப்பு நூல்களான இந்நாடகங்களை, நாம் பெறுவதற்கு உறுதுணை செய்துள்ளன தெலுங்கு லிபிச் சுவடிகள்.

தமிழ்ப் புலவர்களை ஆதரித்து, தமிழ் இசை நாட்டிய நாடகங்களை, இயற்றச் செய்த மராட்டிய மன்னன் சகசியின் காலத்தில், தமிழ் எழுத்து வடிவத்தில் இந்நாடக ஓலைச்சுவடிகள் இந்நூலகத்தில் இடம் பெற்றிருக்க வேண்டும் என்பதில் ஐயமில்லை.

**காப்பீடு புத்தகம்**

தமிழ் இசை நாட்டிய நாடகப் பாடல்களை தெலுங்கு எழுத்தில் சுவடிகளில் எழுதியிருப்பதைப் பற்றி, அறியும் போது, எழுதியவர் தெலுங்கு மொழிப் பயிற்சியில் நன்கு திறமை உள்ளவர் என்பதும் தெரிகிறது. காரணம், தமிழின் வடிவம் சிதையாமல் எழுதியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. இவ்வுண்மையை, காப்பீடு புத்தகத்தைப் படித்துப் பார்க்கும் போது அறியமுடிகிறது.

இந்நாடகச் சுவடிகள் தெலுங்கு எழுத்து வடிவத்திலாவது கிடைத்தனவே என்று நாம் மகிழ்ச்சி அடைகின்றோம்.

சில குறைகள், காப்பீடு புத்தகத்தில் காணப்பெறுகின்றன என்பதும் குறிப்பிட வேண்டியதாகும். தெலுங்கு எழுத்தில் தமிழ் எழுத்துக்களை எழுதும் போது, 'ழ' கரம் வரும் இடங்களில் 'ள'கரம் எழுதப் பெற்றுள்ளது. 'ே' இரட்டைக் கொம்புக்

குறியை 'ெ' ஒற்றைக் கொம்புக் குறியாகவும் 'ளை' என்ற எழுத்தை 'லை' என்றும் 'செ' என்ற எழுத்தைச் 'சை' என்றும் 'மு' என்ற எழுத்தை 'மொ' என்றும் 'கு' என்ற எழுத்தை 'கி' என்றும் எழுதப்பெற்றுள்ளது.

'என்று' என்ற சொல்லை 'எண்டு' என்றும் எழுதப் பெற்றுள்ளது. மற்றும் ஒற்றெழுத்துக்கள் வேண்டாத இடங்களில் மிகுதியாக உள்ளன. சந்திகள் பிரிக்க முடியாதவாறு வரிகள் உள்ளன. எனினும் தமிழ்ச் சொற்களின் வடிவங்களை மாற்றாமல் எழுதியுள்ள தெலுங்கு எழுத்தர்களின் மாண்புக்கு நன்றி கூறக் கடமையுடையோம்.

தமிழ் மொழியில் இசை நாட்டிய நாடகங்களின் தொன்மை மரபை அறிந்து கொள்ள, தகுதியுடையன இவ்வைந்து தமிழிசை நாட்டிய நாடகங்களாகும்.

தெலுங்கு எழுத்தில் எழுதப்பெற்ற சுவடிகளையும் தமிழ் எழுத்தில் படி எடுக்கப்பெற்ற காப்பீடு புத்தகங்களையும் ஒப்பிட்டு ஆய்வு செய்து உண்மையான வடிவத்தை நான் அறிந்து கொள்வதற்குப் பல நாட்கள் உடனிருந்து படித்து உதவியவரும், ஆந்திரம், மராத்தி மொழிகளில் உள்ள நாடக நுட்பங்களை எனக்குக் கூறியவரும், இந்நாடகங்கள் இசைப் பாக்கள் அமைப்பில் வெளியிடுவதற்கு உதவியருமான இந்நூலகத் தெலுங்கு மொழித் துறைப் புலவர் உயர்திரு N. விசுவநாதன் அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியையும் வணக்கத்தையும் தெரிவிக்கின்றேன்.

இந்நாடக நூல்களை ஆராய்ந்து வெளியிடச் செய்வதற் குரிய பணியை எனக்கு அளித்தவர் பெரும்புலவர், இந்நூலகச் செயலர் காலம் சென்ற உயர்திரு வடிவேலன் அவர்கள் ஆவார் அன்னாருக்கு என் அஞ்சலி உரித்தாகுக.

தமிழ் மொழிக்குப் பல வகைகளிலும் ஆய்வுப் பணிகள் புரிபவரும், இந்நாடகத் தொகுப்புக்கு ஆய்வு முன்னுரை எழுத அன்புக் கட்டளையிட்டவரும், இந்நூலகத்தின் இந்நாள் இயக்குனருமான பன்மொழிப் புலவர், பேராசிரியர் உயர்திரு மு. சதாசிவம் அவர்களுக்கு என் உள்ளம் நிறைந்த நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

# ஐந்து தமிழிசை நாட்டிய நாடகங்கள்

## முதற்பதிப்பின் முன்னுரை

தஞ்சை மன்னர் சரபோஜி சரசுவதி மகால் நூலகம் தன்னிடத்தே பல மொழிகளிலும் பல அரிய சுவடிகளைப் பெற்றுள்ள பெருமை உடையது.

இவ்வைந்து தமிழிசை நாட்டிய நாடகங்கள் சரசுவதி மகால் நூலகத்திலுள்ள தமிழ்ச் சுவடிகளிலிருந்து எடுத்துப் பதிப்பிக்கப்பட்டுள்ளன. இந்த நாடகங்கள் மிகவும சிறப்பு வாய்ந்தவையாகவும், அரியவையாகவும் கருதப்படுகின்றன. இவைகளில் சொற்சுவையும், பொருட்சுவையும் செறிந்துள்ளன.

1. **பூலோக தேவேந்திர விலாசம்**
2. **சந்திரிகா ஹாஸை விலாசம்**
3. **சகசி மன்னர் மீது குறவஞ்சி**
4. **விஷ்ணு சாகராஜ விலாசம்**
5. **காவேரி கல்யாணம்**

என்னும் இவ்வைந்து தமிழிசை நாட்டிய நாடகங்களே இப் புத்தகத்தில் அடங்கியுள்ளன.

இவ்வைந்து நாடகங்களும் தஞ்சையை ஆண்ட சகசி மன்னனையும் காவேரியையும் சிறப்பித்துக் கூறுகின்றன. சிறந்த இராகங்களுடன் கூடிய பாடல்களையும் இவைகள் பெற்றுள்ளதால் மக்களின் மனம் இவற்றின்பால் ஈர்க்கப்படுகிறது.

இவ்வைந்து நாடகங்களையும் திரு வ. வேணுகோபாலன் நல்ல முறையில் பதிப்பித்துள்ளார். அன்னாருக்கு எங்களது மனமார்ந்த நன்றி உரித்தாகுக.

இந்த நூலை சிறப்பாக அச்சிட்ட தஞ்சாவூர் வெற்றிவேல் அச்சக உரிமையாளருக்கு எங்கள் நன்றி உரித்தாகுக.

இந்த நூலை வெளியிட நூல் வெளியிட்டு மான்யம் வழங்கிய தமிழ்நாடு அரசிற்கு நாங்கள் என்றென்றும் நன்றிக் கடன் உடையவர்களாவோம்.

இந்நூல் சிறந்த முறையில் வெளிவர உதவிய சரசுவதி மகால் நூலக அலுவலர்கள் அனைவருக்கும் எங்களது மனமார்ந்த நன்றி.

**D. கங்கப்பா, I. A. S.,**
மாவட்ட ஆட்சியரும்
தஞ்சை மன்னர் சரபோஜி சரசுவதி மகால்
நூலக நிர்வாகக் குழுத் தலைவரும்

தஞ்சாவூர்
11—1—1990

# சகசி மன்னன்

தமிழ் இசை நாட்டிய நாடகங்கள் 17-ஆம் நூற்றாண்டின் இறுதியில் தஞ்சையில் மராட்டிய மன்னனாக அரசு கட்டிலில் அமர்ந்த இரண்டாம் சகசியின் காலத்தவை இம்மன்னன் கி. பி. 1684 முதல் கி. பி. 1712 வரை தஞ்சையில் ஆட்சி புரிந்தவன்.

மராட்டிய மன்னனான சகசி, தஞ்சையில் ஆட்சிபுரிந்த காலத்தைப் பொற்காலம் எனலாம். மராட்டிய மொழியைத் தாய்மொழியாகக் கொண்ட இம்மன்னன் பன்மொழிப் புலவன் என்றும், சரித்திரம் கூறுகின்றது.

இம்மன்னன் தமிழ்மொழியில் மிகுந்த ஈடுபாடு கொண்ட காரணத்தாலும், தமிழ்மக்களின் பழமைக் கலாசாரத்தை நன்கு அறிந்து கொண்டதாலும், தமிழ் இசை நாட்டிய நாடகங்களை, தமிழ்மரபு முற்றுமுணர்ந்த புலவர்களைக் கொண்டு இயற்றச் செய்தவன் என்பதை அறியமுடிகிறது.

இத்தமிழ் நாடகங்களை இயற்றச் செய்வதற்கு முன் உதாரணங்களாக, சான்றுகளாக 'தமிழ் நாடகப் பாக்கள்' இருந்திருக்க வேண்டும் என்று எண்ணமுடிகின்றது. ஏனெனில், தமிழில் இயல், இசை, நாடகம் என்ற முத்துறைகளிலும் ழமையில் பல நூல்கள் இருந்து மறைந்தன என்ற செய்தியை, தொல்காப்பிய உரையாசிரியர்களான பேராசிரியர், நச்சினார்க் கினியர், இளம்பூரணர் ஆகியோரும், சிலப்பதிகார அரும்பத உரையாசிரியர், அடியார்க்கு நல்லார் ஆகியோரும் பல செய்தி களைக் கூறியிருப்பதை, தமிழறிஞர்கள் நன்கு அறிவர். தமிழிசை நாட்டிய நாடகம் பற்றி ஓரளவு ஆய்வு செய்து, இந்நூலக வெளியீடான அதிரூபவதி கல்யாணம் என்ற நூலின் ஆய்வு முன்னுரையில் எழுதியுள்ளேன். [அதிரூபவதி கல்யாணம் பக். 1-42].

எனவே தமிழ் மொழியின் பழமை மரபு வழியே இயற்றுப் பெற்றவையே இவ்வைந்து தமிழிசை நாட்டிய நாடகங்களும் என்பதில் ஐயமில்லை.

தஞ்சை நகரைத் தலைநகராகக் கொண்டு கி.பி. 850 முதல் கி.பி. 1300 வரை ஆட்சிபுரிந்தவர்கள் சோழமன்னர்கள்.

கி.பி. 1535 முதல் கி பி 1675 வரை ஆட்சி புரிந்தவர்கள் ஆந்திர நாயக்க மன்னர்கள். இடைப்பட்ட 235 ஆண்டுகள் மன்னராட்சியின் இருண்டகாலம் எனலாம் சோழர்கள் இக் காலத்தில் தாழ்வுற்று ஆங்காங்கே குறுநில மன்னர்களாக வாழ்ந்திருக்கிறார்கள். தஞ்சையிலும் பெயரளவில் சோழர்குலம் வாழ்ந்துள்ளது.

கி.பி. 1675 ஆந்திர நாயக்கமன்னரின் ஆட்சி வீழ்ச்சியுற்ற பின், 1676ல் மராட்டியர் ஆட்சி தஞ்சையில் ஏற்பட்டது. மராட்டிய ஆட்சியைத் தஞ்சையில் துவக்கிய முதல் மன்னன் ஏகோசி என்ற வெங்காசி இம்மன்னன் 1683 வரை ஆட்சி புரிந்தான். கி.பி. 1684 ல் ஏகோசியின் மூத்த புதல்வன் இரண்டாம் சகசி தஞ்சையில் ஆட்சிப் பொறுப் பேற்றான் இரண்டாம் புதல்வன் சரபோசி என்பவன் குடந்தையை அடுத்த சாகசிக் கோட்டையிலும் மூன்றாம் புதல்வன் துக்கோசி என்பவர் மன்னார்குடியிலும் ஆட்சிபுரிந்தான்.

இவ்வரலாறு, சரித்திரக் கண்ணோட்டத்தில் மிக விரிவான தாகும். சகசிமன்னனின் காலத்துப் படைப்பு நூலான 'தர்மாகடதம்' என்னும் நூல் வரலாற்றை விரிவாகக் கூறுகிறது

சகசி மன்னன் 12 ம் வயதிலேயே அரசு கட்டில் ஏறியவன். அறிவாற்றாலும் போர்ப்பயிற்சியும் பெற்றவன். மதிநுட்பம் மிக்க 'பாலாஜி' என்பவரை அமைச்சராகக் கொண்டு சிறப்புடன் ஆட்சி புரிந்தவன். [K R,S மராட்டியர் வரலாறு பக்28]

இம்மன்னன் காலத்தில் மதுரை நாயக்க மரபில் 'ராணி மங்கம்மாள்' ஆட்சி புரிந்தாள். இம்மன்னனின் ஆட்சிக் காலத்தில் மாவீரம் படைத்த மறவர்கள் மன்னரான ராமநாதபுரம் சேதுபதி தஞ்சையுடன் நட்புறவு கொண்டு வாழ்ந்தனர்.

தஞ்சைவள நாட்டின் பெரும்பகுதியைச் சகசி மன்னன் ஆட்சி புரிந்தான். சோழ மரபு, நாயக்க மரபு, ஆட்சியைத் தொடர்ந்து மராட்டிய ஆட்சியைச் சீரும் சிறப்புடன், பழமை மரபைப் பாதுகாத்த பெருமையுடையவன் இம்மன்னன்.

இலக்கியம், இசை, நாட்டியம், நாடகம் ஆகிய துறைகளில் புலவர்கள், அறிஞர்கள் பலரையும் ஆதரித்துப் புகழ் பெற்றவன்; சிறப்பாக ஆன்மிக நெறியில் ஈடுபட்டவன், பல ஆன்மிகப் பெரியோர்களின் தொடர்பு கொண்டு, யோகியைப் போல் வாழ்ந்தவன்.

சகசியின் புகழைப் பரப்பும் நூல்கள் பல. 'தஞ்சை நகரைப் புதுப்பித்தவர். அறச்சாலைகள் பலவற்றை ஏற்படுத்தியவர். அரண்மனையின் பாதுகாப்பில் இருந்த வைத்தியசாலைக்கு அராபிய நாட்டிலிருந்து, வைத்திய நிபுணர்களைத் தருவித்து மருத்துவத்துறையை மேம்படுத்தியவர். நீதி நிர்வாகத் துறைகளை ஏற்படுத்தியவர். நீதிமன்றங்களை நிறுவியவர்' என்று அறிஞர் K. R. சுப்பிரமணியம் அவர்கள், சான்றுகளுடன் தம் மராத்தியர் வரலாற்றில் குறிப்பிடுகின்றார். (Maratha principolity of Thanjavur p: 29)

சகசிமன்னன், தமிழ், தெலுங்கு, மராத்தி, சமஸ்கிருதம் ஹிந்துஸ்தானி ஆகியமொழிகளில் புலமை கொண்டவன்: இவ்வைந்து மொழிகளிலும் தாமேனக்குள்ள புலமையையும், அறியச்செய்து 'பஞ்சபாஷாவிலாசம்' என்ற நாடகத்தை இயற்றிய பெருமைக்குரியவன். கலைவளர்ச்சி, மொழிவளர்ச்சி, கலாசாரவளர்ச்சி, பக்தி நெறிவளர்ச்சி ஆகியதுறைகளில், தஞ்சைவளநாட்டில் பெரும்பணி புரிந்து புகழ் பெற்றமன்னன் சகசி எனலாம். அனைத்துமொழிப் புலவர்களுக்கும் அறிஞர்களுக்கும் சம்மானம், மானியம் அளித்தவன் இம்மன்னன். இம்மன்னனுடைய அவையில் வீற்றிருந்த புலவர்களுக்கும் அறிஞர்களுக்கும் எல்லை இல்லை. இம்மன்னனின் அவை ஒரு பல்கலைக்கழகம் போல் புகழ்பெற்றிருந்ததை, இம்மன்னன் காலத்துப் படைப்புக்களே பறை சாற்றுகின்றன.

இம்மன்னன் சிறந்தபன்மொழிப்புலவன் என்பது மட்டுமின்றி, முப்பதுக்கு மேற்பட்ட நாடகங்களையும் எழுதியவன்

என்பது குறிப்பிடத்தக்கது. இம்மன்னன் காலத்தில், பெரும் புலவர்கள் பலரும் தமிழ், தெலுங்கு, மராத்தி, வடமொழி ஆகியமொழிகளில் நாடகம், இசை, வேதாந்தம் ஆகியதுறை களில் நூல்களை இயற்றியிருக்கிறார்கள்.

இம்மன்னர், 500க்கு மேற்பட்ட கர்நாடக இசைப்பாக்களை பலவேறு ராகம், தாளம் கொண்டவையாக இயற்றியுள்ளார். இம்மன்னர் இயற்றிய நாடகங்களில் புகழ் பெற்றவை சங்கர பல்லகி சேவாபிரபந்தம், விஷ்ணு பல்லகி ஸேவாபிரபந்தம் என்பவை, இவை, பல்லக்கு நாடகம் என்று புகழப்பெறும்.

ஐந்து தமிழிசை நாட்டிய நாடகங்களில் ஒன்றான காவேரி கல்யாணம் என்பது இம்மன்னன் இயற்றியதே. 'காவேரி கல்யாணம்' என்ற பெயரில் ஆண்களே, பக்தி மார்க்கத்துடன் நடிக்கும் 'பாகவதமேளா' மரபு வழியில், தமிழ்மொழியில், மராட்டிய சகசி மன்னன் இயற்றியிருப்பதைப் பார்க்கும் போது இம்மன்னனின் தமிழ்ப்பற்றைப் பெரிதும் பாராட்டவேண்டும். சகசி மன்னனே இந்நாடகத்தை இயற்றியவன் என்பதை இந்நாடகச் சுவடியில், சூத்திரதாரனின் சந்திவசனத்தில் பக் 206ல் காணலாம். "காவேரி சாகர கல்யாணம் தமிழால் பாட" என்ற காப்புச் செய்யுளை அடுத்து, "இந்தப்படிக்குச் சகசி ராசப்பிரணீதமான காவேரி கல்யாணம், என்கிற நாடகத்திலே" என்ற வரிகள் காணப்படுகின்றன.

இந்நாடகத்திற்குக் காவேரி சாகர கல்யாணம். என்ற பெயர் சகசி மன்னனால் கூறப்பெற்றிருப்பதும் குறிப்பிடத்தக்கது.

இம்மன்னனின் அவையில், பேரறிஞர்கள், பன்மொழிப் புலவர்கள், நிறைந்திருந்தார்கள் என்பது சிறப்புக்குரியதாகும். 46 வடமொழிப்புலவர்களுக்கு, திருவியனூர் என்ற திருவிநல்லூர் கிராமத்தை வரியில்லாத இனாம் கிராமமாக மானியமாக அளித்து, அவர்களைக் கொண்டு பலநூறு அரிய படைப்பு நூல்களை இயற்றச்செய்த மன்னன் சகசி. அந்தக் கிராமத்தை 'சகசிராசபுரம்' என்றும் அழைத்தார்கள். 46 புலவர்களில் தலைமையானவர் ஸ்ரீதர வேங்கடேசர் என்ற மகானாவர்; இக்கிராமத்தில் இம்மன்னனின் காலத்தில் விளங்கியவரே

சதாசிவப் பிரும்மம் என்ற மகான் ஆவர். தஞ்சை மன்னருடன் நெருங்கிய தொடர்பு கொண்டவர். மற்றும் ஆன்மிகப்பெரியா ரான பாஸ்கரராயர், போதேந்திர சரஸ்வதி, பரம சிவேந்திர சரஸ்வதி ஆகிய துறவிகளும் ஆவர்.

ஸ்ரீ தரவேங்கடேசர், இம்மன்னரின் வரலாற்றையும் புகழையும் 'ஷாஹராஜவிலாசம்' என்ற பெயரில் நூல் இயற்றி, அரிய செய்திகளை வெளியிட்டுள்ளார்; 'இம்மன்னனின் பன் மொழிப் புலமை பல்கலை வளர்த்த சிறப்பு, மதுரையை அடக்கி ஆட்சி புரிந்தது, காசிராமேசுவரம் சென்றது, சோழன் கரிகாலனைப் போல் புகழ் பெற ஆட்சி புரிந்தது, முகலாயரை எதிர்த்து வெற்றி கொண்டது' ஆகியவை அரிய செய்திகள் (K.R S. பாராட்டிய வரலாறு பக்கம். 30). இம்மன்னர் காலத்து அமைச்சர்களான திரியம்பகராயமகி,பகவந்தராய மகி என்போர், அமைச்சர் மட்டுமின்றி அரிய புலமை சான்றவர்கள் என்பதும் அவர்கள் இயற்றிய நூல்களால் அறியலாம்.

'ஆந்திரபாணினி' என்று புகழ்பெற்ற சேஷாசல பண்டிதர், இம்மன்னனின் பல சிறப்புக்களையும் எடுத்துக்கூறி 'ஷாஹராஜ கல்யாணம்' என்ற நூலை இயற்றியுள்ளார்.

கிரிராஜகவி என்பவர், தாம் இயற்றிய 'ரதிகல்யாணம்' என்ற நூலில், சகசிமன்னன் ஔரங்கசீபுடன் பொருது வெற்றி கண்டதைப் புகழ்ந்து போர்ப்பரணியாகச் செய்திகளைக் கூறுகிறார்.

இம்மன்னனின் வரலாற்றுச் சிறப்புக்களை நேரில் கண்டவாறு புலவர்களால் இயற்றப்பெற்ற நூல்கள், தர்மவிசய சம்பு, போசல கோசலீயம், இராசமோகனக் குறவஞ்சி ஆகியவை யாகும். சிறப்பாக மேற்கண்ட நூல்கள், வரலாற்றுச் சான்று களாகக் கருதத்தக்கவை. இம்மன்னனின் பக்தி நெறியையும், நாட்டில் தர்மம் தழைத்திருக்கப் பெரும்தொண்டு செய்தவன் என்பதையும் இந்நூல்கள் விரித்துரைக்கின்றன.

இவ்வைந்து தமிழிசை நாட்டிய நாடகங்கள் அதிரூபவதி கல்யாணம், தியாகேசர் குறவஞ்சி ஆகிய தமிழ்ப்படைப்புக் களையல்லாமல், தனி இசைப்பாடல்களும் இம்மன்னன் காலத்துத் தமிழ்ப்படைப்புக்கள் எனலாம்.

மற்றும் தஞ்சை நாயகன் வண்ணம், (நெ. 345) வீரராகவ வண்ணம் (நெ. 347), கும்பகோணப்புராணம் (நெ. 489) நாராயண சதகம் (நெ. 165) செண்டலங்காரன் வண்ணம், செண்டலங்காரன் விறலிவிடுதூது ஆகியவை இம்மன்னன் காலத்துத் தமிழ்ப் படைப்பு நூல்கள். சகசியின் காலத்தில். தஞ்சையில் தமிழ்மொழி வளர்ச்சி பெற்ற சிறப்பை மேற் கண்ட நூல்களைக் கொண்டு உணரலாம்.

நாயக்க மன்னர்களை அடுத்துத் தஞ்சையில் ஆட்சி புரிந்தவர் கள் மராட்டிய மன்னர்கள், மராட்டியர்களுக்குத் தாய்மொழி மராட்டியாக இருந்தது. நாயக்கமன்னர்காலத்தில் தெலுங்கு மொழியே அவர்களுக்குத் தாய்மொழி நாயக்கர், மராட்டியர் ஆட்சி புரிந்த தஞ்சை வளநாட்டில் மக்கள் மொழி தமிழ்.

இந்நிலையில் தமிழ் மொழியின் வளர்ச்சி இக்கால எல்லையில் குறைந்திருப்பதில் வியப்பில்லை. நாயக்கமன்னர் காலத்தில் தமிழ் மொழி வளர்ச்சி பெற்றதற்குச் சான்றில்லை; நாயக்கர் காலத்துக்குப் பின்பும் மராட்டியர் காலத்திலும் தெலுங்கு மொழியின் செல்வாக்கு குறையவில்லை; மராட்டிய மன்னர்களும் தெலுங்கு மொழிக்கு ஊக்கம் அளித்தனர்; காரணம், நாயக்கர் ஆட்சி வீழ்ச்சியுற்றாலும், அதனை அடுத்த மராட்டியர்காலத்தில், நாயக்கர் காலத்து ஆட்சியிலிருந்த நிருவாக நலத்துக்காகத் தெலுங்கு மொழியையும் ஆதரித் தார்கள். மராட்டியர் காலத்தும் தெலுங்கு மொழி செல்வாக்குடன் இருந்ததால் தான், தமிழ் நாடகச் சுவடிகள் தெலுங்கு மொழியில் எழுதி வைக்கப் பெற்றுள்ளன என்பதும் அறியலாம்.

இக்கால எல்லையில், தமிழ் மொழி வளர்ச்சிக்காகத் திருவாரூர், திருவாவடுதுறை, தருமபுரம், சூரியனார் கோயில் போன்ற சைவ ஆதீனங்கள் தமிழ்மொழி வளர்ச்சிக்காகப் பல முயற்சிகளைச் செய்து கொண்டிருந்தார்கள் என்பது குறிப்பிடத் தக்கது. தமிழ்ப் புலவர்களை ஆதரிக்க, தமிழ்க் குறுநில மன்னர் களும் வள்ளல்களும் ஆங்காங்கே ஓரளவு இருந்தார்கள் என்பதும் புதுக்கோட்டையரசு, சேதுபதி போன்றவர்கள் தமிழ் மொழி

வளர்ச்சிக்காக ஓரளவு புலவர்களை ஆதரித்தார்கள் என்பதும் புலனாகின்றது.

தெலுங்கும் மராட்டியமொழியும் சிறப்பிக்கப் பெற்றகால எல்லையில் தான் 17ம் நூற்றாண்டுத் தமிழ்ப் புலவரான, படிக்காசுப்புலவர் மனம் நொந்து பாடியிருக்கிற பாடல் உள்ளத்தை உருக்குகின்றது.

''கனத்த சிராப்பள்ளிதனிலே வடுகக் கூத்து
கட்டியாளுவதாச்சுத் தஞ்சாவூரோ
முனைத்த மராட்டியக்காடு மிஞ்சிப்போச்சு
தமிழ்க் கவிதை கேளார்
இனித் தமிழுக்கு அரியலூர் என்றிருந்தோம்
இங்கும் சம்பளம் குறைந்தால் என்செய்வோமே''

இந்தச் சூழ்நிலையில் தான் மராட்டிய மன்னர் திலகமான சகசி தமிழ்ப் படைப்பு நாடகமும் இயற்றினான்; தானும் தமிழ் பயின்றான். தமிழ்ப் புலவரை ஆதரித்தான்- தமிழில் இசை நாட்டிய நாடகப்படைப்பு நூல்களை இயற்றச் செய்தான்: இம் மன்னன் காலத்தில் தமிழ்மொழி, தஞ்சையில் வளம்பெற்றது.

சகசி மன்னன் காலத்து அவையில் தமிழ்ப்புலவர்கள் முத்துக் கவிஞர், வாசுதேவகவி, திருச்சிற்றம் பலக் கவிராயர், இராமபாரதி, அரசூர் சொக்கப்புலவர். ஆபத்சகாய பாரதி, சப்தரிஷி ஆகியோராவர்.

மற்றும் இம்மன்னன் காலத்துத் தமிழ்ப்புலவர்கள், திருவாரூர் வைத்தியநாத தேசிகர். சீர்காழி அருணாசல கவிராயர் ஆகியோர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

தமிழ் வளர்த்த மராட்டிய மன்னர்குல திலகமான சகசி மன்னனைத் தமிழ் கூறும் நல்லுலகம் பாராட்டுவது தலையாய கடமையாகும்.

வெளியிடப் பெறும் தமிழிசை நாடகங்கள் ஐந்தும் சகசி மன்னனின் தமிழ்ப்பற்றைத் தமிழருக்கு உணர்த்துவது மட்டு மின்றித்தமிழ் இசை நாட்டிய நாடகமரபு உள்ளவரை இடம் மன்னனின் புகழ் குன்றின் மீதிட்ட விளக்கென ஒளி வீசம் எனலாம்.

ஆய்வு முன்னுரை

# ஐந்து நாடகங்களின் அமைப்பு முறை

இந்நாடகங்களில் மூன்று நாடகங்களுக்கும் **விலாசம்** என்ற பெயர் கொடுக்கப்பெற்றுள்ளது. பூலோக தேவேந்திர விலாசம் சந்திரிகா ஹாசை விலாசம், விஷ்னுசாகரராஜ விலாசம் என் மூன்று நாடகங்கள்.

குறவஞ்சி நாடக அமைப்பால் சகசி மன்னனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டது ஒரு நாடகம்.

காவேரி கல்யாணம் என்ற நாடகம், **கல்யாணம்** என்ற பெயரில் அமைந்தது.

**விலாசம், கல்யாணம்.** விசயம், சரிதை கல்யாணம் என்பன போன்ற பெயரமைப்பில் பழமை நாடகங்களுக்குப் பெயர் அமைக்கும் மரபு உள்ளது. வடமொழியிலும் இத்தகைய பெயரமைப்புக் கொண்ட நாடகங்கள் உள்ளன.

விலாசம் என்பது, நாடகப் பாட்டுடைத்தலைவனின் புகழ் களை விரித்துச் சிறப்பித்துக் கூறுவதாகும்.

காவேரிக்கும், கடலரசனுக்கும் திருமணம் நிகழ்வதாக, கற்பனைச்சிறப்புடன் அமைந்தது காவேரி **கல்யாணம்.**

தமிழ் மரபு வழியே குறவஞ்சி என்ற பெயரில், சகசி மன்னனைப் பாட்டுடைத்தலைவனாகக் கொண்டு இயற்றப் பெற்றது சகசி குறவஞ்சி நாடகமாகும்.

**இசையமைதி பெற்ற நாடகப் பாக்கள்**

சந்திரிகா ஹாசை விலாசத்தில், இராகம், தாளங்கள், காணப்பெறவில்லை. எனினும் முன்னதைப் போன்றே

இசையமைதி பெற்றவை ஐந்து தமிழ் இசைநாட்டிய நாடகப் பாக்களும் கதைகரு, அவிநயம் நிறைந்த இசைப்பாடல்களாகும்; பூலோக தேவேந்திர விலாச நாடகத்தில் 22 இராகங்கள் தாளக்குறிப்புடன் உள்ளன.

**நாடகக் கதைகளில் ஒரு புதுமை**

தமிழ்ச்சுவடிகள் காணப்பெறாத நிலையில் தெலுங்கு மொழியில்படி எடுத்தவர்கள், குறிக்காமல் இருந்துவிட்டனர் என்றே கருத முடிகிறது.

அனைத்து நாடகங்களிலும், தோடயமங்களம் நாட்டை ராகம், ஜம்பைதாளம் என்பது காணப்படுகின்றது.

சகசி மன்னன் மீது பாடப்பெற்ற குறவஞ்சி நாடகத்தில் 12 ராகங்கள் தாளக்குறிப்புடன் உள்ளன. மற்ற இசைப்பாடல் களுக்குக் குறிக்கப் பெறவில்லை.

விஷ்ணு சாகராஜ விலாசத்தில் 7-ம் தருவுக்கு மட்டுமே, தோடி ராகம் என்று குறிப்பிடப் பெற்றுள்ளது. மற்ற இசைப் பாடல்களுக்குக் காணப்பெறவில்லை.

மற்றும் உள்ள நாடகச்சிறப்பு என்னவெனின் பூலோக தேவேந்திர விலாசத்தில், பாட்டுடைத் தலைவன் சகசிமன்னன். இம்மன்னனை, **காம்போச நாட்டு** மன்னன் மகள் சுசீலை மணந்தாள் என்பது.

சந்திரிகா ஹாஸை விலாசத்தில், சகசி மன்னனை, **மாளவ நாட்டு** மன்னன் மகள் சந்திரிகா ஹாஸை மணந்தாள் என்பது.

விஷ்ணு சாகராஜ விலாசத்தில், சகசி மன்னன் விஷ்ணுவின் அவதாரம் என்றும், அம்மன்னனை, **கலிங்கராஜனின்** பெண்கள் இருவர் மணந்தனர் என்பதும் கூறப்பெறுகின்றன. கலிங்கராசனின் பெண்கள் இருவரும் பூதேவி சீதேவியின் அவதாரம் என்றும் கூறப்படுகிறது.

இவ்வாறு, காம்போச நாட்டுமன்னன், மாளவநாட்டு மன்னன், கலிங்கநாட்டு மன்னன் ஆகியோர் தம் புதல்வியருக்குத்

தஞ்சை மன்னனான சகசியைத் தேடிவந்து மணம் புரிவிக்கிறார்கள் என்பது கற்பனையேயானாலும், சகசியின் புகழை ஏற்றம் பெறக் கூறுவதற்குக் கவிஞர்கள் எடுத்துக்கொண்ட நாடகக் கதையமைப்பாகும்: மன்னர்கள் யாவரிலும் மேம்பட்ட தகுதியுடையவன் சகசி என்பதைக் கூற, கவிஞர்கள் இவ்வாறு கதைப் பாங்கை அமைத்துள்ளார்கள்.

சகசியின் அழகு கல்விச்சிறப்பு, பன்மொழிப்புலமை பல்கலைப்புலமை, மாவீரம், இறைபக்தி, கொடை, முதலிய அரிய தன்மைகளை, கதைமாந்தர்களின் வாயிலாக எடுத்துக் கூறியிருக்கும் மாண்பு நாடகப் பாங்கைச் சிறப்பித்துக்காட்டுகிறது என்பதை உணரலாம்.

## தமிழ் நாடகங்களில் வடமொழியும் தெலுங்குமொழியும்

ஐந்து தமிழ் நாடகங்களிலும் துவக்கத்தில் தோடயமங்களம், விநாயகர் தருவு **வடமொழியில்** உள்ளன. மங்களம், என்றபாடல் **தெலுங்கு** மொழியில் உள்ளது. நாடகத்தின் இறுதியில் **சோபனப்** பாடல் தமிழ்மொழியிலேயே உள்ளது.

விஷ்ணுசாகராஜ கல்யாணத்தில் 24-ம் தருவு தெலுங்குப் பாடலாகவே உள்ளது. இப்பாடல் நகைச்சுவை கொண்டதென்று தெலுங்கு மொழிப்புலவர் கூறுகிறார்.

சகசி மன்னன் அவையில், தெலுங்குமொழியின் செல்வாக்கு மறையாமல் நிலைபெற்றிருந்தது என்பதை அறியலாம்.

## அவிநயத்தால் நடிக்கப் பெற்றவை இந்நாடகங்கள்

இந்த நாடகங்கள் நாடக அரங்கில் நடிக்கப் பெற்றவையே. தமிழ்ப் பாக்கள் ஒரு கேள்வி வடிவத்திலுள்ள இந்நாடகங்கள் நடிக்கப் பெற்றவையா என்பது 17ம் நூற்றாண்டின் இறுதிக் காலத்தில், நாயக்க மன்னர்களின் தஞ்சை ஆட்சி வீழ்ச்சி பெற்ற சமயத்திலே, மராட்டிய மன்னர் ஆட்சியில் தமிழ் இசை நாட்டிய நாடகங்கள் இசைப் பாக்களைக் கொண்டு அவிநயித்து, நடிக்கப்பெற்றவை என்பதை அறியும்போது இந்நாடகங்கள் தமிழ் நாடக ஆராய்ச்சிக்குப் பெருந்துணை

செய்யும் என்பதில் ஐயமில்லை. இப்படைப்பு நாடகங்கள் இசை நாட்டிய மரபுடையவை என்பதை அறியவேண்டும்.

இந்நாடகங்களில் விரிவாக, நுட்பத்துடன் சூத்திரதாரனாய்க் கூறப்பெற்ற சந்தி வசனங்களில் சூத்திரதாரன் கூற்றாக அமைந்த அனைத்து வசனங்களிலும் நாடகம் நடிக்கப் பெற்ற தாகவே காணப்பெறுகிறது. எடுத்துக்காட்டாக, பூலோக தேவேந்திர விலாசத்தைப் பார்க்கலாம்.

தோடய மங்களம், மங்களம் இரண்டும் நாடக அரங்கில் பாடிய தேவதாப்பிரார்த்தனை எனக் குறிப்பிடப் படுகிறது. விளக்கமாக அதனை அடுத்து, சூத்திரதாரன், கூற்றாக, “இந்தப் படிக்குச் சகல தேவதா பிரார்த்தனை பண்ணினதை தனந்தரத்திலே காப்புக் கேட்பிக்கின்ற மார்க்கம்” என்று கூறப்படுகிறது

அதன்பின் காப்புச் செய்யுள் நாடக அரங்கில் பாடப் பெறுகிறது. அதன்பின், சூத்திரதாரன் கூறுகிறான்:

“இந்தப்படிக்குக் காப்புக் கேட்பிந்த தனந்தரத்திலே **பூலோக தேவேந்திர விலாசம் என்கிற நாடகத்திலே** சகல விக்கினங்களும் நிவாரணம் பண்ண விக்கினேசுவரனைப் பிரார்த்தனை பண்ண விக்கினேசுவரன் வருகிற மார்க்கம் இதனைத் தொடர்ந்து விக்கினேசுவர் அரங்கில் காட்சி அளிக்கிறார். பின்னர் நாடக அரங்கில் சூத்திரதாரன் முன் வந்து அடுத்தடுத்து நாடக நிகழ்ச்சிகளைக் கூறுகின்றான்

விக்கினேசுவரன் வந்த காட்சிக்குப் பின்னர், கட்டியக்காரன் அரங்குக்கு வருவதை அறிமுகம் செய்துவைக்கிறான் சூத்திரதாரன் “இந்தப்படிக்கு விக்கினேசுரன் வந்து சகல விக்கினங்களும் நிவாரணம் பண்ணின தனந்தரத்திலே இரதிதேவி சிங்காரன் வனத்துக்கு வருகிறாள் என்று சகல சனங்களுக்கும் எச்சரிக்கக் **கட்டியக்காரன், வருகிற மார்க்கம்”** என்று சூத்திரதாரன் கூறுகிறான். சிங்காரவனம் என்பது நாடகக் காட்சி கொண்ட இடம் குறிப்பிடப்படுகிறது.

இவ்வாறு கட்டியக்காரன் வந்து எச்சரித்தபின்பு, கதைத் தலைவி ரதிதேவியின் அரங்கப்பிரவேசத்தைக் கூறுகிறான். ரதிதேவி நாடக அரங்கிற்கு வருகை தருகிறாள் என்பது.

ஐந்து நாடகங்களிலும் இவ்வாறே நிகழ்ச்சிகள் தொடர்ந்து கூறப்படுகின்றன. கதைமாந்தர்களின் வருகையையும், அடுத் தடுத்து நிகழும் நிகழ்ச்சிகளையும் சூத்திரதாரன் கூறுகின்றான். இவையே சூத்திரதாரனின் **சந்திவசனமாகும்.** கட்டியக்காரன் நாடகத்தைத் **துவக்கி** வைக்கிறான்.

மேலும் சந்திரிகாஹாசை விலாசநாடகத்தில் பக் 64. சூத்திரதாரன் வசனம் அறியத்தக்கது. 14-ம் தருவு **விரகபதம்** என்ற பாடல். இப்பாடலுக்கு ஏற்பக் கதைத்தலைவி ராச கன்னிகை நாட்டிய அபிநயம் செய்து கொண்டிருக்கிறாள் என்று சூத்திரதாரன் கூறுகிறான். **'அவிநயித்து'** என்று தெளிவாகக் கூறப் பெற்றிருப்பதை அறியலாம்.

''இந்தப்படிக்கு இராச கன்னிகை **விரகம் அவிநயித்**துக் கொண்டிருக்கிற சமயத்திலே அப்புறம் கதாசம்விதானம் எப்படி என்றால் இராச கன்னிகை சிருங்காரவனத்தில் சுவாமி சேவிக்கப் போய் அநேக நேரமாயிற்று என்று இராச கன்னிகையை அழைக்கப் பாங்கி வருகிற மார்க்கம்'' என்பது பக் 71-ல், 'இந்தப் படிக்கு சித்தபுருடன் எச்சரித்து சகசி மகாராசதேவேந்திரன் சமுகத்தில் **வித்தை ஆடுகிற** மார்க்கம்''

'இந்தப்படிக்குத் தான் **ஆடின வித்தையைப்** பார்த்து சகசி மகாராசா சந்தோஷத்துடனே இருக்கும் வேளையைக் கண்டு தான் வந்த காரியம் சொல்கிற மார்க்கம்'' என்று சித்த புருடன், என்ற கதைப்பாத்திரத்தின் இயக்கம் குறித்து சூத்திரதாரன் கூறுகிறான். கட்டியக்காரன் உரையாடல் என்ற பகுதியில் பக் 245-ல் 'நட்டுவனாரே நாம் ஆடற பாடற சபையிலே இவனாரோ தெரியாது வந்திருக்கிறானே' என்பது இவ்வாறு ஆடின வித்தை, ஆடற பாடறசபை என்ற கூற்றுக்கள் நாட்டியம் இசை இரண்டையும் குறிப்பதாகும்.

இவ்வைந்து நாடகங்களிலும், இசைப் பாடல்களுக்கு இடையே சூத்திரதாரன் வசனம் என்ற சிறப்புள்ள பகுதிகளில்

நாடகக் கதைமாந்தர்களின் வருகை, இயக்கம் அடுத்தடுத்து நிகழ்ச்சிகள் நடக்கப் போவதையும், நடந்த நிகழ்ச்சிகளையும். நாடகப் பாங்கில் கூறுகின்றான் இவற்றின் நுட்பங்களை. அறியும் போது, இந்நாடகங்கள் அரங்கில் நடிக்கப் பெற்றவை என்பதும் இசைப்பாடல்களுக்கு ஏற்ப நாட்டிய அபிநயத்துடன் நடிக்கப் பெற்றவையே என்பதும் அறியலாம். எனவே தான் இந்நாடகங்களை இசை, நாட்டிய, நாடகங்கள் என்று கூறப் பெறும் தகுதியை முழுமையாக உடையன என்பது அறிய வேண்டும்.

**சந்தி வசனங்கள்**

சூத்திரதாரன் நாடகக் கதை மாந்தர்களின் இயக்கத்தைக் கூறி, நிகழ்ச்சிகளைத் தொடர்பு விடாமல் தெரிவிக்கிறான். இவை சந்தி வசனம் எனப்பெறும்.

'சந்தி' என்பது அரங்கில் நடைபெறும் நாடகத்தின் நிகழ்ச்சிகளை, முன்னும் பின்னும் கதை மாந்தர்களின் இயக்கங் களை இடையிடையே தெரிவித்தலாகும். சந்தி வசனம் நடந்ததையும் நடக்க இருப்பதையும் நடுவே தொடர்ந்து கூறி வரும், சூத்திரதாரனின் வசனமாகும்; உரைநடையாகும். உரையாடலிலேயே கதை மாந்தர் சம்பாஷணை செய்ததும் உள்ளது. சிலபகுதிகளைக் காணலாம்.

**கதைமாந்தரின் வசன உரையாடல்**

இந்நாடகங்கள் அரங்கில் நடிக்கப் பெற்றவை. இசைப் பாடல்களுக்கு ஏற்ப, கதை மாந்தர் அவிநயம் செய்வர். நிகழ்ச்சி களைத் தொடர்பறாமல், அவ்வப்போது சூத்திரதாரன் சந்தி வசனத்தில் உரை நிகழ்த்துகிறான். இசைப்பாடல்களுக்கு அவிநயம் புரிந்து நடித்தது மட்டுமின்றி, கதைமாந்தர்கள் பேசிய வசன உரையாடல்களும் சில பகுதிகள் உள்ளன. இவ்வுரையாடல்கள், 17-ம் நூற்றாண்டில் நாடக வசன நடைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

உதாரணமாக, பூலோக தேவேந்திர விலாச நாடகத்தில் பக். 38, 39-ல் ராசகன்னிகை சித்தபுருடனுடனும், சகசியுடனும் பேசும் சம்பாஷணை தமிழ் வசன உரையாடல் உள்ளது.

சந்திரிகாஹாஸ விலாச நாடகத்தில் பக். 54,55,56. 65, 66-ல் உரையாடல்கள் உள்ளன.

குறவஞ்சி நாடகத்திலே, சூத்திரதாரனும் சிங்கனும் உரையாடும் வசனப்பகுதி பக், 131, 132, 133, 134, 137-லிருந்து 144 வரை, உள்ள பக்கங்களிலும் காணலாம். இவ்வுரையாடல் கள், நகைச்சுவை மிக்கவை.

இவ்வகை ஐந்து நாடகங்களும், இன்பச்சுவை கொண்ட நாடகங்கள் இந்நாடகங்களில் ஓரளவு உரைநடையில் கதை மாந்தர் பேசுவதையும் காணலாம்.

நாடகங்களுக்கு, நகைச்சுவை இன்றியமையாதது என்ற கருத்தில், குறவஞ்சியிலும் விஷ்ணு சாகராஜ விலாசம் என்ற நாடகத்திலும் நகைச்சுவை உரையாடல்கள் அமைக்கப் பெற்றுள்ளன.

மற்றும் ஒரு சிறப்பைக் காணலாம். விஷ்ணு சாசராஜ விலாச நாடகத்தில், தனி இணைப்பாக, சுவைமிக்க தமிழ் உரையாடல் (சம்பாஷணை) காணப்பெறுகிறது.

சூத்திரதாரனே, நாடக அரங்கில் தலைமையானவன். வட மொழி நாடகங்களிலும், சூத்திரதாரனே தலைமையானவன். சூத்திரதாரனே நாடகத்தைச் சுவை குன்றாமல்,பார்ப்பவர்களின் செவிகளுக்கும் விழிகளுக்கும், உள்ளத்திற்கும் இன்பத்தை அளித்து நாடகக் காட்சிகளில் செய்திகளைக் கூறிக் கொண்டிருப்பவன்.

சூத்திரதாரன் நாடகத் துவக்கத்தில் **கட்டியக்காரன்** என்ற கதைப் பாத்திரத்தை, அறிமுகம் செய்து வைக்கிறான். கட்டியக் காரன் நகைச்சுவைக்காகத் தோன்றும் கதைப்பாத்திரம். நாடகத்தை முறையே துவக்கிவைப்பவனாகத் தோன்றுபவன். அவன் வேடம் ஒப்பனைப் செய்யப்பெற்றுத் தோன்றும்போது காண்பவரிடையே சிரிப்பை உண்டாக்குபவன்.

கட்டியக்காரனுடன் சூத்திரதாரன் உரையாடுகின்ற ஒரு காட்சியை, தனியே எழுதிவைத்திருக்கிறார்கள். நாடகங்கள்

எல்லாவற்றிலும் தோன்றும் கட்டியக்காரனுடன் சூத்திரதாரன் பேசும் தமிழ் உரையாடல் நகைச் சுவைமிக்கது. மேலும் 17-ம் நூற்றாண்டில், இவ்வசன அமைப்பு, அரங்கில் நடிக்கப்பெற்று நாடக உரையாடல்களாகப் பேசியவை என்பதை அறியும் போது, உரை நடை (பேச்சுநடை) நாடகத்தின் ஆய்வுக்கு எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். கட்டியக்காரனும் சூத்திர தாரனும் பேசிக் கொள்ளும் இந்தக்காட்சியை, தனியே நடிக்க லாம். எந்த நாடகத்தின் இடையேயும் நடிக்கலாம். சங்க இலக்கியத்தில் ஒன்றான கலித்தொகையில், குறிஞ்சிக் கலியில் 'கூனிகுறளன்' நாடகம் என்று ஒருபாட்டில் உள்ளது: அத்னை வீழ்க்கைப் பெருங்கூத்து, கருங்கடத்து என்று நச்சினார்க்கினியர் குறிப்பிடுகின்றார் பாடல். வடிவில் நாடகப் பேச்சாக உள்ள, அப்பாட்டு **நகைச் சுவைக்கு** எடுத்துக்காட்டு, அதனை 'நாடகம்' கூத்து என்றே நச்சினார்க்கினியர் கூறுகிறார். அதுமட்டு மன்று, கலித்தொகை, பாடல்களில் நாடகக்காட்சிகள் நாடக அமைப்பு விரிவாக உள்ளன. கலித்தொகை பற்றி ஆய்வு தனிச்சிறப்புடையது. ஈண்டு விளக்குவது மிகையாகும், எனினும் நாடகப் பாடல்கள் என்ற அமைப்பில் எடுத்துக்காட்டாகக் கொள்ளத்தக்க சான்று நூல். கலித்தொகை நகைச் சுவைக்கு எடுத்துக்காட்டாக 'கருங்கூத்தைக் கொள்ளலாம்

**சூத்திரதாரன்**

இவ்வைந்து நாட்டிய நாடகங்களின் இயக்கத்துக்கு, நாடக அரங்கில், முன் நின்று நாடகத்தை நடத்துபவன் சூத்திரதாரன், நாடகக்கலைமுற்றக் கற்றவன் மரபு அறிந்தவன் நாடகத்தை நடத்துவோன் நாடகங்களில், கதை மாந்தர்களுக்குரிய இசைப் பாடல்களுக்கும் நிகழ்ச்சிகளுக்கும் தொடர்புள்ள சந்திவசனங் களையும் சொல்பவன் மட்டுமன்று. நாட்டியம், அதனைப் பயில் விக்கும் நட்டுவாங்கம் முற்றும் தெரிந்த நாட்டியாசாரியனே ஆவான். துணை நட்டுவனார், இசைப்பாடலைப் பின்னணியில் பாடுபவர், இசைக்கருவிகள் இயக்குபவர்கள் அனைவருக்கும் சூத்திரதாரன் தலைமையானவன் இசைப் பாடல்களுக்கு ஏற்பக் கதை மாந்தர் அவிநயிப்பதையும் கண்ணோட்டமிட்டு, நாடகத்தைச் சிறப்புடன் இயக்குபவன் சூத்திரதாரன் . இசை

நாட்டிய நாடகக் கலைமுற்றக் கற்றவனை 'நடையறிபுரிவன' என்று சீவகசிந்தாமணி (பா. 672) கூறுகின்றது. சூத்திரதாரனை இந்நாடக அரங்கில் கால்களையும் இயக்கும் நடையறிபுலவன் என்பதும் அறியலாம்.

**கட்டியக்காரன்**

சூத்திரதாரனால் அறிமுகம் செய்யப்பெற்று அரங்கில் தோன்றி, அவையில் உள்ளோரைச் சிரிக்கவைத்து, நாடகத்தைத் துவக்கி வைப்பவன் அரங்கில் நாடகத் துவக்கத்தில் கதை மாந்தரில் முதன்முதலாகத் தோன்றுபவரை, அவையோர்க்கு அறிமுகம் செய்து கூறுபவன்.

கட்டியக்காரன் பூலோக தேவேந்திர விலாசநாடகத்தில் கதையைத்துவக்க அரங்கில் தோன்றுகிறான் என்று சூத்திர தாரன் கூறுகிறான்.

> "வெள்ளிப்பிரம்பும் கையில் கொண்டு
> வெள்ளைப்பல்லையும் காட்டிக் கொண்டு
> வெள்ளை நாமம் சாத்திக் கொண்டு
> குள்ளன் கட்டியக் காரன் வந்தானே"

இரதிதேவி சிங்காரவனத்துக்கு வருகிறார் என்று அவையைப் பார்த்துக் கூறிவிட்டு ஒரு புறம் அரங்கில் நிற்பவன்.

சந்திரிகாஹாசை நாடகத்தில் கட்டியக் காரனின் தோற்றம் இது.

> "வரிசையாக மெய்யில் துப்பட்டி
> வலது பக்கம் போட்டுக் கொண்டு
> கறுமை மீசை முறுக்கிக் கொண்டு
> கட்டியக் காரன் வந்தானே"
> "அடருகந்தம் பூசிக் கொண்டு
> இலங்க நாமம் சாத்திக் கொண்டு
> கடுமையாகப் பேசிக் கொண்டு
> கட்டியக் காரன் வந்தானே"

விஷ்ணு சாகராஜ விலாசத்தில் கட்டியக்காரனைப் பார்க்கிறோம்.

பட்டை நாமம் இட்டுக் கொண்டு
பட்டுத் துப்பட்டி கட்டிக் கொண்டு
கட்டியக் கோலும் ஊன்றிக் கொண்டு
கட்டியக் காரன் வந்தானே"

சகசி மன்னன் காவேரி கல்யாணத்தில் கட்டியக்காரனின் காட்சி இது.

தவள நாமம் சார்த்தி
சரிகை துப்பட்டி கட்டி
கவேர இராசேந்திரன் வாசல்
கட்டியா காரன் வந்தானே"

இவ்வாறு, கட்டியக் காரனின்தோற்றம், அவனுடைய பேச்சின் கடுமை, அவன் கையில் கட்டியக் கோல் இருந்தமை சிறப்பாகக் கூறப்படுகிறது.

தமிழ் நாடக மரபில் கட்டியக்காரன் எப்போது அறிமுகம் செய்யப் பெற்றான் என்பதை நாம் அறியவேண்டும். 17ம் நூற்றாண்டுக்கு முந்திய நாடகங்கள் பார்க்கக் கிடைத்தால் அறியலாம்.

கட்டியம் கூறுபவர் கட்டியக்காரன் சூதர், மாகதர், வைதாளிகர் போன்றவர்கள் பழமைத்தமிழ் மரபில் தொல் காப்பியத்தில் கூறப்பெறுகின்றனர் இவ்வழியில் வந்தவனே கட்டியக்காரன் எனக் கருத முடிகிறது.

கட்டியக்காரன் என்ற சொல்லாட்சி கி.பி. 15-ம் நூற்றாண்டில் வழக்கில் இருந்ததை அறியமுடிகிறது. இக்கால எல்லையில் இயற்றப் பெற்றதான சேதுபுராணத்தில் விதூ. 65-ம் பாடலிலும் திருப்புகழ் 730, கலைசைச் சிலேடை வெண்பா 45-ம் பாடல் ஆகியவற்றில் **கட்டியக்காரன்** கூறப் பெறுகிறான்.

இந்நாடகங்களுக்குரிய சந்தி வசனங்களைப் பற்றியும் உரையாடல் வசனம் பற்றியும் ஓரளவு இதுவரை அறிந்தோம்.

முத்தமிழ்க் காப்பியம் என்று போற்றப்பெறும் சிலப்பதிகாரத்தில் 'உரைபெறு கட்டுரை'யில் 'அது கேட்டு' என்று

தொடங்கும் உரைப்பாங்கை நினைவு கூறுவது இன்றியமை யாதது. கலித்தொகையிலும், இத்தகைய உரைப்பாங்கைக் காணலாம்.

தமிழ்மொழியில் உரைநடை என்பது, உரையாசிரியர்களான இறையனார் அகப்பொருள் களவியலுரைகாரர் பேராசிரியர், நச்சினார்க்கினியர், இளம்பூரணர், அடியார்க்கு நல்லார், சேனாவரையர், பரிமேலழகர் முதலிய பெரும்புலவர்களின் உரைநடைகளையே குறிப்பிடவேண்டும்.

தனியே உரைநடையில் அமைந்த பழமைப் படைப்பு கிடைக்கவில்லை. நாடகத்துறையில் தனி உரைநடையிலான பேச்சு நடையிலான படைப்பும், பழமையில் இருந்தமைக்குச் சான்று கிடைக்கவில்லை. தொல்காப்பியர் பொருளதிகாரத்தில் (சூ. 475) உரைநடையில் நான்கு வகை கூறுகிறார். "பாட்டிடை வைத்த குறிப்பினானும், பாவின்றெழுந்த கிளவியானும் பொருள் மரபில்லாப் பொய்ம்மொழியானும், பொருளொடு புணர்ந்த நகை மொழியானும் உரைவகை நடையே நான்கென மொழிப்ப என்பதில் பாட்டிடை வைத்த குறிப்புக்கு, உதாரண மாக, கலித்தொகை, சிலப்பதிகாரம் இரண்டையும் கூறுகிறார் இளம்பூரணர். இந்நாடகங்களில் கதைமாந்தரின் உரை நடையை பேச்சை ஒப்பிடலாம்.

நாடகப்பாங்கு, அமைப்புமுறை, சந்திவசனம், உரையாடல் வசனம், சூத்திரதாரன் கதாபாத்திரம், கட்டியக்காரன் கதா பாத்திரம் நாடகங்கள் அபிநயத்தோடு நடிக்கப்பெற்றது என்பது முதலானவற்றை இதுவரை அறிந்தோம்.

இனி, இந்நாடகங்கள் தருவுகளின் வகை பற்றி அறிவோம். தருவுகளின் வகைபற்றிக் கூறிய பின்னர், 'தருவு' பற்றின விளக்கமும் அறியலாம்.

இவ்வைந்து நாடகங்களும், சகசிமன்னன் காலத்தில் அரங்கில் நடிக்கப் பெற்றவை. தஞ்சை, திருவாரூர், திருவையாறு ஆகிய இடங்களில் நடிக்கப் பெற்றவை.

நாடக அரங்கில் முறைப்படி திரைகள் அமைக்கப் பெற்று இருக்கும். கதைமாந்தர்கள் ஆடைஅணி தரித்து சுண்ணக் கலவையால் ஒப்பனை செய்துகொண்டு, தகுதிக்கேற்ப அலங்கரித்துக்கொண்டு, நடிப்பதற்கு ஆயத்தமாக இருப்பார் கள். இந்நிலையில் 'உள்தருவு' என்பது பாடப்பெறும். அரங்கில் இசைக்கருவிகள், நட்டுவனார், இசைப்பாடகர் திரைக்கு மறை வில் அமர்ந்திருப்பர்.

**உள்தருவு** நாடக அரங்கின் திரைக்குப்பின், கதைமாந்தர் கள், அரங்கில் பிரவேசிப்பதற்கு ஆயத்தமாக நிற்பார்கள். கதைமாந்தர்கள் திரைக்குள் மறைந்து நிற்கும்போது, அவர்கள் அரங்குக்கு திரைக்கு வெளியே வருகிறார்கள் என்பதைத் தருவுப் பாடலைப் பாடி அறிவிப்பது உள்தருவு.

**வெளிதருவு** என்பது நாடக அரங்குக்கு, திரைக்குள்ளிருந்து வெளியே கதை மாந்தர்கள் அவிநயத்துடன் நடித்துத் தோன்று வதைப்பாடுவது.

**பிரவேசதருவு** என்பது கதைமாந்தர்களில் நாடகக் கதைத் தலைவி தலைவன் போன்றோர் அரங்கில் பிரவேசித்து அவி நயித்து வரும்போது பாடப்பெறுவதாகும்.

**சம்வாததருவு** என்பது, கதைமாந்தர் இருவர், கூற்றும் மாற்றமுமாகப் பேசும் அமைப்பைக் கொண்ட தருவு இசைப் பாடல். இவ்வைந்து நாட்டிய நாடகங்களில் காணப்பெறும் சம்வாததருவைப்போல், கலித்தொகையில் பல பகுதிகள் உள்ளன. அவை ஒப்பிடற்குரியன; கூற்றும் மாற்றமும் உள்ள தருவுப்பாடலுக்குத் தொல்காப்பியர் இலக்கணம் வகுத்துள்ளார். தொல். செய். 149இல் "கூற்றும் மாற்றமும் இடையிடை மிடைந்தும் போக்கின்றாதல் உறழ்கலிக்கியல்பே" என்ற சூத்திரத்திற்கு இளம்பூரணர், கலித்தொகை 39ஆம் பாடலை எடுத்துக் காட்டியுள்ளார். இம்மரபு, தமிழ்நாடக மரபின் சிறப்பு.

**கைவாரதருவு** என்பது, நாடகக்கதைத்தலைவனும், பாட்டுடைத்தலைவனுமான கதாபாத்திரத்தின் சீர்த்தி—புகழ்

பாடும் தருவுப்பாடல். இத்தருவை காலஅடைவில் பிற்காலத்தில் 'சலாம்' தருவு என்றும் கூறினர்.

**சோபனதருவு** என்பது நாடக முடிவில் நாடகக்கதைத் தலைவனைப் பற்றி வாழ்த்திப் புகழ்ந்து, 'சோபனம்' என்று முடியும் வரிகளைக் கொண்ட தருவாகும்.

**மங்களதருவு** என்பது, நாடகம் முற்றுப்பெறும்போது 'மங்களம்' என்று முடியும் வரிகளைக் கொண்ட தருவுப் பாடல்.

**சரணுதருவு** என்பது பக்தி மார்க்கத்தில் இறைவனைச் சரணடையும் மரபாக, 'சரணம்' என்று முடியும் வரிகளைக் கொண்ட தருவுப்பாடல். வேத்தியலில் நாடகக் கதைத் தலைவனை — பாட்டுடைத் தலைவனைக் குறித்தும் பாடப் பெறும்.

இதுவரையில், தருவுகளின் வகை, இவ்வைந்து நாடகங் களில் பயின்றவற்றைப் பற்றிக் கூறப்பெற்றது.

தருவு வகைகளில் மற்றும் குறிப்பிடவேண்டியது, விரகபதம், ஏலபதம் என்பனவாகும். விரகபதம் என்பது களத்தலைவியின் தலைவனை நினைந்து அவனைப்பற்றி, சிற்றின்பச் சுவையுடன் பாடி அவிநயத்திற்குரிய பாடல்.ஏலபதம் என்பது, இறைவனைக் குறித்தும் தலைவனைக் குறித்தும், தருவுப் பாடல்களில், கண்ணிதோறும், சகியே, பஞ்சநீசுவர மாமுனிவனே என்று விளக்கும் பதங்களாகும்.

**நட்டுவாங்க மரபு:** இவ்வைந்து இசை நாட்டிய நாடகங் களில், காவேரி கல்யாணம் நீங்கலாக மற்ற நான்கு நாடகங் களும், நட்டுவாங்க மரபுடையவை என்று தெலுங்குப் புலவர் ந. விசுவநாதன் கூறுகிறார். ஏனெனில் நாட்டியாசாரியன் உருவாக்கிய அவிநய நாடக அமைப்பு என்பதால், இவற்றை நட்டுவாங்க மரபு, நட்டுவமரபு எனக் கூறப்பெறும். இந்நாடகங் களில் ஆண் பெண் இரு திறத்தாரும் நடிப்பர். இசைப்பாடல் களுக்கு ஏற்ப அவிநயம் புரிந்து நடிப்பார்கள்.

**பாகவத மேளா மரபு;** 'காவேரி கல்யாணம்' சகசி மன்னன் இயற்றியது. பக்தி மார்க்கத்துக்கு மட்டுமே உரியது. ஆண்கள் மட்டுமே நடிப்பவர்கள். 'பெண்' வேடத்தையும் ஆண்களே ஏற்று நடிப்பார்கள். கதைப்பாங்கும் பக்தி நெறிக்காகவே அமைக்கப் பெற்றதாகும். இவ்வாறு ஆண்கள் மட்டுமே நடிக்கும் நாடக மரபை, பாகவத மேளா மரபு என்று கூறுவர்.

பகவத்கைங்கரியமாக, பக்தி மார்க்கத்தை இசை நாட்டிய நாடகத் துறையில் வளர்ப்பவர்கள் பாகவதமேளா மரபினர். தஞ்சை மாவட்டத்தில் மெலட்டூர், சாலிய மங்கலம் ஆகிய ஊர் களில் இம்மரபில் நாடகம் நடை பெற்று வருகிறது. பாகவத மேளா மரபு நடிகர்கள் நட்டுவாங்கத்தை முற்றக்கற்றவர்கள். அவிநயம் புரிவதிலும் ஆற்றல் மிக்கவர்கள்.

இனி, தருவுகளைப் பற்றி அறிவோம்.

**நாடகத் தருவுப் பாடல்கள்**

"தமிழ் மொழி இயல், இசை, நாடகம் என்ற மூன்று பகுப்பு முறை கொண்டது,

இவ்வைந்து இசை நாட்டிய நாடகங்களில் தருவுப் பாடல்கள் யாவு இசை அமைதி கொண்டவை இசைப் பாடல்களான, தருவுப் பாடல்கள் அவிநயிக்கும் நாட்டிய அமைதி கொண்டவை; கதை மாந்தர்களின் கூற்று, கதை நிகழ்ச்சிகளைக் கொண்டு நாடகப்பாங்கும் நிறைந்தவை தருவுப் பாடல்கள்.

இந்நாடகப் பாடல்களை, தனியே இசையுடன் பாடலாம், தனியே பாடல்களுக் கேற்ப அவிநயித்தும் காட்டலாம். படித்தும் சுவை அறியலாம்; முழுமையாக நாடகமாக நடிக்கச் செய்தும் பார்த்து இன்புறலாம்.

தருவுப் பாடல்களில் இசை நாட்டிய நாடக அமைதிகள் முழுமையாக உள்ளன என்பதோடு, தமிழ் இயல் யாப்புக்குரிய அமைதியும் நிறைந்தவை என்பதை அறிய வேண்டும்.

இயல் யாப்புக்குரிய மோனை, எதுகை, பொழிப்பு, இயைபு முதலிய தொடைவிகற்பங்களும் நிறைந்தவை.

சீர்களும், சொற்கட்டும் இலக்கியச் சிறப்புடன் அமைந்தவை.

பாடலின் ஒவ்வோர் அடியும் சிறப்பாக அமைய வேண்டும் என்றும், அத்தகையனவே, 'பாட்டு' எனப் பெறும் என்றார் தொல்காப்பியர்.

"அடியின் சிறப்பே பாட்டெனப்படுமே" என்பது சூத்திரம்.

யாப்புச் சிறப்பில்லாமல் இயற்றப்பெற்ற அடிகளைக் கொண்ட படைப்பை 'நூல்' என்றே கூறுவது தமிழ் மரபு.

யாப்புச்சிறப்பும் இசையமைதியும் கொண்டவை தருவுப் பாடல்கள்.

'தருவு' என்று கூறுவது, தமிழ் மரபில் தரவு எனப்பெறும்; தரவு தொடர்பான பாட்டு அமைதிக்கு, தொல்காப்பியர் இலக்கணம் வகுத்துள்ளார்; அவர் தொல்காப்பியம் இயற்றிய காலத்தில், தரவுமுதலான அமைப்புக் கொண்ட தமிழ்ப்படைப்பு இலக்கியங்கள் இருந்தன. அவற்றை ஆய்ந்து இலக்கணம் வகுத்தார்.

தரவு, தாழிசை, அம்போதரங்கம், அராகம், பேரெண், சிற்றெண், அளவெண், சுரிதகம் முதலியன தரவு வகை வகையின என்பது தொல்காப்பியர் கூற்று.

இத்தரவுப்பாடல்களை, ஐந்து தமிழிசை நாட்டிய நாடகங்களில் 'தருவு' என்று கூறப்பெற்றிருப்பதை அறியலாம்; தமிழ் மரபில் கூறப்பெற்று, தமிழ்மொழிக்கே உரித்தான 'தரவு' என்ற அமைப்பை, வடமொழியில், பரதசாத்திரம் எழுதிய பரதமுனிவர் 'த்ருவம்' என்று குறிப்பிட்டுள்ளார். தரவுப்பாடலை 'த்ருவபதம்' என்றார். 'தர்வு' என்று தெலுங்கு மொழியில் கூறப்பெறுகிறது. பிற்காலத்தில் தமிழ்மொழி இசைப்பாடல்களை, 'தரு' என்றும் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

தொல்காப்பியர், தமிழ்ப்பாவகைகளைப் பற்றிக் குறிப்பிடும் போது, வெண்பா, ஆசிரியம், வஞ்சி, கலி, பரிபாட்டு ஆகிய வற்றிற்கு இலக்கணம் கூறும் பகுதி செய்யுளியல்.

கலிப்பா. பரிபாடல் இரண்டு அமைப்புக்கும் உரியவை, தரவு முதலாயின என்றும் குறிப்பிட்டுள்ளார். **நாடக நெறியும் உலகியல் நெறியும்.**

> ''நாடக வழக்கினும் உலகவழக்கினும்
> பாடல் சான்ற புலனெறி வழக்கம்
> கலியே பரிபாட்டாயிருபாவினும்
> உரியதாகும் எம்மனார் புலவர்'' (தொல். அகத் 56)

என்றார்.

புலன் என்ற நாடக நெறிவழக்கம், உலக நெறிவழக்கம் இரண்டும் கலி, பரிபாட்டு ஆகிய இருவகைப் பாக்களின் யாப்பால் இயற்றப்பெற வேண்டும் என்றார்.

நாடக வழக்கநெறிக்கு, உரியவை, நாடக நெறியுடன் உலக வழக்க நெறி இரண்டுக்கும் உரிய பாவகை கலி, பரிபாட்டு என்பதும், இவ்விருபாக்களின் யாப்பு நெறியில் தரவு முதலியன வரும் என்பதும் தொல்காப்பியர் விரிவாகக் கூறினார்.

எனவே, தரவு என்ற பா அமைப்பு, இந்நாடகங்களில் கூறப்பட்டுள்ளது; 'தரவு' தாழிசை முதலான உறுப்புக்களில், அனைத்தும் அல்லது சிலவும் நாடகப்படைப் பிலக்கியங்களில் வரும் கலித்தொகை, பரிபாடல் என்ற இரண்டு இலக்கியங் களிலும் இவற்றின் அமைப்பைக் காணலாம்.

தொல்காப்பியம் செய்யுளியலில் பேராசிரியர் உரையில் கலிப்பா வகைப்பற்றிக் குறிப்பிடும் போது, ''தரவு என்ற பொருண்மை யாதெனின் முகத்துத் தரப்படுவது தரவு, என்ப— இசை நூலாரும், இத்தரவு முதலியனவற்றை முகம், நிலை, கொச்சகம், முரி எனவேண்டும் கூத்தநூலாரும், கொச்சகம் உள்வழி அதனை நிலைபெற அடக்கி முகத்திற்படும் தரவினை முகம் எனவும் இடைநிற்பனவற்றை இடைநிலை எனவும் இறுதிக் கண் முரிந்து மாறும் சுரிதகத்தினை முரி எனவும் கூறினார்'' என்பர்

இசை நூலாரும் கூத்தநூலாரும் (நாடகம்) தரவு முதலியன வற்றை மேற்கொண்டபாங்கை பேராசிரியர் கூறினார்,

தமிழ் இசை, தமிழ் கூத்து, (நாடகம்) இவற்றுக்குரியவை கலிப்பா பரிபாடல் என்பதும் தரவு முதலாயின அமைந்த பாங்கும் இவற்றால் இசைப்பாக்கள் நாடகப்பாக்களின் இயல் முறையைக் கூறுவன என்பதும் அறியலாம்.

கூத்து (நாடகம்) இசை இரண்டிலும் அமைந்த தரவு முதலியன, முகம் முதலியனவாக விளக்கம் கூறப் பெற்றதைக் கொண்டு, பிற்காலத்தில் இசைத்துறையில் பல்லவி, அனுபல்லவி, சரணம் என்ற அமைப்பிலும், கூத்து, நாடகங்களில் 'தருவு' என்றும் கூறப்பெற்றுள்ளதை அறியலாம். இசைப்பாக்களிலும், 'தரவு' முதலியன வந்துள்ளமை அறியலாம். பழமைத் தமிழ் மரபே, தமிழிசையிலும், கூத்து நாடகங்களிலும் அமைந்துள்ளன. இவ்வைந்து இசைநாட்டிய நாடகங்களில். பயின்றுள்ள தருவு, பழந்தமிழ் மரபான 'தரவு, என்றே அறிய வேண்டும்.

'நாடக வழக்கும் உலகியல் வழக்கும்' (அகத். 56) என்ற நூற்பாவிற்கு இளம்பூரணர் கூறிய உரையில், "நாடக வழக்காவது சுவைபட வருவனவெல்லாம் ஓரிடத்து வந்தன வாகத் தொகுத்துக் கூறுதல்" என்றார்.

மேலும் "கலி பரிபாடல் ஒழிந்த பாக்கள் இத்துணை அகப் பொருட்கு உரியவாய் வருதலின் மையிள் ஓதாராயினர். புறப் பொருள் உலகியல் பானன்றி வாராமையின் அது நாடக வழக்கம் அன்றாயிற்று" என்றும் இளம்பூரணர் கூறினார்.

நச்சினார்க்கினியர் கூறுவது; "இவ்வதிகாரத்து நாடக வழக்கு என்பது புணர்ச்சி உலகிற்குப் பொதுவாகலானும், மலைசார்ந்தும் என்றும் காலம் வரைந்தும் மெய்ப்பாடு தோன்ற பிறவானும் கூறும் செய்யுள் வழக்காம்" என்றும்

(தொல். பொ. 3–ல்), நச்சினார்க்கினியர், "இச்செய்யுள் வழக்கினை நாடக வழக்கென்றார், எவ்விடத்தும் எக்காலத்தும் ஒப்ப நிகழும் உலகியல் போலாது உள்ளோன் முதலாகப் புனைந்துரை வகையால் கூறும் நாடக இலக்கணம் போல" என்றும்

"யாதானும் ஓரோர்வழி ஒருசாரார் மாட்டு உலகியலான் நிகழும் ஒழுக்கத்தினை எல்லார்க்கும் பொதுவாக்கி இடமும் காலமும் நியமித்து செய்யுள் செய்தலை ஒப்புமை நோக்கி என்க" என்றும் கூறினார். நாடக வழக்கைச் செய்யுள் வழக்க மென்றும் குறிப்பிட்டார்.

நாடகப்பாக்கள், தரவு முதலான உறுப்புப் பெற்று கலி, பரிபாட்டில் வருவன என்பதும், நாடக வழக்கும் உலகவழக்கும், கலி, பரிபாடல்களால் பாடப்பெறும் என்பதும் அவை புலனெறி வழக்கம் என்பதும், தமிழிசைக்கும், தமிழ் நாடகத்துக்கும், தரவு முதலானவை பயன்படுபவை என்றும் இதுகாறும் கூறப் பெற்றது. இசை நாடகத் தரவு பற்றி உரையாசிரியர் விளக்கம் கண்டோம்.

உச்சிமேல் புலவர் கொள்ளும் புகழுடைய நச்சினார்க் கினியர், மேலும் நாடக நெறி, உலக நெறி இரண்டும் பற்றி, கலித்தொகை, சீவக சிந்தாமணி என்ற இரண்டு நூல்களிலும் எழுதிய உரைச்சிறப்பைக் காண்போம்.

கலித்தொகை குறிஞ்சி 29ல் உரை வருமாறு:

"ஒரு பொய்யை நாடகவழக்கும் உலகியல் வழக்குமாகப் புனைந்துரை வகையால் படைத்துக்கொண்டு தலைவிக்குத் தோழி கூறியது.

"நாடகவழக்கென்பது உள்ளோனாவது இல்லோனாவது தலைவனாகச் செய்திகளைப் புனைந்துரைத்தல் இச்செய்திகளில் யாண்டும் எஞ்ஞான்றும் இல்லன கூறாது உலகத்தோர்க்கு நன்மை தருதற்கு நல்லோர்க்குள்ளவற்றை, ஒழிந்தோர் அறிந் தொழுகுதல் அறனெனக்கருதி சிறிது இல்லனவும் கூறுதல் என்றார்"

உலகவழக்கைப் பற்றிச் சீவக சிந்தாமணி பா. 2063ல் கூறும் உரை வருமாறு.

"உலகியல் வழக்கும் நாடக வழக்கும் பொருந்துதல் வரும் அகப் பொருளில் காந்தருவமாகிய உலகியல் வழக்கான

இயற்கைப் புணர்ச்சியைச் சுட்டி ஒருவர் பெயர் கொள்ளப் படுதலின் உலக வழக்கான காந்தருவம்''-என்றார்.

இக்கருத்தைக்கூறி சீவகனின் செயல்களை, 'இது நாடக வழக்கன்று, உலகவழக்கு' என்றும். கூறினார், பா. 1328.

நாடக வழக்கு என்பது முழுமையாகப்புனைந்துரை என்பதும் சுட்டி ஒருவர் பெயர் கூறப்படாத பொருண்மை உடையது என்றும், உள்ளோன் தலைவனாக இல்லது கூறலும் அதுவே என்றும் அறியவேண்டும்.

உலகவழக்கு என்பது, சுட்டி ஒருவர் பெயர் கூறப்பெறுவது என்றும், உள்ளோன்தலைவனாக உள்ளது கூறல் என்றும் அறியவேண்டும்.

இவ்வைந்து நாட்டிய நாடகங்கள், நாடக வழக்குக்குரிய பொருண்மையான கற்பனைவளம் செறிந்து உள்ளோன் தலைவனாக இல்லனவும் கூறப்பெற்றவையாகும்.

**நாடக நூலும் மெய்ப்பாடும்**

தொல்காப்பியத்தில் மெய்ப்பாட்டியலில் நாடகத்துக்கு உரிய பொருள், குறிப்பு, சத்துவம், சுவை என்பன பற்றி விளக்கம் தந்துள்ளார் (மெய்ப். சூ 1.) பண்ணைத்தோன்றிய எண்ணான்கு பொருளும் கண்ணிய புறனே நானான்கென்ப''; இச்சூத் திரத்துக்குப் பொருள் கூறுகின்றார் இளம்பூரணர். வருமாறு

''பண்ணை உடையது பண்ணையாயிற்று'' என்றும் ''இப் பதினாறு பொருளும் கற்று நல்லொழுக்கம் ஒழுகும் அறிவுடை யார் அவைக்கண் தோன்றாமையின் பண்ணை'' என்றார்.

''அச்சத்திற்கு ஏதுவாகிய புலியும் பேயும் சுவைப்படு **பொருள்**. அச்சம் **சுவை**. அதனால் ஏற்படும் மயக்கம் **குறிப்பு**. நடுக்கமும் வியர்ப்பும் பிறர்க்குப் **புலனாவது**. ஏனைய மன நிகழ்ச்சிகள். பிறவும் அன்ன. விறல் சத்துவம். இவற்றின் பிரிவை **நாடக நூலில்** காண்க'' என்றார்.

இளம்பூரணர் மேலும் ஒரு கருத்துரை கூறியுள்ளார். ''பண்ணை என்பது விளையாட்டு, விளையாட்டு ஆயத்ததைக்

குறிக்கும். இந்த ஆயம் கற்றுவல்லவராய், நல்லொழுக்கம் மேற்கொண்ட அறிவுடையார் கூட்டமன்று. இவ்விலக்கணம் கூத்தினுள் பயன்படல் உண்டாதலின்''

பேராசிரியர், ''பண்ணை என்பது முடியுடை வேந்தரும் குறுநில மன்னரும் முதலாயினோர் நாடக மகளிர் ஆடலும் பாடலும் கண்டும் கேட்டும் காமம் நுகரும் இன்ப விளையாட்டு என்பதும் அதனைக் கூறும் நாடக வழக்கிற்குரிய பகுதிகள்'' என்று உரை கூறினார்.

இளம்பூரணரும் பேராசிரியரும், பண்ணை என்பதற்கு விளக்கம் கூறியதைக் கொண்டு, நாடக நூல் பற்றியும் நாடக மகளிர் பற்றியும், நாடகத்தின் மெய்ப்பாடு பற்றியும் கூறியதை அறிந்தோம். பண்ணை உடையது பண்ணையாயிற்று என்று கூறியது இசையைக் குறிப்பிட்டதாகும். பண் என்பது இராகம் தேவாரபாக்கள் பண் அமைப்பைக் கொண்டது அறியத்தக்கது. இசையமைதி கொண்டபாக்களைப் பாடி, மெய்ப்பாடு தோன்ற அவிநயித்து, நாடகம் நிகழ்ந்ததையும், உயர்ந்தோர் இழிந்தோர் இரு திறத்தாரும் கண்டு மகிழ்ந்தனர் என்பதும் அறியலாம். தொல்காப்பியர்,நாடகம் நாட்டியத்திற்குரிய மெய்ப்பாடு பற்றிக் குறிப்பிட்டு, நாடகமாடும் ஆயம் கூட்டத்தைக் குறிப்பிட்டார் உரையாசிரியர், இளம்பூரணர், நாடக ஆயத்தை அறிவுடையார் கூட்டமன்று குறிப்பிட்டது, ஆசிரியரின் கருத்துக்கு முரனானது ஆனால், கலைகள் பற்றிய மூதறிவு கொண்ட பேராசிரியர் நாடகமகளிர் ஆடலையும் பாடலையும், இன்ப விளையாட் டென்றும் வேந்தர் முதலாயினோர் விரும்பி பார்ப்பதென்றும் கூறினார்.

பேராசிரியர், (மெய்ப். 2)'' சுவைக்குப் பொதுவாகிய பொருளினை அரங்கினுள் நிறீசி அதுகண்டு குறிப்பும் சத்துவமும் நிகழ்த்துகின்ற கூத்தினையும் அரங்கில் தந்து பின்னர் அவை அரங்கேறினார். அவண் செய்கின்ற மெய்ப்பாட்டினை உணர் வராக வருகின்ற முறைமையெல்லாம் நாடகவழக்குக்கே உரிய'' என்றார்.

மேலும் (மெய்ப்12-ல்) ''ஆங்கவை ஒரு பால்'' என்ற ஒத்திற்கு உரை விளக்கம் காண்க.

''முப்பத்திரண்டு மெய்ப்பாடுகளும் போல அகத்திற்கும் புறத்திற்கும் பொதுவாக நிகழும் மெய்ப்பாடு எனக்கொள்க மெய்ப்பாடெல்லாம் வழக்காதலின் இவ்வழக்கேயன்றி நாடக வழக்குள்ளும் கடியப்படா என்றவாறு''

நாட வழக்குக்கும் உலகவழக்குக்கும் உரிய மெய்ப்பாடு நாடக வழக்குக்கு இன்றியமையாதது என்றார்

நாடகத்தில் வரும் கூற்று, அகத்திணைமரபில் கிளவிகள் எனப்படும்.

தொல் (பொருள்51 ல்) நச்சினார்க்கினியர் கூறுவது.

''அகப்பொருட் கண்வரும் கிளவி உரைகளும் அப்பன் னிரண்டிக் கண்ணே புறப்பொருட்கு உரியவாய் அவ்வாசகத்தின் வரும் கிளவிகளும் ஏனையவும் நாடக வழக்கம் செய்தமுறை யானே நெஞ்சு உணர்ந்து கொள்ளின் அல்லது வழக்கான் ஒருவருக்கொருவர் கட்புலனாகக் காட்டப்படாத பொருளைப் பொருளாக உடைய என்று கூறுவர் புலவர் என்றவாறு''

கிளவிகள் யாவும் நாடக வழக்கு என்றும் அவிநயம் — மெய்ப்பாடு வழியே தான் உணரமுடியும் என்றார்.

'நாட்டிய மரபின் நெஞ்சு கொளினல்லது
காட்டலாகாப் பொருள் என்ப'' (தொ. பொ. 51)

மேலும் (மெய் 27)ல்

கண்ணினும் செவியினும் திண்ணிதின் உணரும்
நன்னயப் பொருள்கோள் எண்ணருங் குரைத்தே''

பேராசிரியர் கூறுவது:

'மனத்து நிகழ்ந்த மெய்ப்பாட்டினைக் கண்ணாளும் செவியாளும் உணர்தல் என்பது என்னையெனின், மெய்ப்பாடு பிறந்தவழி உள்ளம் பற்றி முகம் வேறுபடுதலும் உரை வேறு படுதலும் உடைமையின் அவை கண்ணானும் செவியானும்

உணர்ந்துதோடல் அவ்வத்துறைபோயினாரது ஆற்றல் என்பது கருத்து'

நாடகம் நாட்டியம் இரண்டிலும், நடிப்பு, அவிநயம் இரண்டையும் கண்களாலும் செவியாலும் நுட்பமாகக் கண்டும், இசையையும் உரையாடல்களையும் கேட்டும் இன்பம் அடைவர் என்பதும், நாடக நாட்டியம் நுட்பம் அறிந்தவர்களின் ஆற்றலைப் பொறுத்தது என்றார்.

தொல்காப்பியர் நாடக வழக்கு, நாட்டிய மரபு இரண்டையும் கூறி. அவை இரண்டிற்கும் இன்றியமையாத மெய்ப்பாட்டின் சிறப்பும் கூறினார். "இவற்றின் பிரிவை நாடக நூலில் காண்க" என்றும் (மெய்ப் 1) கூறினார்,

நச்சினார்க்கினியர் கருத்துப்படி உலக வழக்கு நெறி நாடகம் என்பது சுட்டி ஒருவர் பெயர் கூறப்பெற்றது என்றும் உள்ளோன் தலைவனாக உள்ளது கூறலாகும்.

நாடகவழக்கு நெறி, என்பது முழுமையாகப் புனைந்துரை வகை என்பதும் சுட்டி ஒருவர் பெயர் கூறப்படாத பொருண்மை யுடையது என்றும் உள்ளோன் தலைவனாக இல்லது கூறலும் அதுவே என்றும் அறியவேண்டும்.

**இசை நாட்டிய நாடகப் படைப்புக்கு இலக்கணம்**

இவ்வைந்து தமிழிசை நாட்டிய நாடகங்களின் அமைப்புப் பற்றி அறிந்த போது, 'தரவு' என்ற உறுப்புப் பெற்று, கலி, பரிபாடலில் வரும் என்பதும் உரைநடையும் ஆங்காங்கே பயின்று வரும் என்பதும், நாடகத்துக்கும் நாட்டியத்துக்கும் உரிய மெய்ப்பாடு பற்றியும், படைப்பு நாடகங்கள், உலக வழக்கு, நாடக வழக்கு என்று இருவகைப்படும் என்பதும் கண்டோம். தொல்காப்பிய நூற்பாக்கள், உரையாசிரியர்களின் விளக்கம் கொண்டு அறிந்தோம்.

நாடகப் படைப்புக்கும், அதற்குரிய இசைப்பாடற்கும் தொல்காப்பியர் மேலும் இலக்கணம் செய்யுளியலில் கூறி யுள்ளமை அறியலாம்.

**புலன்**

நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும் பாடல் சான்ற புலனெறி வழக்கம் கலியே பரிபாட்டாயிருபாவினும் உரியதாகும் (அகத். 56) என்றதற்கு இணங்க, 'புலன்' என்ற படைப்புக்குரிய இலக்கணம் கூறினார்.

> "சேரி (தெரிந்த) மொழியால் செவ்விதிற் கிளந்து
> தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றின்
> புலனென மொழிபபுலன் உணர்ந்தோரே"

**இளம்பூரணர் உரை வருமாறு:** "வழக்கச் சொல்லினானே தொடுக்கப்பட்டு ஆராயவேண்டாமல் பொருள் தோன்றுவது புலன் என்னும் செய்யுளாம். சேரிமொழி என்பது வழக்குச் சொல். தெரிந்தமொழி என்றும் பாடம், தெரிந்த மொழி என்பதும் மக்கள் அனைவருக்கும் தெரிந்த வழக்குச்சொல். இவையே நாடகத்துக்குரியவை.

பேராசிரியர், புலன் என்பதற்குக் கூறுவது : "அவை விளக்கத்தார் கூத்து முதலாகிய நாடகச் செய்யுளாகிய வெண்டுறைச் செய்யுள் போல்வன". பேராசிரியர், கலைநுட்பமும் தமிழ் மரபும் முற்றக் கற்றவராதலின், நாடகப் பாடல்களை, வெண்டுறைச் செய்யுள் என்றும், அதற்கு எடுத்துக் காட்டாக, பழமையில் விளங்கிய விளக்கத்தார் கூத்து நூலையும் குறிப்பிட்டார்.

'புலன்' என்ற படைப்பு, தமிழ் நாடகத்திற்குரியது. அப் படைப்பு கலி, பரிபாடல்களால் பாடப் பெற்றது. வெண்டுறை மார்கத்தனவான அப்படைப்பு நூல்களுக்கு, விளக்கத்தார்கூத்து என்ற பழமை நாடகம் எடுத்துக்காட்டு என்பது அறிந்தோம்.

**இழைபு**

மேலும், **'இழைபு'** என்ற தமிழ்ப்படைப்புப் பற்றியும் அறிவோம்.

(தொல். செய். 234)

> "ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத்த டங்காது
> குறளடி முதலா ஐந்தடி ஒப்பித்து

ஓங்கிய மொழியால் ஆங்கவண் மொழியின்
இழையின் இலக்கணம் இயைந்ததாகும்''.

இந் நூற்பாவுக்குப் பேராசிரியர் கூறும் விளக்கம்.

''அவையாவன கலியும் பரிபாடலும் போலும் இசைப் பாட்டாகிய செந்துறை மார்க்கத்தன'' என்பது ஒற்றெழுத்து மிகாமல் ஓங்கிய மொழியால் அமைய வேண்டும் என்றும் தமிழ் இசைப்பாடலாகிற செந்துறை மார்க்கத்தன இவை என்பது அறியப் பெற்றது.

புலன், இழைப்பு இரண்டுக்கும் இலக்கணம் கூறப்பெற்றது. கலி, பரிபாடல் என்ற பாவகையிலேயே இவை பாடப் பெறும் என்பதும் அறியலாம்.

'புலன்' என்ற நாடக இசைப் பாக்களுக்குரியது வெண்டுறை,

'இழைபு' என்ற தமிழ் இசைப்பாடல்களுக்குரியது செந்துறை.

மேலும் பேராசிரியர் (தொல் செய் 153ல்) ''கந்தருவ மார்க்கத்து வரியும் சிற்றிசையும் பேரிசையும் போல செந்துறைப் பகுதிக்கே உரியன வருவனவும், கூத்த நூலுள் வெண்டுறையும் சுராகத்திற்கே உரியனவாகி வருவனவும்'' என்றார். இவற்றா லும் தமிழ்க் கூத்து நாடகத்துக்குரிய இலக்கணமும் தமிழிசைக் குரிய இலக்கணமும் அறியலாம்.

அறிஞர் வெள்ளைவாரணனார் அவர்கள், வெண்டுறை செந்துறை பற்றிய ஆய்வுக்குறிப்பில் கூறுவதும் அறியலாம்.

''செந்துறையாவது உலகியல் வழக்குப் பற்றி மக்களைப் புனைந்துரையன்றி இயல்புவகையால் புகழும் நிலையில் இசைத் திறம்பொலிய தமிழிசைப்பாக்கள்

''வெண்டுறையாவது, உள்ளதனை உயர்த்துக் கூறும் நோக்கத்துடன் இல்லதனையும் விரவிக் கூறும் புனைந்துரை அமைப்பாகும். நாடகத்தமிழில் இசைநலம் பொருந்த அவிநயம் (நடிப்பு) செய்தற்குரிய எளிய சொற்களால் இயற்றப்பெற்ற இசைப்பா''

இதனை விளக்கி, பிங்கலநிகண்டில் கூறப்பெற்றதையும் அறியலாம்.

"கந்த ருவமென்பது கசடறக் கிளப்பின்
செந்துறை வெண்டுறை என இருவகைத்தே"

எனவும்,

"செந்துறை என்பது ஒலிகுறித்தற்றே
வெண்டுறை என்பது கூத்தின் மேற்றே"

என்றும் கூறப்பெற்றது அறியலாம்.

சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் பாடிய, கானல்வரி. ஆய்ச்சியர்குரவை, குன்றக்குரவை, ஆற்றுவரி முதலிய இசை கூத்து நிகழ்ச்சிகளுக்கும் இசை நுணுக்கம் என்ற இடைச்சங்க நூலாகும் என்றார்.

உதாரணமாக இசை நுணுக்கப்பாடல் ஒன்றையும் கூறினார்.

"செந்துறை வெண்டுறை தேவபாணியிய்யிரண்டும்
வந்தன முத்தகமே வண்ணமே — கந்தருவத்
தாற்றுவரி கானல்வரி முரண்மண்டிலமா
தோற்றும் இசை இசைப்பாசுட்டு"

எனவே, கலி பரிபாடல்களால் ஆன தமிழ் நாடகப் படைப்பு வெண்டுறை மார்க்கம் என்பதும், கலி பரி பாடல்களால் ஆன தமிழ் இசைப்படைப்பு செந்துறை மார்க்கத்தின் என்பது அறியப் பெற்றது.

இவ்வைந்து தமிழிசை நாட்டிய நாடகப் பாடல்கள் வெண்டுறை மார்க்கத்தன என்பதும் அறியலாம்.

**பண்ணத்தி**

மேலும் தொல்காப்பியர், பண்ணத்தி, என்ற பா அமைப்பும் பற்றிக்கூறுவதையும் அறியலாம்.

"பாட்டிடைக் கலந்த பொருளவாகிப்
பாட்டின் இயல பண்ணத்திய்யே" (தொல்செய். 173)
"அதுவே தானும் பிசியொடுமானும்" (174)

"அடிநிமிர் கிளவி ஈராறாகும்
அடியிகந்து வரினும் கடிவரையின்றே" (175)

இவற்றிற்கு இளம்பூரணர் உரைவருமாறு:

"பண்ணத்தி என்பது இசை நூலார் கூறும் பாவினம் என்றும் பண்ணைத் தோற்றுவித்தலால் பண்ணத்தி என்றும் பெயர்த்து. அவையாவன பேரிசையும் சிற்றிசையும் முதலாக இசைத்தமிழில் ஓதப்படுவன"

மேலும் "பாட்டுக்களின் இயல்பை உடையனவாய்ப் பண்ணைத் தோற்றுவிக்கும் செய்யுட்கள். பிசி என்பது இரண்டடியாலும் வரும்.பண்ணத்தியின் பாவினம் பன்னிரண்டு". என்றார்.

பேராசிரியர் கூறுவது: "பழம்பாட்டினூ கலந்த பொருளே தம் பொருளாகப் பாட்டும் உரையும் போல செய்யப்படுவன பண்ணத்தி, பிசியொடு ஒக்கும், பண்ணத்தியின் அடிப்பெருக்கம் பன்னிரண்டு" என்றார்.

மேலும்," மெய்வழக்கல்லாத புறவழக்கினைப் பண்ணத்தி என்ப. இது எழுதும் பயிற்சியில்லாத புற உறுப்புப் பொருள் களைப் பண்ணத்தி என்ப என்பது, அவையாவன நாடகச் செய்யுளாகிய பாட்டு மடையும் வஞ்சிப் பாட்டும் கடகண்டும் முதலியன அவற்றை மேலதே போலப்பாட்டு என்னாராயினார். நோக்கு முதலிய உறுப்பு இன்மையின் என்பது அவை வல்லார் வாய்க் கேட்டுணர்க."

இதனால் பண்ணத்தி என்பது, பாட்டிலக்கண வரம்பு கடந்த தமிழ்நாடகப் பாடல்கள் என்பதும் அறியலாம். பாட்டு மடை சிலப்பதிகாரத்தில் வந்துள்ளது. வஞ்சிப்பாட்டு என்பது குறவஞ்சி அமைப்பாகும் என்பதும். அறியலாம்

பேராசிரியர் கூறியதைக் கொண்டு, செந்துறை வெண்டுறை மார்க்கப் பாடல்களையன்றி பண்ணத்தி அமைப்பான நாடகப் பாடல்களில் இயல் யாப்புக்குரிய நோக்குமுதலாயினவை இரா என்பது அறியலாம்.

அடிவரையறையற்றும், ஒரு நோக்கில்லாமலும் நாடகத் தரவுப் பாடல்கள் இருக்கும் என்பதையும், இவ்வைந்து தமிழிசைநாட்டிய நாடகத் தரவுகள் இவ்விலக்கணத்துப் பொருந்துவதாகும் என அறியலாம்.

இந்நாடகங்களில், இசை நாட்டிய இலக்கண மரபுக்கேற்ப சொல்லாட்சிகள் அமைந்துள்ளன. வடமொழி, தெலுங்குமொழிப் பாடல் அமைப்பும் வாசக அமைப்பும் உள்ளன.

நாடகங்களில் பிறமொழிப்பாடல்கள் பாடப்பெறும் என்பதை. சிலம்பு, மணிமேகலை, கொண்டு அறியலாம். 'பாடைப்பாடலும்' என்பது மணிமேகலை. 'கொங்கணக் கூத்தரும் கொடுங்கருநாடரும்' வரிப்பாடல் பாடினர் என்பது சிலப்பதிகாரம்.

இனி ஐந்து நாடகங்களின், சிறப்புப் பற்றி அறிவோம்.

# பூலோக தேவேந்திர விலாசம்

ஐந்து தமிழிசை நாட்டிய நாடகங்களில் ஒன்றான 'பூலோக தேவேந்திர விலாசம்' என்பது, சகசிமன்னனைப் பூலோக தேவேந்திரன் என்று குறிப்பதாகும்.

இந்நாடகத்தை எழுதிய முத்தமிழ்ப்புலவரின் பெயரும், இவரைப்பற்றின மற்ற செய்திகளும் அறிய முடியவில்லை. சகசி மன்னனின் அவைப்புலவரில் ஒருவர் என்பது அறியலாம்.

இசைநாட்டிய நாடகமான இப்படைப்பை இயற்றிய புலவர், தமிழ் மரபறிந்த வரும், சிறந்த நாட்டியாசாரியரு மாவர் என்பதும் அறியவேண்டும்.

இந்நாடகத்தின் தருவுப் பாடல்களைக் கொண்டு ஆசிரியரின் ஆற்றலை உணரலாம்.

எளிய தமிழ் நடையில், இசைமரபும் நாட்டிய மரபும் குன்றாமல் நாடகம் அமைத்துள்ளார்.

இந்நாடகக் கதையின் சுருக்கம் தனியே இணைக்கப் பெற்றுள்ளது. இந்நாடகம் 47 தருவுகளைக் கொண்டது. உள் தருவு, வெளிதருவு, சம்வாததருவு, கதாபாத்திரக்கூற்றுத் தருவு சிறிதளவு உரைநடைப்பேச்சு ஆகியவற்றைக் கொண்டது. இராகம், தாளம் ஆகியவையும் குறிப்பிடப் பெற்றுள்ளது.

சகசி மன்னனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டதே இந்நாடகம். காம்போச நாட்டுமன்னன் மகள் சுசீலை சகசியை விரும்பி மணம் புரிகிறார் என்பதும், நாடகக் கதையமைப்பின் சிறப்புக்காக, மன்மதன், இரதி, சித்தபுருடன் ஆகிய கதாபாத்தி ரங்கள் பங்குகொள்கின்றார்கள் என்பதும் நாடகத்தைப் படித்து அறியலாம்.

உள்ளோன் தலைவனாக அல்லது கூறுதல் என்ற அமைப்பைக் கொண்ட நாட்டிய நாடகம் இப்படைப்பு. அவி நயத்தின் வழியே இந்நாடகங்கள் நடிக்கப் பெற்றன என்பதற்குச் சான்று ஆய்வு முன்னுரையில் கூறியுள்ளேன்.

மேலும் இந்நாடகத்தரு 17-ல், "விரகபதங்கள் பாடி வெண்ணிலாவதனால் வாடி" என்றும் தரு18-ல் "விரகபதங்கள் பாடி சேர்மயில் கூடவேதேடி" என்றும் தரு 35–ல் "பங்காளிக் குயில் நாணப் பதம்பிடிப்பேனே" என்றும் கூறப்பெறுகின்றன வற்றையும் நோக்கலாம்.

'விரகபதம்' பாடி அதற்கேற்ப அவிநயம் செய்கின்ற அமைப்பை, இத்தருவுகள் சுட்டிக் காட்டுகின்றன. விரகபதம் என்பது, சிற்றின்பச்சுவையை மிகுத்துக் காட்டுவது. 'பதம்' என்ற இசைப்பாடலுக்கேற்ப அவிநயம் செய்தலாகும்.

### இசை யாப்பு

இசை நாட்டியப்பாக்கள் என்ற அமைப்பைப் பற்றியும் அதன் யாப்பு மரபையும் ஓர் எடுத்துக்காட்டாக 2–ம் தருவைப் பார்ப்போம்:

"அளகம் கோதியே முடித்து
அலர்ந்த சுகந்த மணிந்து
களிபமிக மெய்யில் பூசி
களிப்புடன் இரதியும் வந்தாள்"

இந்தத் தருவின் நான்கு வரிகளிலும், 'த், ப்' என்ற இரண்டு வல்லின ஒற்றெழுத்துக்களே பயின்றுள்ளன.

வல்லின ஒற்றெழுத்துக்கள் மிகாமல், இடையின மெல்லின எழுத்துக்களும் உயிர் எழுத்துக்களுமே பயின்று ஓங்கிய மொழி யால் இயற்றப்படுவனவே தமிழ் இசைப்பாக்கள்.

இவ்வைந்து நாட்டிய நாடகங்களிலும் இவ்வமைதி பொருந்து வதாக உள்ளது என்பதை மட்டும் ஈண்டுக் குறிப்பிட்டோம்.

### சோழ மரபு

சகசி மன்னன், தஞ்சையில் ஆட்சிபுரிந்த மராட்டிய இனத்தவனாயினும், தமிழ்த்தஞ்சையில், முத்தமிழ் வளர்த்த சோழமரபு வழியே ஆட்சி புரிந்தான். எனவே, நாடக ஆசிரியர், சகசியை,

"சோழமண்டலபுரந்தரன்" (தரு. 37)
"சோழமண்டலாதீசுவரன்" (தரு. 47)

என்று புகழ்கின்றார்.

### அளகை

அதுபோன்றே தஞ்சை நகரை ஆட்சி புரிந்த சகசியை "தென்னளகை சகசேந்திரன்,' (தரு. 15) என்றும் கூறுகின்றார். அளகாபுரி, அளகை என்பது தஞ்சைக்குச் சோழர் காலத்துப் பெயராக வழங்கியதை, குலோத்துங்கசோழக்கோவை, பிள்ளைத்தமிழ் போன்றவற்றில் காணலாம்.

### குபேரன்

அளகையின் அதிபன் குபேரன் என்பது பழமை வரலாறு. "என்குபேரன்" (தரு 36) என்று சகசி குறிப்பிடப்பெற்றுள்ளதை அறியலாம்.

### கமலையம்மன்

சோழர்காலத்தில், திருவாரூர்த் தியாகேசரை சோழமன்னர் வழிபட்ட சிறப்பைப் போன்று, சகசி மன்னனும், திருவாரூரில் கோயில் கொண்டுள்ள கமலையம்மனை வழிபட்டு அருள் பெற்றான் என்பதை நாடக ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

"கமலைமாதருள்" (தரு 35)
"கமலையம்மை யருள்சூடி', (தரு 36)
"பூவேந்துகமலை மாது" (காப்பு)
"கமலைமாதைப் பணியும்" (தரு 37)
"கமலைநாயகியைப் போற்றும்" (தரு 38)
"கமலைநாயகி அருள் நெறியும்" (தரு 39)
"தேவிகமலாலயம்மன் அருளும் பராகு" (தரு 42)

**இரதிதேவி**

மன்மதனின் மனைவியான இரதி தேவி, மன்மதனுடன் ஊடல் கொண்டு சிங்கார வனத்துக்கு வருவதை நாடக ஆசிரியர் நயமாகக் கூறுகிறார். (தரு 2,3) 'அளகம் முடித்து, களபம் பூசி தனங்கள் விம்ம, மதனுடன் மோடியாய், சந்தனத் திலகமிட்டு, இருவிழிகளில் அஞ்சனமிட்டு, சந்திரகாவிச் சேலையுடுத்தி, சிலம்புகள் கலுகலென ஒலிக்க பூங்காவிற்கு வந்தாள்.'

எரிவுற்ற காதலரை, ஒன்றாகச் சேர்த்து வைப்பவன் மன்மதன் என்ற கருத்தை (தருமம)ல்.

> "பிரிந்த பெண்கள் தம்மையும்
> புரிந்த புருடரையும்
> மருவச் செய்வது நானன்றோ
> வங்கணங்காரா"

என்று மன்மதன் கூறுகிறான்.

(கலித்தொகை 147-ல்) "தன்னெஞ்சு ஒருவர்க்கு இணை வித்தல், யாவர்க்கும் அன்னவோ காம நின்னன்பு' என்ற வரி களை நினைவு கூறச் செய்கின்றது.

மன்மதனுக்கும் இரதிக்கு ஊடல் காரணமாக காற்றும் மாற்றமுமான (சம்வாதத்தரு) பாடல், மிகச்சுவை கொண்டவை யாகும். தரு 7).

6 கண்ணிகளிலும், மன்மதனும் இரதியும் சம்வாதம் புரியும் தருவில், தாமரை, முல்லை, அசோகம், நீலோத்பலம் மாந்தளிர் ஆகியவற்றை உருவகப்படுத்திச் சொல்லும் பாநயம் சுவை மிக்கது.

அரவிந்த சரத்தை முல்லையரும்பாடைல் வரிசையாலும் சோகவாளியான அசோக மலரை, மனத்திண்மையாலும், மாந்தளிரை சந்தனக்கையாலும், முல்லைச்சரத்தை, கைவிரல் நகங்களாலும், நீலோத்பலத்தை, விழிகளாலும் வெல்வென் என்று இரதி கூறுவது நயம் கொண்ட பகுதியாகும்.

16–ஆவது தருவிலும், இரதியும் மன்மதனும் காற்றும் மாற்றமுமாக உள்ள பகுதி பா, பொருள் நயம் கொண்டது. இத்தருவு,அந்தாதித் தொடையாக அமைந்துள்ளது சிக்கி, சிங்கி, போடி, தாட்சண்யம், வாடி, முடிக்க, வல்லி, வாராயோ என்பன அடுத்தடுத்து கண்ணிதோறும் ஈற்றில் அந்தாதித் தொடையாக அமைந்துள்ளது காணலாம்:

இவ்வகையாக அமைந்த, தமிழ்மரபுப் பாடல்கள் கலித் தொகையில், **குறிஞ்சிக்கலியில்** 61, 62, 63, 64, 65, நெய்தல் 131, முல்லை 82. 83, 108. 112, 113, 116, 117 மருதம் 79, 80, 84, 86, 87, 88, 89, 90, 91, 98 ஆகிய பாக்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

ராசகன்னிகை சுசீலை, மன்மதனைப் பார்த்துக் கூறும் தரு 22-ல் "உதட்டில் உறவைவிட்டு உண்மையைச் சொல்லு" என்றும் "புல்லாத மாதர்மேல் பூங்கணை தொடுக்காதே" என்றும் உள்ளன. சகசியை விரைவில் தழுவுவேன் நான், என் மீது உன் திறமையைக் காட்டாதே' என்கிறாள்.

இதுபோன்றே தரு 9-ல், இரதியை வென்ற மன்மதன், "நாலுபேர் முன்னேயிப்போ நாண இடமாச்சுதே" என்று ரதியை இகழ்ந்து கூறுகிறான்.

மன்மதனால் வெற்றிகொள்ளப் பெற்ற இரதி கூறுகிறாள் (தரு. 10) "கன்னியர்களைப் புருடர் சயிப்பது, கலியுகத்தில் புதுமையா?" என்று இடித்துக் கூறுகின்ற பகுதி நயம் உள்ளது.

**தொடை விகற்பங்கள்**

17-வது தருவு

"விரகபதங்கள் பாடி
வெண்ணிலாவதனால் வாடி
இருவிழி புனலும் ஓடி
இருதனம் குலுங்க நாடி

18-வது தருவு

வடமாயணி **தரள**
மாலை நிரை **திரள**
கொடியிளம் **பவள**
கொடிபோலிடை **துவள**
சித்தமும் மிகக் **கலங்க**
சேரவே நினைந்து **தங்க**
குத்துமுலையும் **குலுங்க**
கோவை போல்இதழ் **துளங்க**
வேர்மருக் கொழுந்து **சூடி**
விரகபதங்கள் **பாடி**
சேர்மயில் கூடவே **தேடி**
சிங்காரவனத்தை **நாடி**

தரு 32ல்

"சரணம் ஸ்ரீ **கௌரீசா**
சரணம் சர்வ **லோகேசா**
சரணம் போஸல **தேவேசா**
சரணம் **தஞ்சேசா**
அரவபூஷண **வேதா**
ஆனந்தவல்லி **நாதா**
பரணவக் கெளிய **தூதா**
பங்கயப் பொற்**பாதா**

தரு 37ல்

கண்டால் விடா**னடா**
காமா ஓடிப்**போடா**
மெய்யாய்ச் சொன்னே**னடா**
வில்லை **ஓடியடா**
கையில் சரத்தைக் **கூடை**
கட்டிச் **சுருட்டடா**
வையும் குயிலடா
வாயில் அறையடா

இவ்வாறு பலதருவுப் பாடல்களில் அடிதோறும் இறுதிச் சீர் தொடைவிகற்பத்துடன் (இயைபு) அமைந்துள்ளவற்றைக் காணலாம்.

**ஏலபதம்**

இந்நாடகத்தில் மற்றொரு சிறப்பைக் காணலாம். தரு 19, 24, 28 ஆகியவற்றில் அடிதோறும் இறுதியில் 'சகியே, என்றும் 'அடியோசேடி' என்றும், இராச கன்னிகை, சகியைப் பார்த்துக்கூறுவதிலும், சித்தபுருடன், சகியைப்பார்த்துக் கூறுவதிலும் அமைந்துள்ளன. இவ்வித அமைப்பை 'ஏலபதம்' என்று நாடகமரபில் கூறப் பெறுகிறது. யஷகான நாடகமரபில் இவ்வித அமைப்பு உள்ளதாக, ஆந்திர நாடகமரபில் காணப் பெறுகிறது.

இதனைப்போன்றே, தரு 31ல் 'தஞ்சையீசுவரா' என்று, இராச கன்னிகை தோத்திரம் செய்யும் அமைப்பும் உள்ளது. தஞ்சையிலிருந்து திருவையாறு செல்லும் சாலையில், மிகப்பழமையான தஞ்சபுரீசுவரர் கோயில் உள்ளது. மாமன்னன் இராசராஜன் எழுப்பிய பெருவுடையார் கோயிலுக்கு, முன்னதாகவே, இக்கோயில் தஞ்சையில் விளங்கிவருவது, தேவியின் பெயர் ஆனந்தவல்லி என்பது.

இக்கோயில் சகசி மன்னனால் பெரிதும் சிறப்புடன் வழி பாடு செய்யப்பெற்ற கோயில் என்ற காரணத்தால், இந் நாடகத்தில் போற்றப்படுவதை அறியவேண்டும். சகசியின் சிவ பக்தியைச் சிறப்பிக்கும் நோக்கத்துடன் புலவர் தஞ்சபுரீசு வரரைத்துதி புரியும் பாடலாக அமைத்துள்ளார். இப்பாடலும் ஏலபத அமைப்புடையது.

**சித்தபுருடன்**

பழமை நாடக மரபில், சூத்திரதாரன் கட்டியக்காரன், சகி ஆகியோரைப் போன்று நாடகக் கதை நிகழ்ச்சிகளில், கதைத் தொடர்புக்காக, சித்தபுருடன் என்ற கதைப்பாத்திரம் அறிமுகப் படுத்துள்ளது. குறவஞ்சியில் 'குறத்தி' குறி கூறும் பாத்திரமாக

அமைந்து சிறப்பித்திருப்பது போன்று, சித்தபுருடன் கதைப் பாத்திரமும் அமைந்ததாகும்.

இராசகன்னிகையின் விருப்பத்தை நிறைவேற்றவும், சிவ் பக்தியின் சிறப்பை எடுத்துக்கூறவும் சித்தபுருடன் கூறப் பெறுகிறான்.

'ஏலபதம்' என்ற அமைப்பில், சகியின் கூற்றாக அமைந் துள்ள இப்பாடல் சித்த புருடனைப் பார்த்துக் கூறுவது "மாமுனிவனே" என்று அடிதோறும் அழைக்கும் அமைப்பில் உள்ளது.

சகசி மன்னனுக்கு, சிவபக்தியும், சிவநெறியில் ஈடுபட்ட துறவிகளிடமும் பெரியோர்களிடமும் உள்ள பக்தியைச் சிறப்பித்துக் காட்டும் பாங்கு இந்நாடகத்தில் அமைந்துள்ளது.

சகசியின் காலத்துச் சித்த புருடனின் காட்சி நாடகப் பாங்கில் அறிமுகம் செய்யப் பெறுவதைப் பார்க்கலாம்.

(தரு 25)

திருநீறு மிக வணிந்து
சபதாவட மும் கொண்டு
மருவு ருத்திராக்க மாலையணிந்து
மாமுனிவன் வந்தனனே
சடையும் விரித்துக் கொண்டு
தரித்த புலித்தோலுடனே
திடமான பக்தியுடன்
சித்தபுருடன் வந்தானே

**சகசிமன்னனுக்குப் புகழ்மாலை**

நாடகத்தின் பாட்டுடைத் தலைவனான சகசி மன்னனைப் பூலோக தேவேந்திரன் என்று கூறியதற்கு இணங்க, (தருவு 12)ல் இந்திரனையும் சகசியையும் ஒப்பிட்டு, இந்திரனைக் காட்டிலும் உயர்வுள்ளவன் சகசி என்று ஒப்பிட்டு உயர்த்திக் கூறியிருப்பது நயமுள்ள பகுதி; தருவுப்பாடலின் இறுதியில் முத்தாய்ப்பாக, "அவன் அந்த முனிபத்னியை அணைந்தான், சகசி ராச

தேவேந்திரன் இப்படி., ஒருத்தன் மனைவிக்கும் யாசிப்பதில்லை'' என்று கூறி அகலிகையின் கதையைச் சுட்டிக்காட்டி பிறன்மனை நயவாத நெறியுடையவன் சகசி என்று புகழ்ந்திருப்பதைக் காணலாம்.

சகசியின், சிறப்புக்களைக் கூறும் வகையில் (தருவு 46) சோபனம் என்ற பாடலில் ''சொல்லில் ஒரு பொய் சொல்லாத சுந்தரனுக்கு'' சோபனம் என்றும் கூறப்பெறுகிறது.

(தருவு 10ல்) சகசியின் வீரத்தைத் தனியே குறிப்பிட்டு, ''வெற்றியாகவே புறத்தில் ஒருவரை வில்லெடுக்க வொட்டாத சத்திரபதியான சகசி'' என்றும் கூறுகிறார் கவிஞர்.

மற்றும், நாடகம் தருவு 30ல் 'தீபாம்பிகை தனயன் போசல குலோந்திர ஏகேந்திரன் தருசுதன், என்றும் தருவு 33ல் 'போசல குலசாகபூபன், சகலகலாநிபுணன், மகரகேதனன் சோழ மண்டல புரந்தரன். என்று புகழ்மாலை சூட்டுகிறார் கவிஞர்.

தருவு 42ல், ''பாவலர்கள் புகழவரும் நாதா'' என்று காம்போச ராசன் கூற்றாக 'பராகு' தருவுப் பாடலில் கூறப் பெற்றுள்ளது.

'பாவலர்கள் சகசியைப் புகழ்ந்தவண்ணம் இருப்பார்கள் என்பதும், சகசியும் பாவலர்களை ஆதரிப்பவன் என்பதும் நன்கு அறியலாம்.

'பராகு' என்பதும், எச்சரிக என்பதும் பிறமொழிச் சொல்லாட்சிகள் நாடக மரபில் இவை இன்றியமையாதவை என்பது கொண்டு அனைத்துநாடகங்களிலும் கூறப்பெற்றுள்ளன. **'சலாம்'** என்ற சொல்லும் நாடகச் சந்திவசனத்தில் வந்துள்ளது. ஹிந்துஸ்தானி மொழி சகசியின் காலத்துப்பயின்ற மொழி என்பதும் தெரிகிறது.

**வடமொழிச்சொற்கள்**

வடமொழிச் சொற்கள் மிகுதியாக இந்நாடகத்திலும் மற்ற நான்கு நாடகங்களிலும் உள்ளன. இந்நாடகத்தில் ஒரு தருவில்

வந்துள்ள சில சொற்களை மட்டும் எடுத்துக் காட்டாக அறியலாம்.

தருவு 15 சந்ததம், சகலகலாநிதி, சத்தியஞரக்தர், மித்திராத்மஜவேிசதர், லட்சணம், லக்குமியுக்தர், தட்சிணா சிம்மாசனம், சிவசக்திதரர்.

**வழக்குச்சொற்கள்**

இப்போ த. 4, 11, 9, நிசார் த.5. அதட்டி த 7, 14 ஆச்சுதே த. 9 திராணை த. 7, 15. போங்காண் த. 16 போடி த. 16 அப்போ த. 16 மொட்டி த. 21 பெசுறாயடி த. 23 ஆச்சு த. 34 தாரோம் த. 44 அடா த. 38 எய்யுறே த. 23 பேசுறாயடா த. 23

இன்றைக்கு முந்நூறு ஆண்டுகட்கு முன்பு, தஞ்சையில் சகசிமன்னன் காலத்தில் இயற்றப்பெற்ற, இந்நாடகப் படைப்பினைக் கொண்டு, தமிழ் இசை நாட்டிய மரபின் தன்மையை நன்கு உணரலாம்.

நாடகப்பாக்கள், சந்திவசனங்கள், நாடகமாந்தரின் உரையாடல்கள் அனைத்தும் ஒருங்கே அமைந்தவை. தமிழிசைப் புலவரைக் கொண்டு இசைப்பாடல்களை, எளிய தமிழ் நடையில் அமைத்து, இராகம், தாளம் அமைத்து அவற்றிற்கு ஏற்ப அவிநயம்வல்ல கதைமாந்தரைக்கொண்டு அவிநயித்துச் நடிக்கச் செய்து, ஆங்காங்கே கதையின் தொடர்பை விளக்கும் சந்நி வசனங்களை அமைத்து, உரையாடல்களையும் சிறிது அமைத்து நாடகக் கட்டுக்கோப்பை சிறப்புடன் உருவாக்கியவன் சூத்திர தாரன் என்பவனே என அறியமுடிகிறது. சூத்திரதாரனே நாட்டியாசாரியனுமாவான்,

# சந்திரிகா ஹாசை விலாசம்

ஐந்து தமிழிசை நாட்டியங்களில் ஒன்றான இந்நாடகத்தை இயற்றிய ஆசிரியர் பெயர் முதலியன அறிய இயலவில்லை; சகசி மன்னனின் அவைப் புலவரில் ஒருவர் என்பது மட்டுமே கருதமுடிகிறது.

முத்துக்கவி, வாசுதேவகவி, ராமகவி, திருச்சிற்றம்பலக்கவி, சொக்கப்புலவர் ஆகியோரில் ஒருவராக இருக்கலாம் என்று கருதலாம்.

இந்நாடகம், திருவாரூரில் சகசி மன்னன் அரண்மனையில் நடிக்கப் பெற்றதாகக் கருதமுடிகிறது. கதைத்தலைவி மாளவ தேச மன்னன் மகள். இவள் திருவாரூரில் கோயில் கொண்டுள்ள வன்மீகநாதரை வழிபட்டு, இறுதியில் சகசி மன்னனை மணம் புரிகிறாள் என்பது கதை.

இக்கதையிலும் 'சித்தபுருடன்' என்ற கதைப்பாத்திரம் அறிமுகம் செய்யப்பெறுகிறது. சித்தபுருடன் முன் நின்று சகசிக்கும் மாளவ மன்னன் மகள் சந்திரிகா ஹாசைக்கும் மணம் முடித்து வைக்கிறான்.

கதைச்சுருக்கம் முறையே தனியாக இணைக்கப்பெற்றுள்ளது, 31 தருவுகளைக் கொண்டது இந்நாடகம்.

இந்நாடக ஆசிரியரும் ஆற்றல் மிக்க முத்தமிழ்ப் புலமை கொண்ட புலவர் என்பதைத் தெளிவாக அறியலாம்.

மற்ற நாடகங்களைப் போன்றே இந்நாடகத்திலும், தோடய மங்களம், மங்களம், காப்பு, விநாயகர் தருவு, கட்டியக்காரன் தருவு, உள்தருவு, வெளிதருவு, பாத்திரக் கூற்றுத்தருவு, கைவார தருவு, விரகபதம், சோபன தருவு, மங்கள தருவு ஆகியவற்றுடன் உரைநடைப் பேச்சும் சந்தி வசனமும் கொண்ட படைப் பாகும்,

காப்பு விருத்தத்தில், திருவாரூரில் கோயில் கொண்டுள்ள 'விட்டவாசல் கணபதி' புகழப்படுகிறார். திருவாரூர் தலத்தில் புகழ் பெற்ற கணபதி இம்மூர்த்தியாகும்.

கதைத் தலைவியான இராசகன்னிகை சந்திரிகா ஹாசை நாடக அரங்கில் பாத்திரப் பிரவேசத்தை வெளிதருவில் (3,4) கம்பீரமாகக் கூறப்பெறும் பாக்களை அறியலாம்.

"அந்தை கலகலென அணி
ஆடை யிலங்கவே
சந்தனம் அணிந்த பூர்ண
சந்திர முகியான — இராசகன்னிகை

என்றும்"

செங்கரவிச் சேலையுடுத்தி
செண்டு கையினில் பிடித்து
சிங்கார மலர் முடித்து
சிந்துபதங்கள் பிடித்து
சின்ன முலையு மிலங்க
செவ்விதழ் மிகத் துளங்க
வண்ண வளைகள் குலுங்க
மன்மதன் கண்டு மயங்க
கொத்து முத்து வடமாட
குயில் மொழி மயலாடக் கண்ணாட
தத்தை எல்லாரும் கொண்டாட
சகியுடனே தானும்கூட — இராச

என்றும் அழகு தமிழில் எளிய பாங்கில் அடி தோறும் இறுதிச் சீர்களில் இசையொலிக் கேற்ப இயைபுத் தொடை அமைய, பாடியிருப்பதையும், சந்திரிகா ஹாசையின் வருகையைக் காட்சிச் சிறப்புடன் அமைத்திருப்பதையும் காணலாம்.

"சிந்து பதங்கள் பிடித்து" சந்திரிகாஹாசை வருகிறாள் என்று கவிஞர், கதைத்தலைவியின் அவிநயச் சிறப்பையும் நயம் படக் கூறுகிறார்.

இதுபோன்றே, 13ம் தருவில், சந்திரிகா ஹாசை **விரகபதம்** அவிநயிக்கிற பாங்கை விளக்கும் இசைப்பாவில், சகசி மன்னனை எண்ணி மனம் மயங்குகிறாள் என்பதைக் கூறி,

''முத்துமுலை **விம்முது**
குளிர் மதியும் **சுடுது**
முத்துமாலையும் நீராய்
முனைந்து **காணுது**
பெத்த மனம் **நோகுது**
விழியில் **நீராறாடுது**
சித்தரன் கணையினாலே
தேகமும் **மெலியுது**
மந்தமாருதம் **வீச**
வருகுயில் என்னை **ஏச**
அழகான கிளிகள் **ஏச**
அதட்டி வசை **பேச**
சந்தனம் மெய்யில் **பூச**
தான்வேண்டி மனம் **கூச**
இந்த வகையாலே **ரோசம்**
எனக்குவருது **நேசா**
அன்னமும் இறங்**காது**
அகமும் தெளி**யாது**
இன்னம் ஒருகங்குல்
இருக்க விடி**யாது**
சுவர்ண பூஷணம் **இது**
தொட மனம் பிடிக்**காது**
கர்ணன் சகசேந்திர னிப்**போது**
கலந்தா லல்லது **தீராது**

சந்திரிகா ஹாசையின் விரகபதப் பாடலில் அவிநயச் சிறப்புடன் அலங்காரத் தமிழ்நடையில் தொடைவிகற்பம் அமைய அடிதோறும் இயைபுத்தொடை பொருந்தச் சிறப்பிக்கப் பெற்றிருத்தல் காணலாம்.

இவைபோன்றே 22-ம் தருவில், சந்திரிகா ஹாஸையின் அழகையும் அவள் குணச் சிறப்பையும் கூறும் பகுதியில், இசைத்

தமிழின் தொடை நயம் காணலாம்.'' நெறியாள், சிறியாள், பிரியாள், அறியாள், கவட செள்ளளவு இல்லாள். எதிர் நில்லாள், அன்புள சொல்லாள். அனங்கன் கணைவில்லாள், மாதரை ஏகாள், பொய்பேசாள், சிவனார்பதம் நேசாள் சந்தனம் பூசாள்'' என்பன போன்ற நயமிக்க அடுக்குச் சொற்களைக் காணலாம்.

முன்குறிப்பிட்டது போல் அனைத்துப் பாடல்களிலும் ஒற்றொடு புணர்ந்த வல்லின எழுத்தை மிகுதியாகக் கொள்ளாமல் இசைப்பாட்டு அமைந்திருப்பதைக் காணலாம்.

தொடைவிகற்பம் அமைந்த எளிய இனிய பசுந்தமிழ்ப்பாக்கள் இசையமைதி, அவிநயப்பாங்கு, பொருந்த. 27-ம் தருவிலும் காணலாம். விரிவு கருதி எடுத்துக் கூறவில்லை.

இராச கன்னிகை சந்திரிகா ஹாசைக்கு சித்தபுருடன், சகசியின் புகழை ஏற்றமுடன் கூறுவதற்காக, பல நாட்டு மன்னர்களைப் பற்றியும் கூறி, அவர்கள் சகசிக்கு நிகரானவர் அல்லர் என்றும் சொல்லி, அவர்களிடம் இருக்கும் குறைகளைக் கூறும் தருவு 8. மிகவும் சுவைமிக்கதாகும்,

''அங்கத தேசராசன் சிங்காரம் உள்ளவனல்லன், வங்காள தேசராசன் சங்கீதம் அறியான், கொங்கதேசராசனிடம் தங்கம் இல்லை, மச்சதேசராசன் துச்சன், பெரியவரைத் தூஷணம் செய்பவன், குக்கரதேசராசன் உச்சிதவிநோதங்கள் அறியான், கேரளதேசராசன் காகித்தியம் அறியான், கௌவீர தேசராசன் கைவிட்டுக் கொடுக்கமாட்டான், கொங்கணதேசராசன் இங்கிதம் இதயம் அறியான், சாளுவதேசராசன் கோள் கேட்டுக் கொண்டாடுவான், கல்யாணதேசராசன் இல்லாத கோபம் உள்ளவன், மகததேசராசன் வகையறியாமல் வாது செய்வான்'

இவ்வாறு பிறநாட்டு மன்னர்களிடம் உள்ள குறையை கவிஞர் சுட்டிக்காட்டுவது சிந்தனைக்குரியது. சகசியின் அவைப் புலவர், இத்துணை இயல்பாக, பிற நாட்டு மன்னர்களைப் பற்றிக் குறை கூறியிருப்பது, பொருளற்றது என்று கருதுவதற்கு இல்லை.

கவிஞர், சந்திரிகாஹாசைக்கு, சகசிமன்னனின் பெருமை பற்றிக்கூறுவன தருவுகள் 10, 11, 12 "சகசியை **சோழேந்திரன்** என்று, கூறி. சோழேந்திரன் சரித்திரத்தை சொல்கிறேன் என்கிறார்.

"சத்தியத்தில் அரிச்சந்திரன், தானத்தில் கர்ணன், நித்தியத்தில் மார்க்கண்டன், நீதியில் குபேரன், புத்தியில் பிருகஸ்பதி, புசபலத்தில் பீமன், வித்தையில் ஆதிசேடன், வில்லுக்குவிசயன், சுந்தரத்தில் மன்மதன், சுரதத்தில் ஸ்ரீ கிருஷ்ணன், பொறுமையில் தருமன், குளிர்குணத்தில் பூர்ண சந்திரன், சாகித்தியத்தில் பும்பாவ சரஸ்வதி, கம்பீரத்தில் சமுத்திரன், தைரியத்தில் மகாமேரு சரணடைந்தவரைக் காப்பதில் ஸ்ரீ ராமன், வைபவத்தில் தேவேந்திரன்"

இவ்வாறு மற்றமன்னரைக் காட்டிலும் தகுதிகள் பல பெற்றவன் சகசி என்று கூறப்பெறுகிறது.

சந்திரிகாஹாசையின் விருப்பத்துக்கு இணங்க சித்தபுருடன் தரு 11, ல், சகசியின் அழகையும் தரு 12 ல் சகசியின் வம்ச சரித்திரத்தையும் கூறுகின்ற பகுதிகள் சிறப்பானவை சகசிராசன் பௌத்திரன், ஏகாராசன் புத்திரன், தஞ்சைபுரீசன். தீபாம்பா கருப்ப சுதாப்தீ தீரன் சோழமண்டலேந்திரன் மகாத்துவசன் சகசி வாசன்' என்று 12 ம் தருவில் கூறப்பெறுகிறது.

சகசியின் பாட்டனார் பெயரும் சகசி. சகசியின் தந்தை ஏகோசி, சகசியின் தாய் தீபாம்பாள் மகரக்கொடியுடையவன், சோழமண்டல மன்னன் என்ற விளக்கம் காணலாம்.

**சதயன் சகசி மன்னன்**

மாமன்னன் இராசராசன் சதய நக்ஷத்திரத்தில் பிறந்த காரணத்தால் தஞ்சையில் ஐப்பசி மாதம் **சதய விழா** சிறப்பாகக் கொண்டாடப்பெறுவதை அறிவோம்.

இந்நாடகத் தலைவன் சகசி மன்னனும் சதய நக்ஷத்திரத்தில் பிறந்தவன் என்பதை, நாடக ஆசிரியர் கூறுகிறார்.

"மதன சந்நியன் சோழமண்டல புரந்தரன் சதயன்" என்று 26–ம் தருவில் கூறுகின்றதை அறியலாம். இம்மன்னனும் ஐப்பசி சதயத்தில் பிறந்தவனோ என்று கருதமுடிகின்றது.

**ஏலபதம்**

இந்நாடகத்திலும், 'ஏலபதம்' என்ற மரபுக்குரியவை தருவுகள் 5, 6, 11 'வன்மீகேசுவர சுவாமி' பெண்ணே என்று முடியும் அமைப்பைக் கொண்டது.

**சோழ மன்னன் சகசி**

தரு 8ல் சோழ ராசேந்திரன்
தரு 11ல் சோழேந்திரன்
தரு 12ல் சோழமண்டலேந்திரன்
தரு 20ல் சோழ பூபாலன்
சோழதேசன்
தரு 22ல் அளகைப்பதியூரன்
தரு 25ல் சோழமண்டல புரந்திரன்
தரு சோபனார் 31ல் தென்சோழமண்டலாதிபன்

இவ்வாறு சகசியை, சோழமன்னன் என்றே நாடக ஆசிரியர் புகழ்வதைக் கொண்டு, ஆசிரியருக்கு சோழநாட்டின் மீதும் சோழமரபின் மீதும் உள்ள பற்று புலனாகிறது. அது மட்டுமன்று, சோழமரபு வழியே நாட்டை ஆட்சிபுரிந்தவன் சகசி என்பதும் தெளிவாக உணரமுடிகின்றது.

**சகசியின் சிவபக்தி**

தரு 25-ல் "உலகமெல்லாம் ஒரு குடைக்கீழ் ஆளும்
வல்லவன் சிவனைப் போற்றும் மனமுள்ளோன்'

என்று குறிப்பிடுகின்றார் ஆசிரியர்.

**இன்பச் சுவை**

தரு 26, 27, 28, 29 இவற்றில் சந்திரிகாஹாசை சகசி மன்னனிடம் காதல்கொண்டு பாடும் இன்பச்சுவை மிக்க பாடல்கள் சுவை மிக்கவை.

இசையும் தாளமும் அவிநயமும் இணைந்த முறையில் தமிழிசைப் பாக்கள், வருக்கமோனை, எதுகை, இயைபு, மொழிப்பு, முரண், அடுக்குச்சொற்கள் முதலிய யாப்பமைதி கொண்டு கருத்துச் செறிவுடன் உள்ளவை. அவற்றின் நயத்தை எழுதுவதாயின் விரிவுறும்.

"தன்மமோ, வன்மமோ, சன்மமோ, கன்மமோ,ரம்மியமோ" எனவும்

"முத்துமாலை நீராக, முடிமாலை சருகாக
மெத்த மனசு நோக விழியில் புனலாகுக"

ஓடுமோ, சரீரம் வாடுமோ, மறக்கக் கூடுமோ, கிள்ளை வாதாடுமோ, ஆசை நாடுமோ" எனவும்

"மாரன் கணைகள் தூவ, குயில்கள் கூவ, நிலவுமேவ, கொங்கை தாவ",

"நீதமோ, என்ன பேதமோ, மையல் ஒருவர் வீதமோ, விரோதமோ, வீடுகாதமோ" எனவும்

"நீ சேராததேதையா, சொல் சூதையா,
அணையும் இப்போதையா, கவடு ஆகாதையா"

என்றும் உள்ள பகுதிகள் தமிழ் மொழியின் சொல்லலங்காரச் சிறப்பைக் காட்டும்.

**வழக்குச் சொற்கள்**

எடுத்துக் காட்டாக 13 ம் தருவில், விம்முது, சுடுது, காணுது, நோகுது, ஆறாகுது மெலியுது, என்றும் 14ம் தருவில் கொள்ளுது, நினைக்குது, ஆகுது, நாடுது, என்றாது என்பன போன்றவை மிகுதியாக உள்ளன. மற்ற நாடகங்களில் உள்ளவை போன்றே உள்ளன.

**உரைநடைப் பேச்சு**

நாடகப் பாடல்களின் பாத்திரக் கூற்றுடன், ஆங்காங்கே உரை நடையில் சிறிது வசனப் பேச்சு நடையும் உள்ளன எடுத்துக்காட்டாக 54, 59, 65, 66, 67, 68, 70, 72-பக்கங்களில் காணலாம்.

**அவிநயம் செய்தி நாடகம்**

20-ம் தருவில் பாட்டிலும், சந்திவசனத்திலும் சித்தபுருடன் வித்தை ஆடுகிற மார்க்கம் கூறப் பெற்றுள்ளது. ராசகன்னிகை விரகபதம் பாடி ஆடியதும் உள்ளது. பக் 64ல் 'குந்தப்படிக்கு இராசகன்னிகை அவிநயித்துக் கொண்டிருக்கிற சமயத்திலே' என்று சந்திவசனமும் உள்ளது 13-ம் தருவு, விரகம் அவிநயிக்கிற மார்க்கம் என்று சந்திவசனம் உள்ளது.

**சிவபக்தி**

தருவு 5, 6 இரண்டிலும், வன்மீகநாதனை வழிபட்டு இராசகன்னிகை துதி செய்வது. சிவபக்திச் சிறப்பை விளக்கும் தருவுப் பாடல்; சகசியை அடைய, சிவபெருமானை, இராச கன்னிகை வேண்டிக் கொண்டு துதி புரியும் பாடல்கள்.

இந்நாடகம், மற்ற நாடகங்களைப் போன்ற இசைநாட்டிய நாடகப் பாங்குடையது. நடிக்கப் பெற்றது சகசி மன்னனின் பெருமையை விரித்துக் கூறுவதை நாடகப் பாங்கில் அமைத்துள்ள நாடக ஆசிரியர் போற்றத்தக்கவர்.

**சகசி குறவஞ்சி**

ஐந்து தமிழிசை நாட்டிய நாடகங்களால் குறவஞ்சி மரபில் இந்த நாடகம் படைக்கப் பெற்றுள்ளது. ஆசிரியர் தஞ்சைச் சகசி மன்னனின் அவைப்புலவரில் ஒருவரான முத்துக்கவி என்பவர்.

இந்நாடகச் சிறப்பைக் கூறுவதற்கு முன், குறவஞ்சி மரபு பற்றிச் சிறிது ஆய்வு செய்து கூறுவோம்.

**குறவஞ்சி நாடக மரபு**

தமிழ் மொழியில் பிற்காலத்தில் இலக்கியப்படைப்பு நூல் களின் வளர்ச்சியைக் கருத்தில் கொண்டு 96 வகை பிரபந்தம் என்று கூறுவர் அவற்றில் 'குறம்' என்பதும் ஒன்று.

குறவஞ்சி என்பதற்குப் பொருள் குறவர் குலப் பெண் என்று கூறுவர் அறிஞர். வஞ்சி என்றால், வஞ்சிக் கொடிபோன்ற

பெண் என்பர். 'குறமகளையே 'குறவஞ்சி' என்று அழைத்தனர் போலும், என்பர் என ஆசிரியப்பிரான் உ. வே. சாமி நாதையரவர்கள்.

குறிஞ்சி நிலத்தவர் குறவர். மலையும் மலைசார்ந்த இடமும் குறவர்கள் வாழ்ந்த இடங்கள் எனினும் மலைக்குறவர் எங்கும் திரிவர். உரிமைபற்றி குறிஞ்சி நிலம் கூறப்பெறுவது தமிழ் மரபு.

'குறமகள் இளவெயினி' என்ற பெண் புலவர் புறநானூற்றில் 157-ம் பாடலைப் பாடியவர். குறமகள் குறியெயினி' என்ற பெண்புலவர் நற்றிணையில் 357-ம் பாடலைப் பாடியவர்.

குன்றக்குறவன் (ஐங். 251)
குறமகன் (ஐங். 285)
குன்றக்குறவர் (ஐங். 284)
குறமகள் (குறுந். 95)
குறவன்மகள் ஆணை (பரிபா. 8)

இவ்வாறு குறவன், குறமகள் பற்றி, சங்க இலக்கியங்கள் கூறும்.

குறக்குடியில் பிறந்த குறமகளுக்கு குறவஞ்சி எனப்பெயர் கொடுத்தனர்.

குறவஞ்சியின் இயல்பை விளக்குவது குறவஞ்சி நாடகம்.

சகசி மன்னனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு படைக்கப் பெற்ற நாடகம் குறவஞ்சியாகும். இந்நாடகத்தில் இசையமைதி, அவிநயச்சிறப்பு, நாடக அமைப்பு, நாடகஇயல் யாப்பமைதி அனைத்தும் நிறைந்துள்ளன.

**வஞ்சிக்கு விளக்கம்**

தமிழ் யாப்பியலில், வஞ்சிப்பா என்பதும் ஒன்று. வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி, பரிபாடல், மருட்பா ஆகியவற்றில் வஞ்சிப்பாவும் ஒன்று.

புறத்திணை மரபில், வரலாற்றுவஞ்சி, செருக்கள வஞ்சி, யானைவஞ்சி முதலியன பற்றி பாக்கள் உள்ளன.

புறத்திணை மரபில் வஞ்சி, நொச்சி, வாகை, தும்பை ஆகிய பூமாலைகளை அணிந்து போர் நிகழ்ச்சிகளில் துறைகள் பல உள்ளன என்பதும் அறியலாம்.

மன்னர் படையெழுச்சி பற்றிக்கூறுவது வரலாற்று வஞ்சி, போர் களத்தின் இயல் பற்றிக் கூறுவது செருக்கள வஞ்சி, யானைத் தொழிலைப் பற்றிக் கூறுவது யானைவஞ்சி.

''எஞ்சாமரபின் வஞ்சிபாட'' என்று ஊன் பொதி பசுங் குடையார் பாடினார். புறம். 378.

''வாடாவஞ்சி பாடினேனாக'' என்று மதுரை மாடலன் குமரனார் பாடினார். புறம். 394.

இவ்வஞ்சிப் பாடல்கள் யாவும் புறத்துறையில் பாடப் பெற்றவை. குறவஞ்சிக்கும் இவ்வஞ்சிக்கும் எத்தொடர்பும் இல்லை. 'பேர்வஞ்சி' என்ற நூலும் பழமையில் இருந்ததாக அறிகிறேன்.

''கலியே வஞ்சி கையறவுரையார்'' என்பது பன்னிரு பாட்டியல். இன்பச்சுவை பற்றி, கலி. வஞ்சிப்பாக்களால் அன்றி பிறபாக்களால் புலவர் பாடுதல் இல்லை என்பது விளக்கம். எனவே இன்பச்சுவை பற்றி எழுந்த குறவஞ்சி நாடகம் கலிப்பாவினத்தால் இயற்றப் பெற்றது என்பதும் அறியலாம். அகத்தினை மரபில் வந்த குறவஞ்சிக்கும் புறத்தினை மரபில் கூறப்பெறும் வஞ்சிக்கும் எத்தொடர்பும் இல்லை. நாடக வழக்கு, கலி, பரிபாடலால் பாடப்பெறும் புலனெறி வழக்கம் பற்றி முன்பே கூறப்பெற்றுள்ளது அறியலாம்.

**குறம்**

'குறம்' என்ற அமைப்பில், குமரகுருபரர் மீனாட்சியம்மை குறம் என்ற படைப்பை இயற்றினார். இதில் குறி சொல்பவள் மீனாட்சியம்மை; மீனாட்சி அம்மையைத் தலைவியாகக் கொண்டு பாடப்பெற்றதே மீனாட்சியம்மை குறம்.

**கட்டுப்பார்ப்பவர் குறப்பெண்கள்**

குறிஞ்சி நிலத்துக்குரிய குறப்பெண்கள் கட்டுப்பார்ப்பவர்கள். கட்டுப்பார்க்கும் குறமகளைக் குறவஞ்சி என்று கூறினாராதல்

வேண்டும். கட்டுப்பார்த்தல் என்பது குறி கூறுதல். கட்டுப் பார்க்கும் குறத்திக்கு கட்டுவிச்சி என்றும் பெயர் உண்டு.

> " அகவல் மகளே மனவுக் கோப்பன்ன (......)
> இன்னும் பாடுக பாட்டே, அவர் நன்னெடுங்குன்றம்
> பாடிய பாட்டே" (குறுந் - 23)

இவளைக் கட்டுவிச்சி என்பர். இக்கட்டுவிச்சியான குறப்பெண் ணின் கையில் 'கோல்' ஒன்றும் உண்டு. குறி சொல்லப் பயன் படுவது. குறவஞ்சி நாடகங்களிலும் குறவஞ்சியின் கையில் கோல் உண்டு.

> குறுந். 23, 298, அகம். 97, 98, 152, 195, 208
> புறம். 152, மதுரைக் 223 பெருங்கதை. 37-375,
> திருவாய்மொழி 4-63, திருக்கோவை 83, 84, 85
> திணைமாலை நூ. 125.

இவ்விலக்கியங்களில் காணலாம்.

> "வெண்கடைச் சிறுகோல் அகவல் மகளிர்" குறு. 298
> "நுண்கோல் அகவுனர்" அகம். 208

தொல். களவி. 24ல் "கட்டினும் கழங்கினும் வெறியென இரு வரும் ஒட்டிய திறத்தால் செய்திக்கண்ணும்" என்பதற்கு நச் சினார்க்கினியர் உரைவருமாறு:

"கட்டுவிச்சியும் வேலனும் தாம் பார்த்த கட்டினானும் கழங்கினானும் தெய்வத்திற்குச் சிறப்புச் செய்யாக்கால், இம் மையில் தீராதென்று கூறுதலின் இவ்விருவரும் தம்மில் ஒத்த திறம் பற்றியதனையே செய்யும் செய்தியிடத்தும்" 'திறம்' என்றவதனால் வேறு வேறாகவும் கூறப்படும். (தொல். 19-24).

எனவே கட்டுவிச்சியும் வேலனும் குறவஞ்சி நாடகத்தில் வரும் கதைப் பாத்திரங்களான, சிங்கி சிங்கனையே நினைவு கூறச் செய்கிறது கட்டுப்பார்த்தல் என்பது, முறத்தில் நெல் வைத்து எண்ணுதல் சிறு முறத்தில் நெல்லைப் பரப்பி ஒற்றை இரட்டை பார்த்துக் கூறுதல். இவ்வியல்பையே குமரகுருபரர் மீனாட்சியம்மை குறத்தில் கூறுகிறார் (மீ.கு.26)

சங்க இலக்கியமான நற்றினை 288-ல்
"செம்முதுபெண்டிரொடு நெல் முன்னிறீசி
கட்டிற் கேட்குமாதலின்" என வருகின்றது
பெருங்கதை 37-235 ல்
"சேரியாயத்தொடு செம்முதுப்பெண்டிரொடு
கட்டறிமகடூஉ, கடிமுறத்திட்ட வட்ட நெல்லும்"

என வருகின்றது

திவ்யபிரபந்தம் சிறிய திருமொழி 23ல்
"கட்டுவிச்சி கட்டேறி, சீரார்சுளகிற"

என வருகின்றது.

கட்டுப்பார்த்தல் திருக்கோவையாரில் 283ல் உள்ளது எனவே சங்ககாலம் தொட்டுக் கூறப் பெறும் இம் மரபு குறவஞ்சி நாட்டிய நாடக மரபுக்குரிய சான்றுகளாகும் என்பதை மறுப்பதற்கில்லை.

**குறத்திபாட்டு**

"இறப்பு நிகழ்வு எதிர்வு என்று முக்காலமும்
திறப்பட உரைப்பது குறத்திபாட்டே"
குறத்தி பாங்கும் அதனோரற்றே" (பன்னிருபாட்டியல்
334 335)

இச்சுத்திரங்கள் பன்னிருபாட்டியலில் இனவியல் என்றபகுதியில் உள்ளன.

பன்னிருபாட்டியலில் 'பாவினம்' என்ற தலைப்பில் "குற்றமில் உழத்தி, குறத்தி பாட்டே" (171) என்று கூறப் பெறுகின்றது' பாவின வகையில் 52 வதாகக் குறத்தி பாட்டு கூறப்பெறுகின்றது

நவநீதப் பாட்டியல் என்ற யாப்பிலக்கண நூல், கி.பி 14 ம் நூற்றாண்டிற்கு முற்பட்டது நவநீதநடர் என்பவர் இயற்றியது.

102 காரிகைச் செய்யுள் உள்ள நூல். இந்நூலிலும் குறத்தி பாட்டுக்கு விளக்கம் உள்ளது. பன்னிரு பாட்டியல் போன்றே

கூறப்பெறுகிறது. ஆனால், பன்னிருபாட்டியலின் காலம் 12-ம் நூற்றாண்டுக்கு முற்பட்டதென்பர் அறிஞர்.

வெண்பாப் பாட்டியல், சிதம்பரப் பாட்டியல், பாப்பாவினம், இலக்கண விளக்கம் ஆகியவை பிற்காலத்தவை. வெண்பாப் பாட்டியலில் 'குறத்தி பாட்டு' கூறப்பெறவில்லை.

'குறத்தி பாட்டு' என்பது பற்றி, பன்னிருபாட்டியல் நவநீதப் பாட்டியல் இரண்டும் கூறுகின்றன.

தொல்காப்பியம் குறிப்பிட்ட 'கட்டுப் பார்த்தல், என்பது குறிசொல்லுதலாகும். அதனைப் பின்பற்றி, சங்க இலக்கியங் களான நற்றிணை, குறுந்தொகை அகநானூறு முதலிய நூல் களில் குறவர் மரபுக்குரிய குறி கூறுதல் கூறப்பெற்றுள்ளது.

**குறவஞ்சிக்கு இலக்கணம்**

நவநீதப் பாட்டியல் நூல் (20, 21, 22) குறவஞ்சிக்கு இலக்கணம் கூறுகின்றது. வருமாறு.

' தலைவன் பவனிவருதல், நங்கை காமம் உறுதல், மோகினி வருகை, உலாப் போந்தவனைத் தெரியமாலாய் மதித்து முதலியனவும் ஆலம்பனம் பாங்கிவினாவல் உரைத்தனுமே, அவனைப் பழித்தல், புகழ்தல், தூது வேண்டலுமே, அவள் அடையாளம் குறத்தி வருதல் கல்வளம், வினாச்சொல், அவர் ஊர் கிளை வளம், சொற்குறி, சொன்னவை கூறல்வினா, அவள்தேப் பரவல், குறிநல்வரவு, பரிசு ஈதல், குறவன் வருதல் புள்வருதல், கண்ணிகுத்தல் புறப்படுத்தலுமே — குறத்தியைக் காமுற்றுத்தேடுதல், குறவன் நற்பாங்கனொடு குறத்தி அடை யாளம் கூறுதல், குறவன் குறத்தி காண்டல், குறவன் அணிமுதற் கொண்டு ஐயுற்றுவினாவுதல், உரைத்தல் குறத்தி இவை உறுப்பு — குறவஞ்சியதே'

இம்மரபு பின்பற்றப்பட்டு, குறவஞ்சி நாடகம் இயற்றப் பெறுதல் வேண்டும். மிக்கும் குறைந்தும் வருவதும் உண்டு.

சகசி குறவஞ்சியில் இவ்வமைப்பு நிறைந்துள்ளது. மற்ற, குறவஞ்சி நூல்களிலும் காணலாம்.

கலம்பகம் என்ற பிரபந்த அமைப்பில் குறம், மரம் என்பன உண்டு. பாட்டியல் மரபியல் குறவஞ்சி இரண்டுக்கும் குறம் இலக்கணம் உள்ளது.

இரண்டிலும் தலைவிக்கு, குறத்தி என்பவள் தலைவன் சிறப்பும் வருகையும் பற்றிக் குறி கூறும் செய்தியே உள்ளது.

"குழகர் மகற்குக்கொடுத்த குடியிற் பிறந்த குறமகள் யான்" என்பது காசிக் கலம்பகம் (பா 64) 'குறத்தி தன் குடிப் பெருமை கூறி முறத்தில் இட்ட நெல்லை, வறுத்துப்பார்த்துக் குறி கூறுவேன், என்று கூறுதல் பாதிரிப்புலியூர் கலம்பகத்தில் (பா 74) கூறப்பெறுகிறது. குறத்தி குறி கூறும் பாங்கு தமிழ் மரபு.

மீனாட்சியம்மை குறம், துரோபதை குறம், விதுரன் குறம் வள்ளியம்மை குறம், முன்னொலியாள் திறம் என்பவை, இசையமைதி பெற்ற பாடல்களைக் கொண்டவையே குறம், குறவஞ்சி இரண்டும் உட்பொருளில் ஒன்றே. குறவஞ்சியில் வரும் பல பகுதிகள் குறத்திலும் வருகின்றன. திறம் என்ற படைப்பு இசையமைதி கொண்டதேயாகும். குளுவன் நாடகம், என்ற அமைப்பை இணைத்து குறவஞ்சி நாடகம் தோன்றியது என்பர் அறிஞர்; இதுமேலும் ஆய்வுக்குரியது.

'குறவஞ்சி' நாடகம் என்பது, அவிநயத்துக்குரியனவான இசைப்பாடல்களைக் கொண்டு, நாட்டிய அமைதி, கதைப் போக்கின் சிறப்புடன் அமைந்துள்ள படைப்பாகும்.

ஐந்து தமிழிசை நாட்டிய நாடகங்களில் ஒன்றான சகசி குறவஞ்சி, மற்ற நாடகங்களைப் போன்றே, சந்திவசனம், உரையாடலான பேச்சுநடை, அடுத்தடுத்துத் தொடரும் கதைச் சிறப்பு, இசைப் பாடல்களுக்கு ஏற்ப அவிநயக்கும் நாட்டிய அமைதி கொண்டது. எனவேதான், தமிழிசை நாட்டிய நாடகம் என்று கூறப்பெற்றது.

முன் ஆய்வுரையில், தொல்காப்பியர் கூறிய பண்ணத்தி என்ற பா அமைப்பிற்கு, பேராசிரியர் வஞ்சிப்பாட்டை நாடக் மென்றே குறிப்பிட்டதைப் பற்றி விளக்கம் தந்துள்ளேன்.

எனவே, இக்குறவஞ்சி நாடகம், பழமைத் தமிழ் மரபில் உருவான படைப்பாகும்.

'குறவஞ்சி' படைப்பு நூல்கள் முப்பதுக்குமேல் உள்ளன வாக அறியமுடிகின்றது. புகழ்பெற்ற திருக்குற்றாலக் குறவஞ்சி கி. பி. 1715ல் இயற்றப் பெற்றதாகக் கல்வெட்டு, சான்று கொண்டு கூறப்பெறுகிறது. சகசி குறவஞ்சி கி. பி. 1685-1712க்கு உட்பட்ட காலத்தில் இயற்றப்பெற்றது அறியலாம். இப்படைப் புக்கு முன்னர், கம்பர் பாடிய சோழன் குறவஞ்சி என்ற நூல் உண்டு என்று அறிஞரும் கூறுவர். அப்படைப்பு கிடைக்க வில்லை.

இப்படைப்பை எழுதிய கவிஞர் முத்துக்கவி சகசிமன்னரின் அவைப்புலவரில் ஒருவர். குறவஞ்சி நாடகம் பற்றி, பழமை மரபு அறிந்து இப்புலவர் இந்நாடகம் படைத்துள்ளார். இக் குறவஞ்சி 'மலைக் குறவஞ்சி' என்பது நூலில் குறிப்பிடப் பெற்றுள்ளது.

சிலப்பதிகாரத்தில் நீர்ப்படை காதையில் (வரி. 244) "குறத்தியம் பாடிய குறிஞ்சிப்பாணி" என்று கூறப்பெறுகிறது. குறிஞ்சிப்பாணி, மலையும் மலைசார்ந்த இடமுமான குறிஞ்சிப் பாணி, மலையும் மலைசார்ந்த இடமுமான குறிஞ்சிநிலப்பாட்டு இசைப்பாட்டு என்பது தெளிவு. இந்நாடகத்தில் கூறப் பெறும் மலைக்குறவஞ்சி, இளங்கோ கூறிய குறத்தியர் மரபில் வந்தவள் என்பது அறியலாம்.

**பிற குறவஞ்சி நூல்கள்**

பிற குறவஞ்சி நூல்களில் சில : 1) சோழன் குறவஞ்சி, 2) தியாகேசர் குறவஞ்சி, 3) திருக்குற்றாலக் குறவஞ்சி, 4) அழகர் குறவஞ்சி, 5) விராலிமலைக் குறவஞ்சி, 6) சரபேந்திர பூபாலக் குறவஞ்சி மேலேகுறிப்பிட்டவற்றில் 4, 5, 6 எண்கள் உள்ளவை 18-ம் நூற்றாண்டைச் சார்ந்தவை. மேலும் பல குறவஞ்சி நூல்கள் உள்ளன என்று திருமதி பிரேமலதா அவர்கள் (பதிப்பாசிரியர், தியாகேசர் குறவஞ்சி குறிப்பிட்டு உள்ளார்கள்.

**குறவஞ்சியின் காலம்**

அபிதான சிந்தாமணியில், சோழன் குறவஞ்சி பற்றி குறிப்புள்ளது. கம்பர் பாடிய சோழன் குறவஞ்சி காலத்தால் மிகவும் முற்பட்டது. கி.பி. 12ம் நூற்றாண்டுக்கு முற்பட்டவர் கம்பர்.

எனவே கம்பர் இயற்றிய சோழன் குறவஞ்சியை அடுத்து, கிடைத்துள்ள குறவஞ்சியே, சகசி குறவஞ்சி எனலாம்.

முத்துக்கவி பாடிய சகசி குறவஞ்சியின் காலம் கி.பி. 1684—1712. எனவே 17—ம் நூற்றாண்டுப் படைப்பாகும்.

**இரண்டு குறவஞ்சிகள்**

தியாகேசர் குறவஞ்சியும் சகசி மன்னர் காலத்துப் படைப் பாகும். தியாகேசர் குறவஞ்சியின் பாட்டுடைத் தலைவன் திருவாரூரில் கோயில் கொண்டுள்ள தியாகப் பெருமான் ஆவர்.

நாடக மரபில் வேத்தியல், பொதுவியல் என்ற இருமரபு களில் பொதுவியல் மரபில் படைக்கப் பெற்றது தியாகேசர் குறவஞ்சி.

'கடவுள் மாட்டு மானிடப் பெண்டிர் நயந்த பக்கம்' என்று தொல்காப்பியர் கூறிய மரபுக்கேற்ப அரசிளங்குமரி ஒருத்தி தியாகேசரிடம் காதல் கொண்டபாங்கில் அக்குறவஞ்சி இயற்றப் பெற்றது: அக்குறவஞ்சியைத் 'தெய்வக் குறவஞ்சி' எனல் பொருத்தமாகும். (தியாகே 26-27)

தியாகேசர் குறவஞ்சியில் கட்டியக்காரன் பிரவேசம் இல்லை. தெய்வக் குறவஞ்சியானதால், நாரதர் குறத்தியாக வருகிறார். தும்புரு குறவனாக வருகிறார். குறவஞ்சி நாடகத்துக்குள்ள அனைத்துச் சிறப்புக்களும், தியாகேசர் குறவஞ்சியில் உள்ளன.

தியாகேசர் குறவஞ்சியின், பாக்கள் அமைதியை நோக்கும் போது, சகசி குறவஞ்சியைப்பாடிய முத்துக்கவிஞரே அதனையும் இயற்றியிருப்பார் எனக் கூறலாம்.

தியாகேசர் குறவஞ்சியின் பதிப்பாசிரியரும் இக்கருத்தைக் கூறுகிறார்.

தியாகேசர் குறவஞ்சியில் 3,15,25,31 — பாக்களில் சகசி மன்னர் குறிப்பிடப்படுகிறார். எனவே சகசி மன்னர் காலத்துப் புலவரான முத்துக் கவிஞரே இப்படைப்பை இயற்றியவர் என்பது கருதமுடிகிறது.

பொதுவியலில் தியாகேசர் குறவஞ்சியான தெய்வக் குறவஞ்சியைப் பாடிய முத்துக்கவிஞரே வேத்தியல் மரபுக்கு, சகசிகுறவஞ்சியை இயற்றியதில் வியப்பில்லை.

தியாகேசர் குறவஞ்சி, திருவாரூர் கோயிலில் நடிக்கப் பெற்றது. சகசி குறவஞ்சி தஞ்சை அரண்மனையில் நடிக்கப் பெற்றது.

இரண்டு குறவஞ்சிகளிலும் குறத்தி குறிசொன்ன இடங்களைப் பற்றிக் கூறும் இடங்களும் ரேகை பற்றிக் கூறும் இடங்களும் தன் சிறப்பு கூறுமிடங்களும், ஒற்றுமையுள்ள பாங்கு உள்ளது படித்தறியலாம்.

| | |
|---|---|
| "கொத்து முத்துப் பகதலிட்டு" | (தியா 47) |
| "நாழிமுத்து, செங்கையில் அளந்து" | ( ,, 47) |
| "முத்துக்குறி பொய்யாது" | ( ,, 54) |
| "முத்துத் தொங்கல்" | ( ,, 59) |
| "முத்து முத்தான" | ( ,, 15) |

மேற்கண்ட சொல்லாட்சிகளைப் பற்றி அறியும் நிலையில் முத்துக் கவிஞரின் பெயர் நினைவு கூர்தற்குரியது.

தியாகேசர் குறவஞ்சியையும் சகசி குறவஞ்சியையும் பார்த்தே, சிவக்கொழுந்து தேசிகர் 19 ம் நூற்றாண்டில் இரண்டாம் சரபோசியின் மீது குறவஞ்சி இயற்றினார் என்பதும் அறியறாம்.

"வாசலிது வாசலிது!
மகராசன் வாசலிது!
சிலைமதவேள் சகசிராசன்

தினம் பணியும் வாசலிது'' என்று, தியாகேசர் குறவஞ்சியில் தியாகேசரின் திருவாயிலைப் பாடியதையே, சிவலக்கொழுந்து தேசிகர், சரபோசிக்கும் கூறிப் பாடியிருப்பதை அறியலாம்.

**திருக்குற்றாலக் குறவஞ்சியின் காலம்**

சகசி குறவஞ்சி கி.பி. 1684-1712 க்குள் பாடப் பெற்றது. சகசி மன்னனின் ஆட்சிக் காலமும் அதுவே.

திருக்குற்றாலக் குறவஞ்சியைப் பாடிய கவிஞர் திரிகூடராசப்ப கவிராயர் ஆவார். முத்துவிசய ரெங்க சொக்க நாத நாயக்கர், திருக்குற்றாலக்குறவஞ்சி இயற்றியமைக்காக திரிகூடராசப்பகவிராயருக்கு **குறவஞ்சி மேடு** நிலம் முற்றூட்டாக அளித்ததாகக் குறவஞ்சியில் குறிப்பிடப் பெற்றுள்ளது. காலம் சகம் 1640 — கி.பி. 1715 என்று அறியலாம் (திருக். பக் 14)

மற்றும் திருக் குற்றாலக்குறவஞ்சி, நடிப்பதற்கு உரியது என்று திரிகூடராசப்பகவிராயர் கூறவில்லை என்பது அறியத் தக்கது

''பலவளம் சேர் குறவஞ்சி நாடகத்தை
படிப்பவர்க்கும் கேட்பவர்க்கும் பலனுண்
டாமே'' (திருக். பா. 8)

எனவே திருக்குற்றாலக்குறவஞ்சி படிப்பதற்கும் படிக்கக்கேட்டு மகிழ்வதற்குமே உரிய தென்பது அறியலாம்.

சகசி குறவஞ்சி, நடிக்கப் பெற்ற தமிழிசை நாட்டிய நாடகமாகும்.

# சகசி குறவஞ்சி

சகசி மன்னனைப் பாடல் தலைவனாகச் கொண்டு முத்துக் கவிஞரால் இயற்றப்பெற்றது இக்குறவஞ்சி நாடகம். முத்துக் கவிஞர், சகசி மன்னனின் அவைப்புலவரில் சிறப்பான இடம் பெற்றவர். இக்கவிஞரைப் பற்றிய பிற செய்திகள் அறிய முடியவில்லை. இக்கவிஞரே, அதிரூபவதி கல்யாணம் என்ற இசைநாட்டிய நாடகத்தையும் இயற்றியவராவார். (இந்நூல் 1985ல் என்னால் பதிப்பிக்கப் பெற்று சரசுவதி நூலக வெளி யீடாக வந்துள்ளது). தியாகேசர் குறவஞ்சியையும் இக்கவிஞரே இயற்றியவர் எனக கருத முடிகின்றது. வேறு சான்று கிடைக்க வில்லை. சகசி மனனனின் அன்புக்கும் பெருமதிப்பிற்கும் உரியவர் இக்கவிஞர்.

''இயல் குறவஞ்சியாய்ப் பொங்கமாய்ச் சகசி பூபதிமீதில், அங்கிதமாக அருந்தமிழ் தன்னால், கருதிய முத்துக்கவியுரைத் தானே'' என்று இக்குறவஞ்சியின் கதாசங்கிரக அகவலில் முத்துக் கவிஞரே குறிப்பிட்டுள்ளார்.

இயல் என்பது இலக்கணம். குறவஞ்சியின் இலக்கணம் முழுமையாக அமையப் பெற்றதால் இயல் குறவஞ்சி என்றார் கவிஞர்.

சகசி மன்னனின் வேண்டுகோளுக்கு இணங்க இந்தக் குறவஞ்சியைப் படைத்த காரணத்தால் 'சகசி பூபதிமீதில் அங்கிதமாக என்று முத்துக்கவிஞர் விளக்கம் தந்துள்ளார்.

**கவிஞரின் தமிழ்ப்பற்று**

முத்துக்கவிஞர் முத்தமிழ்த்துறை போகிய பெரும்புலவர் காசியின் அவையில் தமிழ்வளம் பெறச் சிறப்புப்பணி புரிந்தவர். தம் குற வஞ்சியை 'அருந்தமிழ்' தன்னால் உரைத்தமையைத் தமிழ்ப்பற்றுடன் கூறுகின்றனர். 13வது தருவில் 'சகசியின்தூதுப்

பாட்டில், ''நயமுத் தமிழ் வாணரே புகழ் ஏத்தும் நரபத்'' என்றும், 43 ம் தருவில் ''நாவேந்தர் போற்றிய சகசி'' என்றும், ''கொழிக்கும் தமிழுக்கருள் சகசேந்திரன்'' என்றும், சகசியைப் புகழ்ந்து, அம்மன்னன் தமிழ்ப்புலவர்களை ஆதரித்து, தமிழ் மொழிக்கு ஏற்றம் அளித்த சிறப்பைக் கூறுகின்றார்.

**சோழநாட்டின் மீது பற்று**

முத்துக்கவிஞர், குறவஞ்சி நாடகத்தில் முத்தமிழ் வளர்த்த சோழ மன்னர் மரபையும் காவிரி வளம் பெற்ற நாட்டையும், நினைவு கூர்ந்து ஆங்காங்கே, பாடியிருப்பது சிறப்புக்குரியது. நாட்டுப் பற்றுடைய கவிஞரின் சிறப்பைப் பாராட்ட வேண்டும். 15-ம் தருவில், ''மருவும் காவிரி ஆளுவோன்'' என்றும், 22-ம் தருவில் ''சகசேந்திரன் ஆளும் சோழதேசத்தில்'' 23-லும் குறிப்பிடுகின்றார் என்றும்

27-ல் ''சகசேந்திரன் ஆளும் சோழதேசத்தில் விளங்கும் துய்ய காவேரியோடு'' என்றும்

25-ல் ''காவேரி நாட்டில் வாழ் அரசியே'' என்றும்
34-ல் ''நாகரிகம் ஓங்கிவயர் கோணாட்டில்'' என்றும்
36-ல் ''காவேரி நாட்டணங்கே'' என்றும்
37-ல் ''காவேரி நாட்டான்'' என்றும்
40-ல் ''காவிரி நாடு காவலன்'' என்றும்
41-ல் ''சகசி ராசன் துளங்கும் சோழநாட்டில்'' என்றும்

விரிவாகக் கூறுகிறார். சகசியையும், சகசியிடம் காதல்கொண்ட ராசகன்னிகையையும் அழைக்கும்போது, காவிரியையும் சோழ நாட்டையும் இணைத்துப் புகழ்கிறார்.

**அளகை**

தஞ்சை நகருக்கு அளகை என்ற பெயர் சிறப்பாக இலக்கியங்களில் கூறப்படுவது போன்றே, முத்துக்கவிஞரும், 24, 41, 42 மூன்று தருவுப் பாடல்களிலும் அளகை என்று குறிப்பிடு கின்றார்.

குறவஞ்சி நாடகத்தில், தஞ்சை நகரில், சகசிமன்னன் பவனிவரும் போது, இராசகன்னிகை ஒருத்தி காதல் அம்

மன்னன் மீது காதல் கொண்டு, விரகதாபத்துடன் சிந்தை தளர்ந்து, தூதுகள் அனுப்பி, முடிவில் குறத்தி ஒருத்தி வருகைதரவே அவளிடம் குறிகேட்டு, அதன்படி சகசிமன்னனை ராசகன்னிகை அடைகிறாள் என்பது தான் இந்நாடகம் என்பதனை முத்துக்கவிஞர், சுருக்கமாக அகவலில் கூறினார்.

**நான்கு குறச்சாதி**

இயல் குறவஞ்சியை இயற்றிய கவிஞர், குறவஞ்சி நாடக மரபை நன்கு ஆய்ந்து, தமிழ்மரபை உணர்ந்து, தொன்மையான குறவஞ்சியின் நான்குவகைகளைக் கூறுகிறார். இச்சிறப்பு வரலாற்றுப் பெருமை கொண்டதாகும்.

குறம், குறவஞ்சி என்பது பற்றி முன்பே ஆய்வுரையில் கூறப் பெற்றுள்ளது. முத்துக் கவிஞரே கூறும் குறச்சாதி நான்கு பற்றி இங்கே குறிப்பிடுவது இன்றியமையாதது.

தருவு 41-ல் ''பாடிய குறங்கள் பாடி, படித்து **விஸ்தாரம்** பேசி, நாடிய குறங்கள் சொல்லும் நங்கை எங்கள் சிங்கியாரை'' என்று குறிப்பிடுகின்றார்.

இக்குறவஞ்சியை 'விஸ்தாரக் குறவஞ்சி' என்று கூறுகிறார். 'குறம்பாடி' என்றது சந்கேதம், சங்கிரகம் என்ற அமைப்பைக் குறிப்பிட்டதாகும்.

குறவஞ்சிப்படைப்பு, சங்கேதம், சங்கிரகம், விஸ்தாரம் என்ற மூன்று பகுப்புடையது. குறம் என்ற தனி அமைப்பும் (திரௌபதை குறம்) கலம்பகம் போன்ற பிரபந்தங்களில் கூறப் பெறும் குறமும் சங்கேதம், சங்கிரகம் என்பதாகும். முத்துக் கவிஞரின் இக்குறவஞ்சி விஸ்தாரக் குறவஞ்சி என்பது அறியத் தக்கது.

15,ம் தருவில், குறவஞ்சியின் பிரவேசத்தைக் குறிப்பிடும் போது ''**மலைக் குறவஞ்சி** வந்தாளே'' என்றார். இம்மலைக் குறவஞ்சியையே 'ஒய்யாரக் குறவஞ்சி என்றும் உள் தருவில் குறிப்பிட்டார்.

தருவு 30ல், இராச கன்னிகையிடம், குறவஞ்சி தன் சாதிவளப்பம் கூறும்போது.

''தேசக் குறச் சாதி என்றும்
காட்டுக் குறச்சாதி என்றும்
மலைக்குறச் சாதி என்றும்
தேவக் குறச் சாதி என்றும்
இப்படி நாலுவகைக்
குறச்சாதி உண்டடியம்மே''

என்று கூறி, ''நான் மலைக்குறச்சாதியடியம்மே'' என்று குறிப்பிடுகின்றதை அறியலாம்.

மேலும், ''சகசேந்திரன் ஆளும் நாட்டில் வாழும் **தெய்வக் குறச்**சாதியைப் பார்க்கவந்தேனடியம்மே'' என்று குறிப்பிட்டு தஞ்சையில் வாழும் அருள் அடியார்களை தெய்வக்குறவர் என்று சிறப்பித்திருப்பதை அறியலாம்.

தியாகேசர் குறவஞ்சி, தெய்வக்குறவஞ்சி என்பதை இங்கே நினைவுகூற வேண்டும்

**வள்ளியின் மரபு**

மலைக்குறவஞ்சி என்றது, முருகன் மணந்து கொண்ட வள்ளியை நினைவு கூர்ந்து கூறியதாகும். தருவு 29ல் ''வள்ளியைக் கொண்ட முருகன், மாப்பிள்ளை யல்லவோ காண்'' என்று இம்மலைக் குறவஞ்சியே கூறுகிறார். வள்ளி குறப்பெண்ணன்றோ!

''சேயோன் மேய மைவரை உலகமும்'' என்பது தொல்காப்பியம். மலைசார்ந்த இடத்துக்கு முருகனே தெய்வம் என்று கூறப்பெற்றுள்ளது. முருகனை மணவாளனாகக் கொண்ட வள்ளி குறச்சாதி என்பதால், முருகனை மாப்பிள்ளை என்று மலைக்குறவஞ்சி குறிப்பிட்டதில் வியப்பென்ன? பழமைத்தமிழ் மரபு, இக்குறவஞ்சி என்பதற்கு வேறு எடுத்துக்காட்டும் வேண்டுமா?

விஸ்தாரக் குறவஞ்சியான இந்நாடகம் தமிழ் மரபுக்கு, கலங்கரை விளக்கம் எனலாம். விஸ்தாரமான குறவஞ்சியின் சிறப்பை ஓரளவு மட்டும் இங்கே காண்போம்.

2-வது தருவில், சகசியின்மீது காதல்கொண்ட இராச கன்னிகை பிரவேசம் கூறப்படுகிறது. சூத்திரதாரன் வசனத்தில், சகசி பவனி வந்தபோது, இராசகன்னிகை காதல் கொண்டாள் என்று குறிப்பிடுகிறான்.

இந்நாடகத்தில் இருக்கவேண்டிய கட்டியக்காரன் தரு காணப்பெறவில்லை. சூத்திரதாரன் சந்திவசனத்தில் பக். 88-ல் கூறப்படும் கட்டியக்காரனை இங்கே காண முடியவில்லை.

இராசகன்னிகையின் அரங்கப் பிரவேசத்தைக் கவிஞர், மிகச் சுவையுடன் கூறுகிறார். அழகு தமிழில், ஓசைநயத்துடன் இராச கன்னிகையின் கதாபாத்திர வருணனை அமைந்துள்ளது

தருவு 2 ''பங்கய மடந்தை சங்கீதக்கிள்ளை
சோலை இளமயில் வாலகோகிலம்
கீதவண்டு, கிளரும் அன்னப்பேடை
மாதர்க்கரசு''

என்ற பகுதிகளில் கவிச்சுவை காணலாம்.

'முடித்த கூந்தலில் மலர்ச்செருக்குடன் பால்மொழி படிந்த கண்ணி, 'அரும்பிடும் மார்பகத்தாள்' என்று கூறுகிறார்.

இராசகன்னிகை பிரவேசத்தை, அரங்கில் உள்தருவாகவும் (3) வெளிதருவாகவும் (4) கூறும் பகுதிகள், பாநயம் தொடை விகற்பங்கள் அமைந்தவை 'இராசகன்னிகை வந்தாள், ஒய்யார ராச கன்னிகை வந்தாள்'.

'மாரன்கணையால் மெலிந்து, நைந்து, முலைகள் பிசைந்து, மதியால் அயர்ந்து, சோலைக்குயில் கூவ, வேலை ஒலிசுளும் தாவ' இராசகன்னிகை வந்தாள் என்று சகசிமீது காதல் கொண்ட கன்னிகையைக் குறிப்பிடுகிறார்.

'கும்பமுலைகள் குலுங்க அம்புவிழி மயங்கவே சிலம்பிலம்ப, சுட்டிமின்ன பொட்டு எறிக்க, உல்லாசமாய் வந்தாள், என்னும் போது, நாட்டிய பாவனைக்கு, இசைப்பாக்களில் வடிவம் கொடுக்கிறார் கவிஞர்.

இதன் பின்னர் இராசகன்னிகை, விரகத்துயர் தாங்காமல், மன்மதன், சந்திரன், தென்றல், அன்னம், கிளி, வண்டு குயில், சகி ஆகியோரிடம் முறையிடும், அவிநய இசைப்பாக்கள் சுவை நிறைந்தவை.

மன்மதனும், நிலவும், தென்றலும் ராசகன்னிகையின் விரகத்தை மிகுதிப்படுத்தின; தாங்க முடியாமல் தவித்துப் புலம்புகிறார் இராசகன்னி,

"மன்மதா, நீசிலையை வளைத்ததேது, உனக்கு சிவசிவா என் செய்தேன் மன்மதா" (தரு 5) என்றும்

"வெண்ணிலாவே, சந்தனம் சுடுதையோ, செந்தனமும் கொதிக்குதே, இந்த வேளை தனில் நீயும் வெந்தணலாயுதித் தாயே" (தரு 6) என்று கூறி, "மோசம் வந்தால் ஒருவருக்கும், ரோசம் வந்து **சொல் ஒட்டாதே**" என்று கூறும் பகுதி கவிஞரின் கவிநயத்தை வெளிக்காட்டுகிறது.

"மதி நிலாவைப் போலவே, தென்றலே, நீயும் வந்தணைந் தாயோ, இதமாகச் செய்யாமல் தென்றலே" (தரு 7) என்று தென்றலால் தாக்கமுற்ற நிலையை இராசகன்னி கூறுகிறார்.

விரக வேதனையால் தத்தளிக்கும் இராசகன்னிகை, சகசியிடம் தூதாக, அன்னம், கிளி, வண்டு குயில், முதலியவற்றை அனுப்புகிறார்.

> "செங்கமலம் திகழ் அன்னமே
> செங்காலில் மடவன்னமே
> தங்கநிறம் பொரும் அன்னமே உன்
> தயவுக்கு நீதான் ஆகும்" (தரு 9)

என்றும்,

> "பேசவல்ல நல்ல கிளியே —
> நேசமான பசுங்கிள்ளையே —
> "பாலுடனே பழம் தருவேன், என்
> பங்கயக் கண்ணுடன் அணைப்பேன்
> கோலவரி கைவிடாமல்
> குலவிக் கொண்டாடுவேன் கிளியே" (தரு. 10)

என்று கிளியின் இயல்பைப் பைந்தமிழில் கூறுகிறார் கவிஞர்.

"பூவில் வண்டே ! பூவில் வண்டே !
வாவிதோறும் அலர்ந்து மணக்கும் தாமரைப்
பூவில் வண்டே" என்று கூறி

"**தென்னா தெனா**வென இசைக்கும்
மின்னனார் அளகம் மேவும் வண்டே" (தரு. 11)

என்ற பகுதியின் அழகுதான் என்ன? பழந்தமிழ் இலக்கிய மரபில், வண்டு, 'தென்னாதெனா' என்று இசையோடு ரீங்காரம் செய்வதைக் கூறும் கவிநயம் சிறப்பானது.

இப்பாடலில் புலவர், "சத்திரபதி பவனிக்கே, மெத்தவும் நான் மோகம் கொண்டேன்" என்று கூறி சகசியின் பவனியில் இராசகன்னிகை மோகம் கொண்டதைச் சுட்டிக் காட்டுகிறார்.

"மாவிளம் சோலைக் குயிலே
வசந்தகாலக் குயிலே
கூவிட **வாரீர்** குயிலே
குளிர்ந்த இசைக் குயிலே"

"ஆசை சொல்லி இந்நேரமே அழைத்து
ஓடிவாராய் குயிலே" (தரு. 12)

என்று தமிழ் இலக்கிய மரபுச் செய்தியை நயமான தமிழில் நவில்கிறார் கவிஞர்.

அன்னம் முதலானவற்றைத் தூது அனுப்பியும் பயனில்லை இராசகன்னி, தன்சேடியையே தூது அனுப்புகிறார் சகசியிடம்.

"உயிருக்கு உயிரான சகியே உறவுசொல்ல—
உன்னையல்லால் ஏது சகியே" (தரு. 13)

என்று சகியை அனுப்புகிறார். இராசகன்னிகைக்கு ஐயம் ஏற்படுகிறது.

மன்மதன், தருவு முதலான எட்டு, தருவுகளும் 'ஏலபதம் என்ற அமைப்பைச் சார்ந்தது என்பர் அறிஞர். இவ்விசைப்பாக் களை, பாடி, தனியே அவிநயிக்கும் மரபும் உள்ளது).

"தருணி நீ தூது சென்றால் — வருவாரோ, வாராரோ" (அதனால்,) "குறத்தியைக் குறிகள் கேட்க, வரிசையாய் அழைத்தோடி வாடி" என்கிறார்.

குறவஞ்சியை அழைத்து வருகிறாள் சேடி குறவஞ்சியின் அரங்கப் பிரவேசத்தைப் 'பொது' தருவாக (15)க் கூறி, குறத்தியை ஓவியத்தில் எழுதிப் பார்ப்பதைப் போல், இசைப்பா வரிகளில் எடுத்துக் காட்டுகிறார் கவிஞர்.

"பச்சைப்பொட்டும் வச்சிரச் சுட்டியும் நெற்றியில் இலங்க, நெடுவிழிசுழல, மொழிகள் கலகலென, — சங்குத்தாலியுடன், பொன்னின்மணி, பூனைக்காச்சி அணிந்து, குறக்கூடை இடுக்கி, கைக்குறி உரைக்கும் மாத்திரைக் கோலுடன் மலைக் குறவஞ்சி வந்தாளே"

மலைக்குறவஞ்சியின் வடிவழகைக் கூறி, அடுத்து (உள் தருவு) என்ற பாடலில், ஒய்யாரக் குறவஞ்சி, என்று மேலும் வருணிக்கிறார்.

குறவஞ்சி அரங்கிற்குள் புகுந்த அளவிலேயே, அவள் எவ்வளவு சம்பிரமத்துடன் வருகிறாள் என்பதை நயமாகக் கூறுகிறார் கவிஞர்.

அவள் அங்கலாவண்யமும், அலங்காரமும் அவிருபத்துடன் அவள் வரும் நடையழகும், இசைப்பாவில், கூறப்படும் சிறப்பு, சுவை மிக்கது.

ஜதிச் சொற்களுக்கு ஏற்ப, தமிழ்ச் சொற்களை அமைத்து, சொற்சீரடி, முடுகியல், தாழிசை ஆகிய இசைப்பாவிகற்பங்களுடன் கவிஞர் அமைத்திருப்பதைப் படித்தின்புறலாம்.

தருவு, 15, 16, இசைப்பாக்களின் நயம் எடுத்துரைக்க விரிவுறும் சில காண்போம்

"தடிக்கும் உத்தியில்
அடிக்கும் அலையினில்
வடிக்கும் அமுதெனை நாடவே
வெடிக்கு மருமலர்

தொடுக்கும் நல்தொடை
    முடிக்கு முருசுழல் — சோரவே
படிக்கும் வகைசில
    அடிக்கு மதனையும்
முடிக்கி அரியிடை — ஒடுச்கியே
"அடுக்கி நவமணி
    தொடுக்க நிரவிய
இடுக்கும் குறப்புட்டி இடுக்கியே"
    "... ... — — — ... ... ... — . ...
சிகர மாமுலை
    தளதளா தளாவென
வேல்விழி சுழலவே
    — கொடியிதாமென, மயிலுமாமென
— கொஞ்சும் கிளியென, விஞ்சும் குயிலென—
வஞ்சிவந்தாள்" என்று பல்சிறப்புடன் கவிஞர் கூறுகிறார்

குறவஞ்சியை இராசகன்னி சந்திக்கிறாள். குறவஞ்சி, தன் அனுபவத்தை, ஆற்றலை எடுத்துக் கூறுகிறார்

19வது தருவில், பூகோள் உற்பத்தியைக்குறவஞ்சி கூறுகிறார் சிருஷ்டி தத்துவங்களை, விளக்கும் அரியபாடல் இது.

குறவஞ்சி, இராசகன்னிகை "சோழ நாட்டன்னமே" என்பதுசிறப்பு.

20 வதுதருவு குறவஞ்சி, தான் கண்ட தேசங்களைப்பற்றிக் கூறுவது; அனைத்துத் தேசங்களையும் கண்டு இறுதியா **சோழ தேசம்** காணவந்தேன் என்கிறார் குறவஞ்சி,

21ல் மலைகளைப்பற்றிக்குறிப்பிட்டு, இறுதியில்'சுவாமிமலை காணவந்தேன்' என்று குறவஞ்சி கூறுவது, சகசியின் ஆட்சியில் உள்ள சுவாமிமலை என்பதும் தனக்கு மாப்பிள்ளை யான முருகன் தலமென்பதும் சுட்டிக் காட்டிய சிறப்பு.

22ல் மரங்கள் வகைகூறி, இறுதியில் சோழ தேசத்தில் அதிக தென்னைமரமும்செண்பகமும்சோலைகளும்சாலைகளும்நிறைந்த நேர்த்தி தனைக்காணவந்தேன் என்பது குறவஞ்சியின் கூற்று.

23ல் காட்டுவிலங்குகளைப் பற்றிக்கூறியபின், 'வேதவனம் தனியே துய்யமான், பன்றி,முயல் தொடர்ந்து பார்க்க வந்தேன்' என்று குறவஞ்சி குறிப்பிடுவது, சோழநாட்டில் வேதாரணியம் ஒன்று மட்டுமே காடு என்பதையும் சகசியின் ஆட்சிக்கு உட்பட்டது என்பதும் கூறுவதாகும்.

24-ல் பறவைகளின் வகை கூறப்படுகிறது.

25-ல் அரிய மூலிகைகள் சோழ நாட்டில் உள்ளன என்பது கூறப் பெறுகிறது.

26-ல் 'மலையில் இல்லாத வஸ்து' நாட்டில் உண்டோ என்று கூறிய மலைக்குறவஞ்சி, முத்துக்கள் பிறக்கும் வகை பற்றி விளக்குகிறார். அறிய செய்திகள் யானைத் தந்தம், கமுகு, மூங்கில், நாகம், வராகம் ஆகியவற்றினிடமாக முத்துத் தோன்றும் என்கிறார்.

27ல் தேசத்தில் உள்ள ஆறுகளையெல்லாம் வரிசைப்படுத்திக் கூறும் குறவஞ்சி, அங்கெல்லாம் சென்று நீராடிவிட்டு, சோழ தேசத்தில் விளங்கும் துய்ய காவேரியோடு வந்தேன், அங்குள்ள தீர்த்தங்களில் அதிகம் இதுவே' என்று காவிரியின் புகழ்பாடு கிறார்.

28-ல் சைவ வைணவத் தலங்களை குறவஞ்சி குறிப்பிடும் போது, பல தலங்களையும் குறிப்பிட்டு, பொன்னி வள நாட்டில் ஐயாறு பூந்துருத்தி, ஆரூர், சீயாழி, அருமறைக் காடு, புகலூர், குடந்தை, இடைமருதூர், திருப்பனந்தாள், கோறை, செங்காடு, பனங்காடு, திருவெண்காடு, நாகை, ஆகிய வற்றைச் சிறப்பாகக் கூறி, "தஞ்சை நகர்மேவி, மருவு தெய்வங் களைப் பணியவந்தேன்" என்று, தஞ்சைக்குப் புகழ் சூட்டு கிறார்.

29-ல் குறச்சாதியின் பெருமையை விரிவாகக் கூறுகிறார் குறவஞ்சி. குறவஞ்சி நாடகத்தின் இயல் முழுமையாக, குறவஞ்சி யின் கதாப்பாத்திரச் சிறப்பு விரிவாகக் கூறப்படுகிறது. குறவஞ்சி, தன் இனப் பெருமை கூறிவிட்டு, 'சகசேந்திரன்

நாட்டில் வாழும் தெய்வக் குறவர்தமைப் பார்க்க வந்தேன்!, என்பது எத்துணை உயர்வு என்பதை அறியலாம்!

இறையடியார்கள் கூட்டத்தை மிகுதியாகக் கொண்ட சோழநாட்டில், தஞ்சையில், இறையடிமைத் தொண்டர்களை 'தெய்வக் குறவர்' என்பது பழமை மரபு என்பதும் அறியலாம்.

குறவஞ்சி, முதலில் கூறப்பட்டது போன்று நான்கு குறச் சாதிகளைக் கூறுகிறாள். 4-வது குறச்சாதி என்பது இறையடி யார்கள்.

இங்கே தமிழ் மரபும் அறியத்தக்கது. மருத நிலத்துக்கு தேசக் குறச்சாதி, முல்லை நிலத்துக்கு காட்டுக் குறச்சாதி, குறிஞ்சி நிலத்துக்கு மலைக்குறச்சாதி என்பது அறியவேண்டும். நெய்தல் நிலத்துக்குக் கூறவில்லை. பாலை, நானிலத்துக்கும் பொது என்பதறியலாம்.

31-வது தருவில், குறவஞ்சி தான் குறிசொன்ன நாடுகளைப் பற்றி கூறுகிறார். ஆங்காங்கே, அவள் பரிசு பெற்றதைப் பற்றியும் சொல்கிறார். சகசி நாட்டணங்காகிய இராச கன்னிகைக்குக் குறிசொல்லிப் பரிசு பெறவந்தேன் என்கிறார்,

இதன் உண்மையை, குறவஞ்சி மரபு குறித்த உண்மையைத் தெளிவாக்குகின்றது இப்பாடல்.

குறவஞ்சி என்பவள் நாடுகளிலும் காடுகளிலும் திரிந்து ஆங்காங்கே குறிசொல்பவள். பாரத நாட்டின் பழமைக் கலைநாகரிகத்தை நினைவு கூறச் செய்கின்றது குறவஞ்சி மரபு.

பன்மொழியினரும், பன்னாட்டவரும், சிறப்பாக கேரளம், கருநாடகம், ஆந்திரம், மராட்டியம், அங்கம், ஒட்டம், மச்சம் ஆகிய நாடுகளிலும் குறவஞ்சி உலாவருபவள் என்பது அறியலாம்.

குறிசொல்ல வந்த குறவஞ்சி, இராசகன்னிகையிடம், குறிகேட்கும் முறை பற்றிக் கூறும் அழகு, தமிழ்க் குறவஞ்சி யின் சிறப்பு எனலாம் (தரு. 32).

"கால் நிறுவி, பந்தலிட்டு, கமுகு, வாழை நட்டு, தரை மெழுகிக் கோலமிட்டு **மெழுகுப் பிள்ளையார்** பிடித்து வைத்து

ஆவாகித்து, நூறு தேங்காயுடைத்து' சாலிகை வைத்து, மந்திரம் சொல்லி, மனதில் குறி நினைத்து வணங்கிக் கைகட்டி நின்று குறிகேளாய்'' என்கிறாள்.

சகசியின் ஆட்சியில் மலைக் குறவஞ்சி, தஞ்சைக்கு வந்தவள் விநாயக வழிபாட்டைப் பற்றியும் குறிகேட்பவருக்கு இருக்க வேண்டிய நெறி பற்றியும் விளக்கியிருப்பது, எத்துணை பக்திச் சிறப்பை எடுத்துக்காட்டுகின்றது என்பதை அறியலாம்.

33–ம் தருவில், குறவஞ்சி குறி கூறுவதற்குமுன் தெய்வங்களை வழிபடுகிறாள். இறுதியில் ''கொல்லா புரத்தம்மா குறக் கூடைத்தாயே'' என்று கூறுவது, மராட்டிய குலமன்னர்களின் குலதெய்வமான கொல்லாபுரத்தம்மனை நினைவு கூர்வதாகும்.

34–ல் கைரேகைகளைப் பற்றி அழகுபடக் கூறப்பெறுகின்றது.

35–ல் குறவஞ்சியின், பரிபாஷையான குறிவாசகங்கள் சுவை மிக்கவை.

37 முதல் 40 வரை சகசியின் புகழ், வீரம், கொடை, குலம், குணம், சௌந்தர்யம் ஆகியவை பற்றி இராச கன்னிகைக்கு, குறவஞ்சி கூறுகிறாள். சகசி இன்னும் மூன்று நாழிகைப்போதில் இராசகன்னிகையை மணப்பான் என்கிறாள்.

இந்நாடகத்தில், இனி சிங்கன், சிங்கி வருகையும் உரையாடல் பேச்சும் இடம் பெறுகின்றது.

குறவஞ்சியே சிங்கி. இந்தச் சிங்கியையும் சிங்கனான குறவனையும் பற்றிக் குறிப்பிடுவதே, துணங்கைக்கூத்து என்பர் அறிஞர். 'சிங்கிக்கூத்து' என்றும் கூறப்பெறும்,

இராசகன்னிகைக்கு, குறவஞ்சி குறிசொல்லிய பின்பு, இராசகன்னிகை மகிழ்ச்சி கொண்டு, குறவஞ்சிக்கு அரிய பரிசுகள் தருகிறாள்.

இந்நிலையில் குறவஞ்சியான சிங்கியைத் தேடிக்கொண்டு குறவனான சிங்கன் வருகிறான்.

'ஒய்யாரச் சிங்கன் வந்தானே' (தரு. 41)

என்று கவிஞர் அறிமுகப்படுத்துகிறார். சிங்கன் பறவைகளை வேட்டையாடிக் கொண்டு வருகிறான்.

> "திரிக்கையும் தெள்ளியும் கண்ணியும்
> சாடி முக்கி முக்கி விக்கி"

> "மேயினுமையே, இனம்கூடி மேயினுமையே
> சேருதையே பறவைகள் சேருதையே"

என்று கூறிக்கொண்டு வருகிறாள், நாடக அரங்கில் சிங்கன் தோன்றுகிறான், சூத்திரதாரன் அவனுடன் பேசுகிறான்.

இந்தச் சிங்கன், மலைக்குறச்சாதியாதலால் பல மொழிகள் பேசுபவன் என்பதை, சூத்திரதாரன் குறிப்பிடுகிறான். 'உத்தராதி மூன்று பாஷைகளிலும் கூப்பிடுகிறான்.

நகைச் சுவையுடன் சூத்திரதாரனும் சிங்கனும் உரைநடைப் பேச்சு மொழியில் பேசுகிறார்கள் இந்தப் பேச்சுமொழி, தஞ்சையில் முந்நூறு ஆண்டுகட்குமுன் பயின்ற மரபு என்பது அறியலாம். 42, 43ல், சிங்கன் பறவைகளைப் பற்றிக் கூறும் பகுதிகள் சிறப்பானவை.

இவ்வமைப்பு, காலத்தால் பின்னர் படைக்கப் பெற்ற திருக் குற்றாலக் குறவஞ்சியில் அமைந்துள்ளது அறியலாம்.

44-ல் சிங்கியைக் காணேன் என்று புலம்புகின்ற சிங்கனை, சூத்திரதாரன் விசாரனை செய்கிறான். நகைச் சுவை மிக்க உரையாடல் பேச்சு மொழியை இங்கே காணலாம். இறுதியாகச் சிங்கியை, சூத்திரதாரன் சிங்கனுக்குக் காட்டுகிறான்.

45-ல் சிங்கன் சிங்கி உரையாடல், கூற்றும் மாற்றமுமான கண்ணிகள், சுவை மிக்கவை சிங்கனும் சிங்கியும் உரையாடும் பகுதி, நாடக அரங்கில் பார்ப்பவர்களைச் சிரித்துக் குலுங்க வைப்பதாக உள்ளது. இராசகன்னிகை பரிசளித்தவற்றைக் குறவஞ்சி அணிந்து கொண்டிருப்பதை, வகை வகையாகச் சிங்கன் கேட்க, சிங்கி மறுமொழி அளிப்பது சுவையானது.

பின்னர் சிங்கனும் சிங்கியும் மகிழ்ந்து பாடுகிறார்கள்.

"கூடியி ருப்போம் வாடி சிங்கி
கொஞ்சிக் கொஞ்சி விளையாடி
வேடிக்கையாய்க் கொண்டாடி
விதவிதமாய்க் கவி சிந்துபாடி"

என்று சிந்து கவி பாடியதைச் சிறப்பித்துக் கூறுகிறார் கவிஞர்.

பின்னர், சிங்கியான குறவஞ்சி, இராசகன்னிகையை வாழ்த்துகிறார். சகசி மன்னன் கொலுவில் இருக்கிறார். இராசகன்னிகை, சகசியை வணங்கிப்பாடுகிறார்.

நாடக அரங்கில் சகசி தோன்றுவதில்லை என்பது அறிய வேண்டும். சகசி மன்னனின் முன்னிலையில் நாடகம் நடைபெறுகிறது.

சகசிமன்னனை, நாடக அரங்கில் இருக்கும் இராசகன்னிகை வணங்கி வாழ்த்தியவுடன், சகசிமன்னன் அவளை ஏற்றுக் கொண்டார் என்று சூத்திரதாரன் கூறுகிறான்.

பின்னர் மங்களம் பாடுவதுடன் நாடகம் நிறைவுறுகிறது. ஐந்துதமிழிசை நாட்டிய நாடகங்களிலும் இவ்வாறே, நாடக இறுதியில் சகசியின் அங்கீகாரம் பற்றி சூத்திரதாரன் கூறுவதாக உள்ளது அறியலாம்.

மற்றும் குறிப்பிடத்தக்கது என்னவென்றால் **'சிங்கன் சிங்கி'** உரையாடலும், இசைப்பாடலும் தனித்தன்மை கொண்டவை. இசைநாட்டிய நாடகத்துக்குள் 'கூத்து' முறைஇது என்பது அறியவேண்டும். நாடகத்துள், கூத்து என்பது பழமை மரபு. எனவே தான் 'சிங்கிக் கூத்து' என்று கூறப்பெறும்.

**வழக்குச் சொற்கள்**

எடுத்துக்காட்டாக, தொடுக்கு, முடுக்கு, முடிக்கி, இடுக்கி, அஞ்சு, மிஞ்சு (த 15) அடி (த 18) கானு (த 40) முக்கி, விக்கி (த 40) என்பவற்றைக் காணலாம்.

"பழுப்புடையிருகை முடக்கியடிக்கத்
துடக்கிய நடையது துணங்கைக் கூத்தே"

என்று கூறி இஃது 'சிங்கிக் கூத்து' என்பர் தக்கயாகப் பரணி உரையாசிரியர் (தக்க. காடு பாடியது 53).

# விஷ்ணு சாஹராஜ கல்யாணம்

இந்நாடகம் 'விலாசம்' என்ற தலைப்பில் படைக்கப் பெற்றது. இதனை இயற்றிய ஆசிரியர் பெயர், மற்ற செய்திகள் புலனாகவில்லை. சகசி மன்னனின் அவைக்களப் புலவரில் ஒருவரே இந்நாடகப் படைப்பையும் இயற்றியவராவார்.

இப்படைப்பு, சகசி மன்னனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு இயற்றப்பெற்ற இசைநாட்டிய நாடகமாகும்.

புராண வரலாற்றைக் கருவாகக் கொண்டு இயற்றப் பெற்ற நாடகம் 'புராண நாடகம்' என்றே குறிப்பிடலாம்.

சகசி மன்னனின் பெருமையை உயர்த்தும் சிறப்புடன் அமைந்த நாடகம். கதைச் சுருக்கம் தனியே கொடுக்கப் பெற்றுள்ளது. சகசிமன்னனின் ஈடுப்பாட்டுக்குறிய பல சிவத் தலங்களில் திருவீழிமிழலைப்பதியும் ஒன்றாகும். திருமால் சிவபெருமானை வழிபட்ட வரலாற்றைக் கொண்ட திருத்தலம் திருவீழிமிழலையாகும்.

திருமால், தம் மனைவியர் சீதேவி, பூதேவியுடன் திருவீழி மிழலைநாதரை வழிபடுகிறார்.ஆயிரம் செந்தாமரைப்பூக்களால் அருச்சிக்கிறார். பூவொன்று குறைந்துவிடவே, தம்விழியை இடந்து சாத்த முயன்றபோது சிவபெருமான் திருக்காட்சி தந்து அருள்புரிகிறார் என்பது புராணக் கதை.

இந்நாடகம் இந்தக் கதைக் கருவை, கற்பனை வளத்துடன் சகசி மன்னனுடன் பொருத்திச் சிறப்பிக்கின்றது.

உள்ளோன் தலைவனாக இல்லது கூறுதல் என்ற நாடக மரபில் சகசிக்கும் புராணக்கதைக்கும் தொடர்பு ஏற்படுத்தப் பெற்றுள்ளது.

சிவபெருமான், திருமாலை, பூவுலகில் சகசி மன்னனாகவும், சீதேவி, பூதேவி இருவரையும் கலிங்க மன்னன் புதல்வியராகவும் அவதரிக்கக் கட்டளையிடுகிறார். திருமாலின் அவதாரமான சகசியை சீதேவி பூதேவியரின் அவதாரமான கலிங்க மன்னனின் புதல்வியர் மணம் புரிகின்றனர். இதுதான் நாடகப் படைப்பு.

மற்ற நாடகங்களைப் போன்ற அமைப்பைக் கொண்டது தான் இந்நாடகமும். நாடகக்கதைப் பாத்திர சிருஷ்டியில், திரிகாலஞானி, சின்னப்பண்டாரம் என்ற இரு கதாபாத்திரங் கள் அறிமுகப்படுத்தப்படுகின்றனர்.

சிவபக்தியைச் சிறப்பிக்கும் நாடகம் ஆனதால், சிவயோகி யான திரிகாலஞானியும், நகைச்சுவைக்காக சின்னப் பண்டாரமும் நாடகத்தில் வருகின்றனர்.

**கணபதி**

சகசியின் வழிபாட்டுத் தலத்தில் சிறப்பான திருவாரூரில் கோயில் கொண்ட விட்டவாசல் கணபதி போற்றப்படுகிறார்.

"அருள்புரி கமலாலயம்மன் அளித்த பாலகன் ஆரூரில், கருணைசேர்விட்டவாசல் கணபதி காப்புத்தானே"

சகசிக்கு அருள் புரிந்த விட்டவாசல் கண்பதியைக் கவிஞர் இந்நாடகத்திலும் நினைவு கூறுகிறார்.

**கட்டியக்காரன்**

இந்நாடகக் கட்டியக்காரனின் கையில் கட்டியக்கோல் உள்ளது. கட்டியம் கூறுபவனும் நாடகத்தைத் துவக்கிவைப்பவனு மான கட்டியக்காரனுக்கு, கையில் கட்டியக்கோல் உள்ளது. குறிப்பிடத்தக்கது. சிர்த்தியான சொற்களைக் கட்டிச் சொல்லுபவன், கட்டியக்கோலைக் கையில் கொண்டு, நகைச் சுவை தோன்ற அரங்கில் தோன்றுபவன்.

**சகசி சோழதேசன் அளகையூரன்**

தரு 28, 33-ல் சகசிமன்னனைப் சோழதேசன் என்று அழைக்கும் கவிஞரின், சோழநாட்டுப் பற்று குறிப்பிடத்தக்கது.

தரு. 29, 33-ல் 'அளகையூரன் சகசி' என்றும் குறிப்பிடுகிறார். கவிஞர், தஞ்சை நகரின் தொன்மைப் பெயரான அளகையை நினைவு கூறுகிறார்.

**சகசியின் தமிழ்ப்பற்று**

தரு. 33-ல் "இசைந்த தமிழுக்கருள் எங்கள் சகசேந்திரா" என்று கூறும் கவிஞர் சகசியின் தமிழ்ப்பற்றைக் கூறுகிறார்.

**ஏலபதம் பாடல்**

தரு. 3-ல் 'ஆதியான சிவசங்கரா - புவியில்
அடியார்க் கெளிய சிரீசங்கரா"

என்று கூறி, 'சங்கரா' என்ற திருநாமத்தை 12 அடிகளின் இறுதியிலும் குறிப்பிடுகின்றார்.

10வது தருவில், மிழலைநாதரைத் துதிசெய்யும் பாடலில் 'சிவ சிவ மிழலைநாதா' என்று எட்டுவரிகள் கொண்ட 4 தருவுகளின் ஈற்றிலும் குறிப்பிடுகிறார்.

12வது தருவில் 'விஷ்ணுதேவா' 8 வரிகளிலும் குறிப்பிடுகின்றார்.

இசைப்பா அமைப்பில் இவ்வாறு அமைவதை 'ஏலபதம் என்பர். 27வது தருவும் 'சகசிராசேந்திரா' என்று தருவில் அமைந்துள்ளது.

**அந்தாதித் தொடையும் கூற்றும் மாற்றமுமான சம்வாத தருவும்**

11வது தருவில், இலக்குமியும் பூமிதேவியும் ஒருவருக்கு ஒருவர் கூற்றும் மாற்றமுமாக, கூறிக்கொள்ளும் அமைப்பு உள்ளது. 8 கண்ணிகள் உள்ளன. இத்தருவில் மற்றொரு சிறப்பும் காணலாம். தமிழிலக்கிய மரபுக்கேற்ப அந்தாதித் தொடையாக அமைந்துள்ளது.

25வது தருவில் திரிகாலஞானியும் கலிங்கமன்னனும் உரையாடுகின்ற கூற்றும் மாற்றமுமாக அமைந்துள்ள 16 தருவுகளும் அந்தாதித் தொடையாக அமைந்துள்ளது.

தமிழிசைப்பா அமைதியில், இப்பாடல்களில் தமிழ் யாப்பமைதியின் சிறப்பைக் காணலாம்.

**சிவபெருமானின் பெருமை**

3-வது தருவில்

"கோதியாய் வளர் சங்கரா
சுயம்பு லிங்கமான சங்கரா
எள்ளுக்குள் எண்ணெய் போல்சங்கரா
உலகம் — எங்கும் நிறைந்துவளர்சங்கரா"

13-வது தருவில்,

"புனைந்தீர் சடையில் அகத்தி,
புலித்தோலுடுத்திய மூர்த்தி"

"கலைவல்ல கங்காள
கண்மலக் கிசைதாளா
தலைமாலை அணிதோளா
தண்கங்கை மணவாளா"

"வேதகான லோலா
வெற்றிபெறு திரிசூலா"

என்றும் சிவபெருமான் சிறப்பிக்கப் பெற்றுள்ள இசைப்பாடல் களைக் காணலாம்.

தரு 19ல்

"அன்று புர மெரித்தோனே — கொன்றை
அம்புலி திகழ் அரவணிந்தோனே —
மன்றல்கமழ் சடையோனே — கலைமான்
மழுவேந்திய வரிசையுள்ளோனே
வெள்ளை விடையுடை யோனே — காலன்
மெய்யும் நடுங்க விலாவில் உதைத்தோனே
பிள்ளைக் கறியை யுண்டோனே — தொந்திப்
பிள்ளை முருகனைப் பெற்றெடுத்தோனே
மதகரியை யுரித்தோனே — அன்று
வாதாடிய காளி மறம் அழித்தோனே

நதியைச் சிரசில் வைத்தோனே — அரி
நான்முகன் தேடியரிதான வல்லோனே
அஞ்செழுத்தாக நின்றோனே — நஞ்சை
அமுதமாக எண்ணி அள்ளியுண்டோனே
பஞ்சசரனை எரித்தோனே - ஆரூர்ப்
பரனுக்குத் தூது பறந்து சென்றோனே''

இவ்வாறு சிவபெருமானின் திருவிளையாடல் சிறப்புக்களை யெல்லாம் இசைப்பாக்களில் மோனை, எதுகை, முதலிய யாப்பமைதியுடன் கவிஞர் அமைத்திருக்கும் மாண்பைக் காணலாம். இசையுடன் பாடித்துதிபுரியும் வண்ணம் பாடல் அமைந்திருப்பதைக் காணலாம்

## சிவத்தலங்கள்

திருமால் சகசி மன்னனாக அவதாரமாகப் பிறந்து, சிவத் தலங்களை வழிபட வேண்டுமென்று சிவபெருமான் கட்டளை யிட்டவாறு, சகசி மன்னன் வழிபாடு செய்த தலங்கள் பற்றி; தரு 14-ல் கூறப் பெற்றுள்ள சிறப்பைக் காணலாம்.

''ஏகேந்திரனிடத்தில், அவதாரமாய்ப் பிறந்தே அதில் அதிரூபமாய் வளர்ந்தே — புனைமகுடம் அணிந்தே''

''ஆரூர் திருவையாறு, குத்தாலம் இடைமருதூர் நீடூர் பொய்கை புகலூர் திருநீலக்குடி குடந்தை திருமங்கலக்குடி மாந்துறை, பனைந்தாள் திருக் கடவூர், வருமாயூரம் திருப் பாம்புரம், மறைக்காடு களாறு, வேளூர் திருத்துறைப்பூண்டி நல், வெண்காடு, பொன்னாம்பல், வாஞூர் திருநறையூர்திரு, வாலம் பொழில வழுவூர், மாகாளம் செங்காடும் திருமருகல்லருங் கொறுக்கை, நாகை திருக்குவளை, மிக, நலஞ்சேருமணைந்தே சாமமலை நன் நீலமலை, வீழிமிழலை முதலாய'' என்ற பட்டியலை அறியும் போது மராட்டிய மன்னனான சகசி, எத்துணை, சிவத்தலங்களில் ஈடுபாடு கொண்டிருந்தான் என்பதை அறியலாம்.

**இசைப்பாநயம்**

8 வது தரு

"ஒருத்தி மலரைத் **தாடி**
ஒருத்தி நின் றெண்ணிக் **கோடி**"

என்றும்

"அங்கே யிங்கே **சாராதே**
அரும்பிருந்தால் **தாராதே**"

என்றும் திருமால் இலக்குமி, பூமிதேவி இருவரையும் மலர் பறித்துவர கூறும் விதத்தில், அமைந்துள்ள பாநயத்தைக் காணலாம்.

14-ம் தரு

"ஆனா லினிக் **கேளாய்** — இந்த
அவனிக் கொரு **வேளாய்**
தேனார்மலர்த் **தோளாய்** — ஒரு
சன்மம் எடுத் **தாளாய்**"

என்ற பாடலில் இயைபுத் தொடை அமைதிகாணலாம் 15வது தருவில், கலிங்கமன்னன் வருகையைக் கவிஞர் அழகுறக்கூறும் பகுதிகள்.

"வாணர் கவிதை **படிக்க,** விளங்கு சக்கர
வாளக் குடை**பிடிக்க**
தோரண முரச**டிக்க**
துலுக்கர் காலைப் **பிடிக்க**
காணா யிடை **துடிக்க**
கன்னியர்கள் **நடிக்க**
கலிங்கராசன் வந்தானே"

என்று இவ்வாறு சம்பிரமத்துடன், கலிங்கமன்னனைச் சிறப்பிக்கின்றார் கவிஞர்.

28 வது தருவில், கலிங்கமன்னனின் மனைவியான சாரசாஹி சகசியைப் பார்த்து தன் பெண்களைப் பற்றி வருணிக்கும் பகுதியைப் பார்க்கலாம்.

"**தனித்தே** ஒருநாளும் **அறியாள்**
நல்ல **நெறியாள்**

தான் சேரும் குணம் **குறியாள்**
இனத்தில் தருணம் **அறியாள்**
தொட்டுத் **தெரியாள்**
என் கோடுகைப் **பிரியாள்**
கணத்துல் இங்கித **மறியாள்**
தானே **பிரியாள்**
கருத்தில் முன் கோப **மறியாள்**
அனைத்தும் உமக்**குரியாள்**
வகைக் **குரியாள்**
ஆலைக் கரும்பு **செரியாள்**
உம்மைப் **புரியாள்''**

இவ்வாறு பெண்ணியல்பையும் குண நலன்களையும் கூறும் இசைப்பாவில், யாப்பமைதியின் சிறப்பைகாணலாம். இசைப் பாவில் இவ்வாறு சொல்லலங்காரம் அமைத்து பாடுவதற்கும் அவிநயம் புரிவதற்கும் ஏற்றவாறு கவிஞர் இயற்றியுள்ள சிறப்பு, பாராட்டுதற்குரியது.

33-வது தருவில், இராசகன்னிகைகள் சகசிமன்னனைப் பார்த்துப் பாடி அவிநயம் புரியும் இசைப்பாநயத்தையும் அறியலாம்.

உதாரணமாக,

''எங்கள் நேசம் மகிழ்ந்து
கோடி பதங்கள் **பாடி** — மலர்கள்
சூடியே விளையாடி — மிகமுத்**தாடி**
விரக **மோடி** — தெரிய **நாடி**
அணையில் **கூடி** — மகிழ்ந்து''

''கண்டு இதழை **விண்டு**
மதுவை **யுண்டு** — களித்துக்
கொண்டு மருவு **செண்டு** — முலையிரண்டும் வருடி
வண்டுபோல் **துவண்டு** — அலைந்து''

என்ற பகுதிகள். அவிநயம் புரிவதற்கென்றே அமைக்கப் பெற்ற தமிழ் இசைப்பாக்கள். இப்பாக்களிலும் எத்துணை தொடை யமைதியைக் கவிஞர் புனைந்துள்ளார் என்பதைக் காணலாம்.

**நகைச்சுவைப் பாடல்**

திரிகால ஞானியும் சின்னப்பண்டாரமும் உரையாடும் பகுதியில் 18-வது தருவு, 21, 22-வது தருவுகள், நகைச்சுவைப் பாடல்கள் இந்நாடகத்தில் நகைச்சுவைமிக்க உரையாடல் இப்பகுதியில் காணலாம். பாடலும் அவ்வாறே அமைந்துள்ளது.

> "பச்சை மீனுக்கும்
> மொச்சைக் கொட்டைக்கும்
> இச்சை யாகிறோம்
> எவர்தருவார்களோ"
>
> "ஆண்டியாவது குடுமியில்லாதவன்
> தோண்டியாவது குசவன் வீட்டிலே
> பாண்டியாவது மதுரை தேசந்தான்
> பூண்டியாவது திருத்துறைப் பூண்டியே"
>
> "பிச்சனாவது தருமங்கள் செய்யாதவன்
> கொச்சனாவது ஒன்றும் கொடாதவன்"

என்பன போன்ற வரிகள், சின்னப் பண்டாரம் பாடுவது. சகசி மன்னன் காலத்தில், இத்தகைய சின்னப் பண்டாரங்கள் இருந்தனர் போலும்.

**தெலுங்குத்தருவு**

இந்நாடகத்தில் ஒரு சிறப்பு என்னவென்றால் நகைச்சுவையாக சின்னப் பண்டாரத்தின் பேச்சு மட்டுமல்லாமல், அவன், தெலுங்குமொழியிலும், நகைச்சுவையுடன் ஒரு பாடலைப் பாடுகிறான் என்பதே.

24-ம் தருவு, நகைச்சுவை மிக்க தெலுங்குப்பாடல். இப்பாடலில் தமிழும் கலந்துள்ளது.

**வழக்குச் சொற்கள்**

உதாரணமாக 7-வது தருவு. 'ஆச்சுதடி' (8) தாடி எண்ணிக் கோடி 23 சிறுக்கி 33 வேர்வை 'பூணும் காணும், தோணும்.

# காவேரி கல்யாணம்

இந்நாடகத்திற்கு, **'காவேரி சாகர கல்யாணம்'** என்ற பெயரும் உள்ளது. ஏட்டில் கண்டவாறு, காவேரி கல்யாணம் என்ற தலைப்பு கொடுக்கப் பெற்றது.

**சகசிமன்னன்**

இந்நாடகத்தை, தஞ்சை மராட்டிய மன்னன் சகசியே இயற்றியது என்பதில் ஐயமில்லை. சகசி மன்னன், இந்நாடகத் துவக்கத்தில் கணபதி காப்பு கூறும் பாடலை இயற்றியிருப் பதிலும் சூத்திரதாரன் வசனத்திலும் இவ்வுண்மையைக் காணலாம்.

> ''நீரியல் பொரும் ஐயாற்றில் நிமலனை வணங்கு மெங்**கா**
> **வேரிசா கரகல்யாணம்** விளங்கிய தமிழால்பாட
> பாரினில் கமலைமாதின் பாலனாம் விட்டவாசல்
> காரியல் வண்ணமான கரிமுகன் காப்புத்தானே''

எனவே, 'காவேரி சாகரகல்யாணம்' என்பதே நாடகத்தின் பெயர் என்பது அறியலாம்

அடுத்து சூத்திரதாரனின் சந்திவசனத்தில்,

''இந்தப்படிக்குச் சகசி ராசப்பிரணீதமான காவேரி கல்யாணம் என்கிற நாடகத்திலே'' என்று குறிப்பிடப் பெறுவ தால், சகசி மன்னன் இயற்றியதே இந்நாடகம் என்பது உணரலாம்.

சகசிமன்னனைப் பற்றி, முன்னரே விரிவாகக் கூறப்பெற்று உள்ளது. சகசி மன்னன், மராட்டிய மொழியைத்தாய் மொழி யாகக் கொண்டவன்' எனினும் பன்மொழிப்புலவன் என்பதை இம்மன்னன் இயற்றிய நாடகமான பஞ்சபாஷா விலாசத்தில் உணரலாம்.

அன்றியும் 8 படைப்புக்களுக்கு மேற்பட்ட தமிழ் நாடகங்களை, புலமை மிக்க தமிழ்ப்புலவர்களைக் கொண்டு இயற்றச் செய்தவன். மேலும் தமிழ்ப்படைப்புக்களான 'வண்ணத்திரட்டு போன்றவையும் இம்மன்னர் காலத்துப்படைப்புகள் என்பதை அறியலாம்.

அவைப்புலவர்களால் 'சோழமன்னன், என்று புகழப் பெற்றவன். தமிழ் வளர்த்த தஞ்சையில் ஆட்சி புரிந்தவன் தமிழ்ப்புலவர் சூழ ஆட்சி புரிந்தவன். தமிழறிந்த புலவன். எனவே. சகசி மன்னனே இந்நாடகத்தை இயற்றினான் என்பதற்கு ஐயமில்லை.

**காவிரிக்குக் கல்யாணம்**

கவேரராசனின் புதல்வி காவேரி, காவேரிக்குத் திருமணம் புரிவிக்க, கவேரராசன் விரும்புகிறான்; தன்னுடைய அமைச்சரை அனுப்பி, காவிரிக்கு ஏற்ற கணவனைத் தேர்வு செய்யக் கட்டளையிடுகிறான். அமைச்சன், பலநாடுகளையு சென்று பார்த்து வரும்போது, இடையே அகத்திய முனிவரைக் காண்கிறான், அவரிடம் விவரம் கூறுகிறான். அகத்தியர் மனம் மகிழ்ந்து, தாம் சமுத்திரராசனுக்கு ஏற்ற பெண்ணைத் தேடிவந்ததாகவும், காவிரியே அவனுக்கு ஏற்ற மனைவி என்றும் கூறி கவேரராசனிடம், அமைச்சருடன் வருகிறார். கவேரராசனுக்கு விவரம் சொல்கிறார்.

காவேரி, தனக்கு ஏற்ற கணவனை அடையவேண்டி திருவையாற்றில் பஞ்சநதீசுவரரை வழிபட்டு, தவமிருக்கிறாள். 'அகத்தியர் காவிரிப் பெண்ணுக்கு விவரம் கூறுகிறார். காவிரிப் பெண் பஞ்சநதீசுவரரின் அனுமதி, பெற்று மணம் புரிவதாகக் கூறுகிறார். அவ்விதமே, அகத்தியர் முன்னிலையில் காவிரிப் பெண்ணுக்கு முன் பஞ்சநதீசுவரர் காட்சி அளித்து அனுமதி தருகிறார். காவிரிக்கும் சமுத்திரனுக்கும் அகத்தியர் மணம் புரிவிக்கிறார்.

இக்கதையின் சுருக்கம் தனியே இணைக்கப்பெற்றுள்ளது.

காவிரி கடலில் சங்கமம் ஆகின்றது. எனவே காவிரிப் பெண்ணுக்கும் கடலரசனான சமுத்திரனுக்கும் மணம் நிகழ்வ தாகக் கதையமைத்து இந்நாடகம் உருவாக்கப்பெற்றுள்ளது.

**பாகவத மரபு**

அவிநயித்து நடிப்பதற்குரியதாக இந்நாடகம் ஆக்கப் பெற்றுள்ளது. இந்நாடகம் மற்ற நாடகங்களைப் போன்று ஆண், பெண் இருபாலாரும் நடிப்பதற்குரிய நாடகமன்று. இந் நாடகக் கதை மாந்தர் அனைவருடைய கதாபாத்திரங்களையும் ஆண்களே அவிநயித்து நடிப்பதாகும். சகசி மன்னர் இந் நாடகத்தை, பக்திச் சிறப்புடன் நடிப்பதற்காக, 'பாகவதமரபு' என்ற அமைப்பில் உருவாக்கியிருக்கிறார்.

இந்நாடகத்தை, மெரட்டூர்' என்ற மயிலாட்டூரில் ஆண் களே வேடம்பூண்டு நடிக்கின்றனர் மெரட்டூர் தஞ்சைக்கு அருகில் உள்ள ஊர். '**பாகவத மேளா** மரபில் அவ்வூரில், மேலும் பல நாடகங்களை நடிக்கின்றார்கள். எனவே, இந்நாடகம் பாகவதமேளா மரபில் படைக்கப் பெற்றது என்பதை அறிய லாம்.

**திருவையாறு**

தரு 4-ல் காவேரியின் பிறந்த நக்ஷத்திரம் மிருகசீரிடம் என்று அவள் தாய் கூறுவதாக உள்ளது. 1704-ல் ஆடிப் பதினெட்டாம் பெருக்கில் மிருக சீரிடநட்ஷத்திரம் வருவதால் அன்றைய நாளில் இந்நாடகம் திருவையாற்றில் நடிக்கப் பெற்றது எனக் கருதலாம். இந்நாடகம், திருவையாற்றில் கி.பி. 1704ல் ஆடி மாதத்தில் பதினெட்டாம் பெருக்குநாளில் திருவிழாவில் சகசி மன்னன் முன்னிலையில் நடைபெற்றதாகப் பெரியோர் கூறுவர். தஞ்சை யில் மன்னன் அவையிலும் நடிக்கப் பெற்ற சிறப்புடையது.

**காவிரி பற்றி மணிமேகலை மூவருலா**

குடகில் உற்பத்தியாகும் காவிரியை, சோழநாட்டிற்குக் கொணர்ந்தவன் காந்தமச்சோழன். காந்தமன் அகத்தியரிடம் முறையிட்டு, அவர் அருளால் காவிரி சோழ நாட்டில் ஆறாகப் பெருகச் செய்தவன். பின்னர் காவிரிக்கு இருபுறமும் கரை எழுப்பியவன் கரிகாலன்.

''கொள்ளும் குடகக் குவடுடைறுத்து இழியத்
தள்ளும் திரைப் பொன்னி தந்தோறும்''
(விக்கிரம வ. 27)

''மேல்கடல் கீழ் கடற்கு விட்டகோன்
— கோல் கொண்டு
அலை எறியும் காவேரி யாற்றுப்படைக்கு
மலையெறியும் மன்னர்க்கு மன்னன்'' (குலோ. வ.30)

''குடகடற்குச் சார்பு குணகடலேயாக்கும்
வடகடற்கும் தென்கடற்கும் மன்னன்—முடுகு
கரையெறிந்த மன்னர்க்கு மன்னன்'' (இராச வ.30)

இவ்வாறு மூவருலா காவிரியின் வரலாறு கூறுகிறது.

''கஞ்ச வேட்கையில் காந்தமன் வேண்ட
அமர முனிவன் அகத்தியன் தனாது
கரகம் கவிழ்த்த காவிரிப்பாவை
செங்குணக் கொழுகி
கோடாச் செங்கோல் சோழர்தம் குலக்கொடி''
(மணி-பதிகம்)

என்பது மணிமேகலை.

''கவேர கன்னிப் பெயரொடு விளங்கிய
தவாக் களிமூதார்ச் சென்று பிறப் பெய்தி''
(மணி 9-52)

என்பதும் மணிமேகலை.

''தவாநீர்க் காவிரிப் பாவைதன் தாதை
கவேரன் ஆங்கிருந்த கவேர வனமும்''
(மணி 3: 55-56)

என்பதும் மணிமேகலை. மேற்கண்ட சான்றுகள் கூறும் செய்தி

காந்தமச் சோழன் அகத்தியர் உதவியால் காவிரியை,சோழ நாட்டுக்குக் கொணர்ந்தவன் என்பதும், புகாரில் இருந்த சம்பாவதி தெய்வம் காவிரியை வரவேற்று, காவிரியின் பெயரால் அந்நகர் வழங்கப்பெறும் என்று கூறியது என்பதும், கவேரன் என்பவன் காவிரியின் தந்தை என்பதும், அவன் தவம்புரிந்த

'கவேர வனம்' என்பது புகாரில் இருந்தது என்பதும், பிற் காலத்தில், காவிரி நீர் தடைப்பட்டபோது சோழமன்னர், தடை நீக்கி ஆற்றைப் பெருகச் செய்தனர் என்பதும், இலக்கிய வரலாற்றுச் செய்தியாகும்.

**ஆக்னேய புராணச் செய்தி**

பூம்புகாரில் கவேர வனத்தில் கவேர முனி தவம் புரிந்தார் என்றும் அவர் தவச்சிறப்பால் விஷ்ணு மாயை' என்ற சக்தியை காவிரியாகத் தோன்றச் செய்து புதல்வியாகக் கொண்டார் என்றும், ஆக்னேய புராணத்தில் காவிரி மகாத்மியத்தில் 23-ம் அத்தியாயத்தில் விரிவாகக் கூறப் பெறுகிறது.

எனவே ஆக்னேய புராணக் கருத்தும் மணிமேகலை கூற்றும் ஒற்றுமையுடையனவாகும் என்பது அறியலாம்.

**நாடகப் பாக்கள்**

புராண இலக்கியச் செய்திகளை, நன்கு உணர்ந்த சகசி மன்னர், பழமை மரபைச் சார்ந்தே, காவேரியை, கவேரனின் பெண்ணாக அமைத்துக் கொண்டார்; காவிரியைச் சோழ மண்டலத்துக்குக் கொணர்ந்த பெருமை அகத்தியருக்கு இருப்ப தால், அகத்தியரே முன்னின்று காவேரிக்கு, சமுத்திரனை மணம் புரிவிக்கிறார்; காவேரிக்கும் சமுத்திரனுக்கும் திருமணம் நடப்பதாக உள்ள அமைப்பு மட்டுமே சகசியின், உள்ளத்தில் தோன்றிய கற்பனை.

'காவேரி கடலில் சங்கமம், ஆகிறாள் என்பதும் உண்மை யன்றோ!

**சகசியின் சிவபக்தி**

இந்நாடகத்தில் 17-வது தருவில், பஞ்சநதீசுவரரை, காவேரி தோத்திரம் செய்யும்போது, "கங்காலா, காலகாலா, நீலகண்டா "பஞ்சநதீசுவரா" என்று அடிதோறும் பாடி யிருப்பதும், "சகசிராசன் குலதெய்வமே" என்று வருவதும் குறிப்பிடத்தக்கது. சகசிமன்னனுக்கு, திருவையாற்றீசன் குல தெய்வமாகக் கூறியிருப்பது, அம்மன்னனுக்குள்ள, சிவத்தல ஈடுபாட்டைத் தெரிவிக்கின்றது இதனை ஏலபதம் என்பர்.

தரு 27,29 இரண்டிலும் "சகசிராசன் இரவும் பகலும் தான் மணியும் சர்வேசா' சகசிராசதேவேந்திரன் மேலே கருணை செய்வது போல" என்றும் கூறப்படுவதை அறியலாம்.

**கூவேரன் வருகை**

2-வது தருவில் கவேரராஜன் கொலுவுக்கு வருகை தருவதைச் சகசி சிறப்பிக்கின்றார். தன்னையொத்த மன்னனாகக் கவேரனை, பெருமைப்படுத்துகிறார்.

"வட்ட மதிக்குடி பிடிக்கவே - புலவோர்கள்
வந்து கவிதை படிக்கவே
கட்டியங்கள் சிலர் கூறவே மனைவியுடன்
கவேர ராசனும் வந்தானே"

**அகத்தியர் வருகை**

தரு 7-ல் "அகத்தியமாமுனி வந்தனரே -
சடையும் விரித்து வரிப்
புலித்தோலும் உடுத்து
தவளநீறும் பூசிக்கொண்டு
அடிமேல் அடி நடந்துகொண்டு

"மிரட்டிக் கண்ணை விழித்துக் கொண்டு
விளங்கு ருத்திராக்க மாலையணிந்து
அரஅரஅர சிவனே யென்று
அகத்திய மாமுனிவந்தாரே"

அகத்தியரின் உருவ வருணனையும்,அவர் நடையும் அவர்பார்வையும், அவர் கூறும் சிவநாமத்தையும் குறிப்பிட்ட சகசிக்கு அகத்தியர் இவ்வாறுதான் இருப்பார் என்று தோற்றியது போலும்!

**மணப்பொருத்தம்**

கவேரராசனின் மந்திரியிடம் அகத்தியர் பேசுகிறர் காவிரிக்கும் சமுத்திரராசனுக்கும் மணப்பொருத்தம் இருப்பதை, கூறுவது சிறப்பானது.

9— வதுதருவு

> "தண்ணுக்குப் பள்ளமே வாய்த்தது போலிந்த
> சம்பந்தம் வாய்த்ததடா — உங்கள்
> பெண்ணுக்கும் பிள்ளைக்கும் ஏற்றதேயல்லாமல்
> பேதகம் இல்லையடா"

காவேரி மேற்கிலிருந்து, வந்து கிழக்கில் கடலில் சங்கமிப்பதைக் கூறி, காவிரியைத் தண்ணுக்கு என்று கூறி கடலைப் பள்ளம் என்று மொழிந்து நயமான பொருத்தம் காட்டுகிறார்.

தண்ணீருக்கு என்பது, பாடல் அமைதிக்காக, தண்ணுக்கு என்று கூறப்பெற்றது

13 வது தருவில் கவேரராசன் அகத்தியரிடம், காவேரிக்கும் கடலுக்கும் பொருத்தம் பற்றிக் கூறும் பகுதி நயமிக்கவை.

> "கருப்போ சிவப்போ பிள்ளை
> கண்ணாரக் கண்டீரோ"

என்கிறான் கவேரன், கடலின் நிறம் கருப்பா, சிவப்பா என்று கேட்கிறான் காவேரி சிவப்பன்றோ! பொருத்தம் கேட்கிறான் கவேரன்.

14 வதில்

அகத்தியர் கூறுகிறார்.

> "விட்டுணு மேனியும் போலவே
> **மேனியும் உள்ளவன்**
> சங்கீதம் ஓயாமல் தான்
> தானே பாடவல்லான்
> மட்டமே யல்லாமல்
> நெட்டையும் அல்ல"

> "பூமியைச் சுற்றி யவனாக நின்று
> புரக்கும் துரந்தரிகன்"

என்கிறார் அகத்தியர்.

விஷ்ணுவின் நிறம் நீலமன்றோ! கடல் ஓயாமல் அலை யோசை எழுப்புவதன்றோ! கடல் எவ்வளவு பொங்கினாலும் சமமாகக் காட்சியளிப்பதன்றோ! இந்த இயல்புகளைக் கூறி, பொருத்தம் காட்டுகிறார் அகத்தியர்.

**காவேரி வந்தாள்**

15 தருவில் சகசி, காவேரியின் வருகையைக் கூறுகிறான்.

"காவேரி வந்தாள் நல்ல
களபம் மெய்யிலணிந்து
பூவார் குழலிலங்க
பூர்ணசந்திரோதயம் போல்"

"கரிய விழி புரள
ககை பணி திரள
வரிசையா யணி திரள
மாலை முலைமேல் துவள"

இவ்வாறு காவிரிப் பெண்ணின் வருகை கூறப் பெறுகிறது.

"நிலவுப் பூப்போல் குறுநகை
நின்று நின்று நகைத்து"

என்று காவிரி நுரையுடன், குமிழியிட்டு, நின்று நின்று ஓசை யுடன் வருவதை, சகசி இசைப்பாவில் வடித்திருக்கும் மாண்பு நயம் கொண்டது இக்காட்சியைச் 'சகசி' திருவையாற்றிலே கண்டு களித்தான் போலும்!

**காவேரியின் சிவபூஜை**

21-வது தருவில் காவேரிப் பெண் பஞ்சநதீசுவரரைப் பூசை செய்யும் பகுதி, கருத்தழகும் இசைப்பா நயமும் கொண்டவை.

'அடுத்தேன் அடுத்து மலர் எடுத்தேன், தொடுத்தேன் தொடுத்து களித்தேன், விளக்கு வைத்தேன் வைத்து, முகமங்கி அமைத்தேன், அன்னம் படைத்தேன், படைத்து, ஆலத்தியும் எடுத்தேன்" என்று கூறி, திருச்சிற்றம்பலமோடு தேவாரம் கொரித்தேன் என்றபகுதிகள் பாநயம் மிக்கவை.

**சிவன்திருவிளையாடல்கள்**

24 வது தருவில், திருவீழிமிழலை இறைவன் சிறப்பு திருக்கடையூர் மார்க்கண்டேயர் ஆரூர் சுந்தரமூர்த்தி, அம்பர் மாகாளத்து அந்தணன், செங்காட்டுச் சிறுத்தொண்டன், ஆரூர் மனுச்சோழன் ஆகியோர்களைக் குறிப்பிட்டு, முதலையுண்ட பாலனைச் சுந்தரர் மீட்டதும் குறிப்பிடப் பெற்றுள்ளது.

**ஏலபதம்**

17-வது தருவில் 'பஞ்சநதீசுவரர்' என்றும் 24-ம் தருவில் 'ஹரபஞ்சநதீசுவரா' என்றும் இறுதி அடிகளில் கூறப் பட்டிருப்பதைப் ஏலபதம் என்பர்.

**சோழமண்டலம்**

சகசி தமிழ் மொழியில் தேர்ச்சி பெற்றவன் என்பதும் அவன் ஆட்சியில் சோழமண்டலத்தில் தமிழ் வளர்ச்சி பெற்றது என்றும் கூறப் பெறுகிறது.

"தண்டமிழார் சகசேந்திரன் தானாக வளரும் சோழ மண்டலம்" தரு 34

**வழக்குச் சொற்கள்**

தரு 5 வேணும் மெத்த 9 அடா, 14 சேதி 30 ஒருமட்டும் 30 கொஞ்சத்தனம்.

# தஞ்சையில் சோழர் வளர்த்த இசை நாட்டிய நாடகக்கலை

சோழ மன்னர்களின் ஆட்சி, தஞ்சையில் கி பி. 850 முதல் கி.பி. 1300 வரை விளங்கிய காலத்தில் தமிழ் இசை நாட்டிய நாடக வளர்ச்சிபற்றி, சிறிதே நினைவு கூர்தல் வேண்டும்.

சகசியின் காலத்துக்கு முன்னர், சோழர், நாயக்கர் காலத்தும் நாடகக்கலை வளர்ந்த பாங்கை, இலக்கியம் கல்வெட்டுக்கள் வழியே உணரமுடிகின்றது.

கி.பி. 985 — 1012 வரை ஆட்சிபுரிந்து உலகப் புகழ் பெற்றவன் முதலாம் இராசராசன். இம்மன்னன் காலத்தில், இசைநாட்டிய நாடக வளர்ச்சிபற்றியும் ஓவியம், சிற்பம் ஆகியகலைகள் வளர்ச்சி பற்றியும் விரிவாகக் கூறச் சான்றுகள் உள்ளன.

**தமிழ்இசை**

தேவாரம், திருவெம்பாவை ஆகியவை இசையுடன் கோயில்களில் பாடப்பெற்றன. (961/1913 Pages 137—147) (Ims 128/1912 No 136 ARE 1923 II P 32).

**நாட்டியம்**

இராசராசன் நாட்டியக்கலை வளர்ச்சிக்காக 402 நாட்டியப் பெண்களை, தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் நாட்டியம் ஆடச்செய்த சிறப்பு விரிவான கல்வெட்டுச்சான்றுகள் உடையவை. (42 of 1891 no 66. 259 — 303)

**இராசராச விசயம் நாடகம்**

முதல் இராசராசன் காலத்தில் அம்மன்னனிடன் அவைப் புலவர் கர்ணன் நாரணபட்டாதித்தன் இராசராசவிசயம் என்ற நாடகநூலை வடமொழியில் இயற்றினான் (A R E 1930—3 Para 12 Sil Vol II No67)

இந்நாடகத்தை இசையுடன் பாடி நடிக்க முதல் இராசேந்திரன் ஆணையிட்டான் (K A N Sastry - Cholas Vol I P 571)

முதல் இராசராசன் காலத்தில் வடமொழி நாடகம் அன்றி, தமிழ் மொழியில் பெருவுடையார் கோயிலைப் பற்றி வரலாற்று நாடகம் ஒன்றை, '**இராசராசேச்சுரம்** என்ற பெயரில் இயற்றப் பெற்று நடிக்கப் பெற்றது. (Sil Vol II Part 3 Sil No 67) இராசராசனின் முன்னிலையில் நடந்த இந்நாடகத்தை நடிக்க ஏழு நாட்டு நங்கைகட்கு அறக்கட்டளை ஏற்படுத்தினான் இராசேந்திரன் (Sil Vol II Page 306).

**ஆரியக்கூத்து**

இராசேந்திரன் காலத்தில், திருவாவடுதுறைக் கோயிலில் ஆரியக் கூத்து' என்ற நாடகத்தை ஏழு அங்கங்கள் கொண்டதை நடிக்கச் செய்தது சான்றுள்ளது. (ஆர்க்யலாஜிகல் சர்வே, 1922-26 பக். 120. No 659)

திருவெறும்பூரில் 'சாக்கையர்கூத்து' நடைபெற சாக்கைய மாராயனுக்கு இராசேந்திரன் கட்டளை வைத்த சிறப்பும் அறியலாம். (65 of 1914 No. 253 of APP. B)

**சரிதை நாடகம்**

முதற்குலோத்துங்க சோழனைப்பற்றி 'குலோத்துங்க சோழ சரிதை' நாடகம் நடந்தது தெரிகிறது (ARE 198/1919) நாரண பட்டர் ஆசிரியர்.

**வீரணுக்கவிசயம்**

கி.பி. 1063-70ல் வீரராசேந்திர சோழன் காலத்தில் அவைப் புலவரான, திருவாரூர்ப் பூங்கோயில் நம்பி என்பவர் 'வீரணுக்க விசயம்' என்ற தமிழ் நாடகத்தை இயற்றினார். (Sil. Vol III 1040 அனுபந்தம் பக் 258 Sil 548 of 1904)

**பிரபோத சந்திரோதயம்**

இரண்டாம் ராசாதிராசன் சோழன் காலத்திலும், திரு ஒற்றியூர்க் கோயிலில், வடமொழி நாடகமான பிரபோதசந்தி

ரோதயம் நடிக்கப் பெற்றது. இந்நாடக ஆசிரியர் கிருஷ்ணமிசிரர் (300 of APP B) INS 367, 371 of APP.B.

**பெரும்புலியூர் நாடகம்**

முதற்குலோத்துங்கசோழன் அவைப்புலவரான வீரைப் பரசமயகோளரி என்பவர் **பெரும்புலியூர்** நாடகம் என்ற படைப்பைத் தமிழில் இயற்றினார்.

இவ்வாறு சோழர் காலத்து நாடகப்படைப்புகள் பற்றி நினைவு கூறமுடிகின்றதன்றி, அந்நூல்கள் கிடைக்கவில்லை.

இராசராசேச்சுரம், வீரணுக்க விசயம் பெரும்புலியூர் நாடகம், ஆகியவை தமிழிசை நாட்டிய நாடகங்களாகவே படைக்கப்பெற்று நடிக்கப் பெற்றிருத்தல் வேண்டும். எனக் கருதமுடிகிறது. எனவே தான், 17-ம் நூற்றாண்டில் சகசியின் காலத்துப் புலவர்கள், சோழ மரபைச் சார்ந்து, இசைநாட்டிய நாடகப் படைப்புக்களை உருவாக்கினர் எனலாம்.

பழமைமரபே, இவ்வைந்து தமிழிசை நாட்டிய நாடகங்களில் அமைந்துள்ளன எனக் கருத முடிகின்றது.

கி. பி. 1535-லிருந்து கி. பி. 1673 வரை ஆட்சி புரிந்த ஆந்திரநாயக்கமன்னர்காலத்தில், இசைநாட்டிய நாடக வளர்ச்சி இருந்தது எனினும், தமிழ்மொழிப்படைப்பு எதுவும் காணக் கிடைக்கவில்லை. தெலுங்குமொழி வளர்ச்சியே மிக்கிருந்தது எனலாம்.

மராட்டிய மன்னர் ஆட்சி கி. பி. 1674 — 1675-ல் ஏற்பட்ட பின்பு, இரண்டாம் சகசியின் காலத்தில், தமிழிசை நாட்டிய நாடகங்களுக்கு புத்துயிர் ஏற்பட்டதை எண்ணி மகிழ்வோமாக.

# பூலோக தேவேந்திர விலாசம்

## நாடகக் கதைச் சுருக்கம்

இந்த நாடகம் 10-கதாபாத்திரங்களைக் கொண்டது. வேத்தியல், பொதுவியல் என்ற இருவகை மரபில், இந்நாடகம் வேத்தியல் மரபில் நடிக்கப் பெற்றது. தஞ்சையில் ஆட்சி புரிந்த சகசி மன்னனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டது இந்நாடகம். பூலோக தேவேந்திரன் என்பது சகசி மன்னனைக் குறிப்பிடுவதாகும். எனவே பூலோக தேவேந்திர விலாசம்' என்று இந்நாடகத்துக்குப் பெயர் கூறப் பெற்றது.

இசை நாட்டிய நாடக மரபின் வழியே, இசைப்பாக் களாலும் இடையிடையே உரைநடையாலும் ஆக்கப்பெற்ற நாடகம்.

முதலில் தோடய மங்களம், மங்களம், விநாயகர் தருவு ஆகியவை அமையப்பெற்றுள்ளன. காப்பு விருத்தம் 1, இசைப் பாக்களான தருவுப் பாடல்கள் 45, சோபன தருவு 1 ஆகியவை நாடகப் பாக்களாக உள்ளன.

சூத்திரதாரன், நாடகத்தைத் துவக்கி வைப்பதற்காக முதலில் கட்டியக்காரனை அறிமுகம் செய்து வைக்கிறான். கட்டியக்காரன் அரங்கிற்கு வந்து, நாடகத்தைத் துவக்கி வைக்கிறான்.

தஞ்சை நகரில், சிங்கார வனத்துக்கு ரதிதேவி வருகிறாள் என்று கட்டியக்காரன் அறிவித்துச் செல்கிறான்.

ரதிதேவி, தன்கணவனான மன்மதனிடம் ஊடல் கொண்டு, பிரிந்து, சகியுடன் சிங்காரவனத்திற்கு வருகிறாள். ரதியைத்

தேடிக்கொண்டு மன்மதன் வருகிறான். ரதி கோபத்தோடு இருக்கிறாள், 'உலகில் ஆணையும் பெண்ணையும்' தன் திறமையால் சேர்த்துவைக்கும் எனக்கு, இந்த ரதியை வெற்றி கொள்வது முடியாதா' என்று மன்மதன் தன் ஆற்றலைக் கூறி ரதியிடம் வஞ்சினம் பேசுகிறான்.

ரதி தேவிக்கும் மன்மதனுக்கும் வாக்குவாதம் மூள்கிறது. ரதிமீது, மோகனாஸ்திரத்தைப் பிரயோகிக்கிறான் மன்மதன். ரதி மயங்குகிறாள். மன்மதன் கர்வம் கொள்கிறான். 'பெண்களை ஆண்கள் வெல்வது விந்தையா? என்னை வெற்றி கொண்டது, பெரிய வெற்றியா? தீரனான தஞ்சை மன்னன் சகசேந்திரனை உன் திறமையால் வெல்ல முடியுமா?' என்கிறாள் ரதிதேவி.

மன்மதன் கூறுகிறான்: 'ரதியே, பெண்புத்தியால் சகசி மன்னனை இந்திரன் என்று சொல்லிவிட்டாய்! சகசேந்திரன் பெருமைக்கு நிகர் யார் உண்டு? இந்திரனைக் காட்டிலும் பெருமையுள்ளவன் சகசிமன்னன். கௌதமமுனியின் மனைவியான அகலிகையை விரும்பியவன் இந்திரன் ஆனால் சகசி மன்னன், பிறர் மனைவியைச் சிந்தையிலும் கருதாதவன்; அதனால் சகசி மன்னனே பூலோக தேவேந்திரன் 'என்று புகழ்கிறான். மேலும் கூறுகிறான்: ஆகவே சகசிமன்னனிடம் என் திறமையைக் காட்ட முடியாது; 'சசி மன்னனைக் காதலிக்கும் இராசன் கன்னிகை சுசீலையை வெற்றி கொள்வேன்' என்கிறான் மன்மதன்.

ரதிதேவி மறுமொழி கூறுகிறாள்; 'மன்மதா, உன் மனைவியான என்னை நீ வென்றது பெரிய காரியமன்று சகசி மன்னனிடம் காதல் கொண்ட சுசீலையை நீ வெல்ல வேண்டும், அது உன் திறமைக்கு எடுத்துக் காட்டாகும் என்று.

'சுசீலையை வெற்றி கொள்வேன்' என்கிறான் மன்மதன். 'அவளை வெற்றி கொண்டபின், என்னை நீ அடையலாம் என்கிறாள் ரதிதேவி.

காம்போச நாட்டு மன்னன் மகள் சுசீலை என்பவள், தஞ்சையில் பவனிவந்த சகசிமன்னன்மீது காதல் கொண்டாள்; சகசியை அடைய முடியாமல் விரகதாபத்தால் மனம் நொந்து சகியுடன் சிங்காரவனத்துக்கு வருகிறாள்; சிங்காரவனத்தில் அமர்ந்து. காம மயக்கத்துடன் சகசியை அடைவதற்குரிய வழி முறைகளைப்பற்றிப், பாங்கியுடன் பேசி வருந்துகிறாள். அச்சமயம் மன்மதன் திட்டமிட்டபடி அங்கே வருகிறான். 'நல்ல தருணம் இது. சுசீலையை வெற்றிகொள்வேன்' என்று மகிழ்ச்சியடைகிறான்.

சுசீலையைப் பார்த்துச் சொல்கிறான்: 'விரகதாபத்தால் நீ வீணே பழி கூறிக் கொண்டிருக்கிறாய்! உன் மீது என் புஷ்ப பாணங்களைச் சொரிவேன்; என்ன செய்வாய்? நீ விரும்பும் சகசி மன்னனை அடைய முடியாமல் செய்தவன் நான். என் திறமை இது. இனி நீ என்னைப் பணிய வேண்டும். இல்லையேல் மேலும் புஷ்ப சரங்களை எய்வேன்' என்று.

சுசீலை சொல்கிறாள்: 'மன்மதா, நான் ஒரு கன்னிகை; என் மீது சரம் தொடுக்காதே; இப்போதே என்னைச் சகசி மன்னன் வந்தணைவான் பார்! நீ வெறும் மானிடன் என்று நான் அறிவேன்'.

மன்மதனுக்குக் கோபம் மூள்கிறது: சொல்கிறான்; 'உன்னை எளிதில் விடேன். புஷ்ப சரங்களைத் தொடுத்து உன் கர்வத்தை அடக்குகிறேன் பார்.' என்று கூறிப், பூவம்புகளை எய்து சுசீலையை வேதனைக்கு உள்ளாக்குகிறான்.

சுசீலை, மன்மத பாணத்தால் மனம் நொந்து விரகம் தங்காமல் சகியிடம் சொல்கிறாள்.

'தோழி, நான் என்செய்வேன்! மன்மத பாணத்தால் நொந்து விட்டேன். சகசி மன்னனை விரைவில் எவ்வாறு அடைவேன்?' என்று புலம்புகிறாள்.

இச்சமயத்தில் சிங்கார வனத்துக்குச் சித்தபுருடன் ஒருவன் வருகிறான். இராச கன்னிகையான சுசீலையைக் காண்கிறான்.

'ராச கன்னிகையே, நான் தஞ்சபுரீசரை வழிபட வந்தேன். உனக்கு என்ன துயரம் கூறுவாயாக' என்கிறான் சித்த புருடன். நாண மேலிட்டுச் சுசீலை வருந்தும்போது, அவள் தோழி சித்த புருடனிடம் விவரம் கூறுகிறாள்.

சித்த புருடன் விவரம் தெரிந்துகொண்டு, சுசீலையைப் பார்த்துச் சொல்கிறான்; ராசகன்னிகையே, நீ, வருந்துவதை அறிந்தேன்.உன் எண்ணம் நிறைவேறுவதற்குத் தஞ்சபுரீசுவரரை வழிபடவேண்டும். நீ நினைத்த காரியம் கை கூடும்' என்று.

சித்த புருடன் கூறியவாறே, சுசீலை, தோழியுடனும் சித்த புருடனுடனும் தஞ்சபுரீசர் கோயிலை அடைந்து சிவபெருமானை வழிபட்டு, தன் எண்ணம் நிறைவேற வேண்டிப் பாடுகிறாள்.

தஞ்சபுரீசுவரர் காட்சி தருகிறார். வரம் கேட்குமாறு சுசீலைக்கு அருள் புரிகிறார், 'சகசி மன்னனை மணவாளனாக அடைய அருள் புரிய வேண்டும்' என்று சுசீலை வரம்கேட்கிறாள், 'என் பக்தனான சகசி மன்னனை நீ மணவாளனாக அடைவாய்' என்று தஞ்சபுரீசர் அருள் செய்கிறார்.

மேலும் சித்தபுருடனைப் பார்த்துச் சொல்கிறார்:

'சித்தபுருடனே, என் சார்பில் நீ இருந்து என் பக்தனான சகசி மன்னனைச் சுசீலை மணம்புரிந்துகொள்ளச் செய்ததற்காக, இக்கன்னிகையுடன் அம்மன்னனிடம் வருவாயாக, நாம் சகசி மன்னனிடம் இருக்கிறோம்' என்று.

இவ்விதம், தஞ்சபுரீசர், சுசீலைக்கு அருள்புரிந்து விட்டதை அறிந்த மன்மதன் 'என் திறமையைக் காட்டிச் சுசீலையை வெற்றிக்கொள்ள இனி முடியாது' என்று உணர்ந்து வெட்கித் தலைகுனிகிறான்.

சிவபெருமான் திருவருளால் 'சகசி மன்னனை அடையப் போகிறோம்' என்ற உவப்பில் சுசீலை மன்மதனை ஏளனம் செய்து பழிக்கிறாள். மன்மதன் மனம் வருந்திச் சுசீலையிடம் தோற்றுத் திரும்பிச் செல்கிறான்.

சித்தபுருடன் சுசீலையைப் பார்த்துச் சொல்கிறார், 'சுசீலை, தஞ்சபுரீசர் திருவருளால் நீ சகசி மன்னனை மணந்து கொள்ளப்போகிறாய், விரைவில் உன் தாய் தந்தையரை அழைத்து வருமாறு தோழியை அனுப்பு'' என்று.

சித்தபுருடன் சொன்னவாறு தோழியை அனுப்புகிறாள் சுசீலை. அதன்படி காம்போச ராசனும் அவன் மனைவி காந்திமதியும் வருகிறார்கள்.

சித்தபுருடனுடன் சுசீலை முதலிய யாவரும் சகசி மன்னனிடம் செல்கிறார்கள்.

சித்தபுருடன் சகசி மன்னனிடம் சொல்கிறான் :

'சகசி மன்னரே, தஞ்சபுரீசரை வழிபட்டு, வரம் பெற்றுத், தங்களை மணந்துகொள்ள சுசீலை பெற்றோருடன் வந்திருக் கிறாள். ஏற்றுக்கொள்ள வேண்டும்' என்று

சுசீலையை மணந்துகொள்ளச் சகசி மன்னன் சம்மதம் தெரிவிக்கிறான்; காம்போச இராசனும் காந்திமதியும் வாழ்த்து கிறார்கள் தன்னை ஏற்றுக்கொள்ளச் சம்மதம் தெரிவித்த சகசி மன்னனை வணங்கி மகிழ்கிறாள் சுசீலை. சோபனத்துடன் பூலோக தேவேந்திரனுக்கும் சுசீலைக்கும் திருமணம் நிகழ்ந்து நாடகம் நிறைவுறுகிறது.

இந்த இசை நாட்டிய நாடகத்தில் பயன்படுத்தப் பெற்ற இராகங்கள் 22. அவை வருமாறு:

1. நாட்டை: தோடயமங்களம்
2. சௌராஷ்டிரம் தருவு: — 1, 3, 25, 40
3. ஆகிரி ,, — 2
4. தன்யாசி ,, — 4, 30, 36
5. சாரங்கா ,, — 5
6. பைரவி ,, — 6, 28
7. கௌளிபந்து ,, — 7, 35

| | | |
|---|---|---|
| 8. | சுரடி | தருவு: — 9 |
| 9. | கும்ம காம்போதி | ,, — 10, 20 |
| 10. | மத்தியமாவதி | ,, — 11, 33, 39 |
| 11. | சங்கராபரணம் | ,, — 13, 22 |
| 12. | சுக பந்துவராளி | ,, — 14, 16, 23, 37 |
| 13. | நாதநாமக்கிரியை | ,, — 19 |
| 14. | தோடி | ,, — 21, 37, 38 |
| 15. | பந்துவராளி | ,, — 24 |
| 16. | சாவேரி | ,, — 26 |
| 17. | லலிதகஞ்சமம் | ,, — 29 |
| 18. | காம்போதி | ,, — 31 |
| 19. | கன்னடசாபு | ,, — 34 |
| 20. | பூபாளம் | ,, — 41 |
| 21. | தேவகாந்தாரி | ,, — 42, 44, 45 |
| 22. | காபி | ,, — 43 |

இந்த ராகங்களுக்குரிய தாளங்களைத் தருவுப் பாடல்கள் உள்ள பக்கங்களில் காண்க.

---

# சந்திரிகா ஹாஸை விலாசம்

## நாடகக் கதைச் சுருக்கம்

இந்த நாடகம் 8-கதா பாத்திரங்களைக் கொண்டது. வேத்தியல் மரபில் சகசி மன்னனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு படைக்கப்பெற்று நடிக்கப்பெற்ற நாடகம்.

இசை நாட்டிய நாடக மரபின் வழியே இசைப்பாக்களாலும் இடையிடையே உரைநடை விரவிவர ஆக்கப் பெற்ற நாடகம்,

இந்நாடகத்தில், தோடயமங்களம் 1, மங்களம் 1, விநாயகர் தருவு 1, காப்பு விருத்தம் 1, தருவுப்பாடல்கள் 30, சோபன தருவு 1. ஆகியவை உள்ளன.

**கதை**

சூத்திரதாரன், நாடகத்தைத் துவக்கி வைப்பதற்காகக் கட்டியக்காரனை முதலில் அறிமுகம் செய்துவைக்கிறான்.

கட்டியக்கரரன் அரங்கினில் தோன்றுகிறான்.

'மாளவ நாட்டு மன்னன் மகள் சந்திரிகா ஹாஸை என்பவள் தன் சகியான சுகவாணியுடன் திருவாரூரில் கோயில் கொண்டுள்ள வன்மீகநாத சுவாமியை வழிபட வருகின்றாள் என்ற செய்தியைக் கட்டியக்காரன் கூறுகின்றான்.

சத்திரிகாஹாஸை, வன்மீகநாதரை வழிபட்டுத், தனக்கு உத்தமமான கணவன் வாய்க்கவேண்டும் என்று வேண்டிக் கொண்டு பூசனை செய்கிறாள்.

இராசகன்னிகையான அவள் வழிபாடு செய்து கொண்டிருக்கும் சமயத்தில் அங்கே சிவயோகிசித்தன் என்பவன், வழிபாட்டுக்கு வருகின்றான். சந்திரிகா ஹாஸையின் வழிபாட்டைக் காண்கிறான்

'இராசகன்னிகையே, நீ யார்? எதை உத்தேசித்து வழிபாடு செய்கிறாய்? உன் மனத்தில் எதை எண்ணிக்கொண்டு பூசனை புரிகின்றாய்?'' என்று சிவயோகி சித்தன் கேட்கின்றான்.

சந்திரிகா ஹாஸை மறுமொழி கூறுகிறாள்.

'சித்தரே, நான் மாளவ தேசாதிபதியின் மகள். சந்திரிகா ஹாஸை என்பெயர். நல்ல கணவரை அடைவதற்காக வன்மீக நாதரை வழிபடுகின்றேன், தாங்கள் யார்?' என்று.

'நான் சிவயோகி சித்தன் சகல தேசங்களையும் கண்டு, இங்கே வன்மீகநாதரை வழிபட வ்ந்தேன்' என்று கூறுகிறார் சித்தர்.

இராச கன்னிகை மகிழ்ச்சி யடைகிறாள்.

'சித்தரே பலதேசங்களைப் பார்த்து வந்தீரே! நீங்கள் பார்த்த தேச மன்னர்களைப்பற்றிச் சொல்லுங்கள்' என்று கேட்கிறாள்.

சித்தர், இராசகன்னிகைக்குப் பல தேச மன்னர்களைப் பற்றியும் அவர்களுடைய குணவிசேஷங்களைப் பற்றியும் கூறுகிறார்.

'நான் பார்த்த தேசமன்னர்களில் சோழ மன்னனான தஞ்சை இராசேந்திரன் பெருமை சொல்லில் அடங்காது'' என்று கூறுகிறார்,

இராசகன்னிகை கேட்டுக்கொண்டவாறு சித்தர் சொல்கிறார். தஞ்சைச் சோழேந்திரனான சகசி மன்னனின் குணங்களையும் சௌந்தர்யாதிசயத்தையும் அம்மன்னரின் குலப் பெருமையையும் கூறிவிட்டுச் சிவபூசை மேம்பாட்டினாலன்றிச் சகசி மன்னரை எளிதில் பார்க்கமுடியாது' என்றும் கூறுகிறார்.

சந்திரிகா ஹாஸைக்குச் சகசி மன்னன்மீது காதல் ஏற்படுகிறது. தன் தோழியான சுகவாணியிடம் கூறி வேதனை யடைகிறாள். சுகவாணி, இராச கன்னிகையிடம் விவரம் கேட்கிறாள். இராச கன்னிகை கூறுகிறாள்.

''சுகவாணி, நான் வன்மீக நாதரை வழிபடச் சென்றேன். அங்கே சிவயோகி சித்தர் வந்தார். அவர் பார்த்த ஐம்பத்தாறு தேச மன்னர்களைப் பற்றிக் கூறினார். தஞ்சை மன்னரான சகசேந்திரரைப் பற்றிச் சொன்னார். அவருடைய ரூபரேகா விலாசங்களைப் பற்றிச் சொன்னார். அது முதல் அவர் நினைவாகவே இருக்கிறேன். சிவபூசை மகிமையால் தான் அம்மன்னரை அடைய முடியும் என்றும் சொன்னார். நீ சிவயோகி சித்தரைக் கண்டு அம்மன்னரை அடைவதற்கு உபாயம் செய்யவேண்டும்,''

இவ்வாறு இராசகன்னிகை கூறுவதைக் கேட்ட சுகவாணி சித்தரிடம் கேட்கிறாள்.

சித்தர் சம்மதம் தெரிவித்து, 'சந்திரிகா ஹாஸையின் பெற்றோர்களை அழைத்துவா' என்று கூறுகிறார்.

சுகவாணி, மாளவ இராசனையும் அவன் மனைவி மஞ்சுள பாஷிணியையும் அழைத்துக் கொண்டு சித்த புருடரிடம் வருகிறாள்.

மாளவ இராசன் சிவயோகி சித்தரைக்கண்டு வணங்கி 'எவ்வாறேனும் என் மகள் சந்திரிகா ஹாஸைக்குச் சகசி மன்னரை மணம் புரிவிக்க வேண்டும்' என்று கேட்டுக் கொள் கிறான்.

'சகசி மன்னன் மகா சிவபக்தன். அம்மன்னனுடைய சம்பந்தம் எளிதில் கிடைக்குமா?'' என்று கூறுகிறார் சிவ யோகி சித்தர்.

'சித்தரே, நீங்களே என்மகளுக்குச் சகசி மன்னன்மீது காதல் ஏற்படுமாறு ஆசை உண்டாக்கி விட்டீர்! அதை நிறைவேற்ற நீங்களே உபாயம் தேடவேண்டும், என்று மாளவ இராசன் கூறுகிறான்.

மாளவ இராசன் கேட்டுக் கொண்டவாறு, சிவயோகி சித்தன் சகசி மன்னனிடம் செல்கிறான். சகசி மன்னனை வாழ்த்திப் புகழ்கிறான். சகசி மன்னன் மகிழ்ச்சியடைகிறான். சித்தர் சகசிக்குக் கூறுகிறார்:

'மன்னவா, வன்மீகநாதரை வழிபட்டுக் கொண்டிருந்த சந்திரிகா ஹாஸை மாளவ இராசனின் மகள்; அவள் என்னிடம் பலதேச மன்னர்களைப் பற்றிக் கேட்டாள். அனைவரையும் பற்றிக் கூறித் தங்கள் சரித்திரம் சொன்னவுடன், மிகவும் தங்களிடம் இச்சை கொண்டாள். அவளுடைய பெற்றோர்களும் என்னிடம் வேண்டிக்கொண்டார்கள். சந்திரிகா ஹாஸையைத் தாங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும். அந்த நங்கை தங்களுக்கு ஏற்றவள். அவள் ரூப சௌந்தர்யம் மிக்கவள். குணச் சிறப்புள்ளவள்'.

இவ்வாறு சிவயோகி சித்தர் கூறினார்.

சகசி மன்னன் சித்தபுருடன் கூறிய வார்த்தைகளைக் கேட்டு மகிழ்ச்சிகொண்டு சம்மதம் தெரிவித்தான்.

சகசி மன்னன் சம்மதத்தை, சிவயோகி சித்தன் மாளவ இராசனுக்கும் மஞ்சுபாஷிணிக்கும் கூறுகிறான். பின்னர், சிவயோகிசித்தன், சந்திரிகா ஹாஸையை அவள் பெற்றோருடன் அழைத்துக்கொண்டு சகசி மன்னனிடம் அனைவரும் வருகிறார்கள்.

மாளவ இராசன், சகசி மன்னனிடம் வேண்டிக் கொள்கிறான். தன் மகளைப்பார்த்து, "நீ அதிருஷ்டவதி" என்று வாழ்த்திப் புகழ்கிறான்.

சகசி மன்னரால் ஏற்றுக் கொள்ளப்பட்ட சந்திரிகா ஹாஸை, அம்மன்னரை வணங்கி மகிழ்கிறாள். சகசி மன்னருக்கும் சந்திரிகா ஹாஸைக்கும் திருமணம் நிகழ்ந்து இறுதியில் சோபனம் பாடப்படுகிறது. நாடகம் நிறைவுறுகிறது.

இந்நாடகத்தில் உள்ள இசைப்பாடல்களான தருவுகளுக்கு இராகம் தாளம் குறிக்கப் பெறவில்லை. எனினும் பூலோக தேவேந்திர விலாசத்தில் பயன்படுத்தப் பெற்ற இராகங்களே பொருந்தும் என அறிய முடிகிறது. இசை வல்லார் ஆய்ந்தறிக.

---

# சகசி மன்னர்மீது குறவஞ்சி

## கதைச் சுருக்கம்

இந்த நாடகம் 8-கதாபாத்திரங்களைக் கொண்ட படைப்பு. வேத்தியர் மரபில் தஞ்சை சகசி மன்னனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு படைக்கப்பெற்று நடிக்கப் பெற்ற நாடகம்.

இசை நாட்டிய நாடக மரபுக்குரிய இசைப்பாக்களும் இடையிடையே உரைநடைப் பேச்சுக்களும், விரவிவர ஆக்கப் பெற்றது. யக்ஷகான மரபுக்குச் சிறந்த எடுத்துக்காட்டு இந்நாடகம்.

இந்நாடகத்தில் உள்ள இசைப் பாடல்கள்: தோடய மங்களம் 1. மங்கள தருவு 1. விநாயகர் தருவு 1. கதாசங்கிரக அகவல் 1. இசைப்பாடல்களான தருவுகள் 33 சோபனப் பாட்டு.

நாடகத்தைத் துவக்கிவைக்க, சூத்திரதாரன், கட்டியக் காரனை அறிமுகம் செய்து வைக்கிறான்.

கட்டியக்காரன் அரங்குக்கு வருகிறான்.

'தஞ்சைச் சகசி மன்னன் பவனி வரும்போது, அம் மன்னரைக் கண்டு காதல் கொண்டாள் இராச கன்னிகை சகசிமீது காதல் மயக்குற்ற இராச கன்னிகை விரகவேதனை கொண்டு தன் தோழிமார்களுடன் சிங்கார வனத்துக்கு வருகிறாள்' என்று கூறிச் செல்கிறான்.

சிங்கார வனத்துக்கு வந்த இராசகன்னிகை, காமம் மிக்கு, மனம் பொறுக்கமாட்டாமல் மன்மதனை நொந்து கூறுகிறாள். சந்திரனைப் பார்த்துப் புலம்புகிறாள். மலய மாருதமாகிற தென்றலை நொந்துகொள்கிறாள்.

இராசகன்னிகையின் விரக வேதனை மேலும் அதிகமா கிறது. பின்னர், சகசி மன்னனை அடைவதற்காகக் கிளி, குயில், வண்டு, அன்னம் ஆகியவற்றை நோக்கிக் கூறி மன்னனிடம் தூதுபோக வேண்டுகிறாள். தூது சென்றவை திரும்பவில்லை. அதன்பின்னர்த் தன் தோழியை அழைத்து முறையிட்டு, சகசி மன்னரை அடைய வழி சொல்லுமாறு கேட்கிறாள். விரைவில் சகசி மன்னரைச் சேர்வதற்குக் குறி கேட்க, குறத்தியை அழைத்து வருமாறு கூறுகிறாள்.

தோழி, குறி சொல்லும் குறத்தியை அழைத்து வருகிறாள். மலைக்குறவஞ்சி இராசகன்னிகையிடம் வருகிறாள்.

மலைக் குறவஞ்சியிடம், இராசகன்னிகை பூகோள இயற்கையைக் கூறுமாறு கேட்கிறாள்.

பூமியின் உற்பத்தி, மலைகளின் தோற்றம் யாவும் மலைக் குறவஞ்சி கூறுகிறாள்.

பின்னர்த் தேசங்களைப் பற்றிக் கேட்கிறாள் இராச கன்னிகை. குறவஞ்சி விரிவாக, ஐம்பத்தாறு தேசங்களையும் பற்றிக்கூறி இறுதியாகச் சோழ தேசத்தைப் பார்க்க வந்தேன் என்று சொல்கிறாள்.

மலைகளைப்பற்றி விளக்கம் கேட்கிறாள் இராசகன்னிகை மலைகளின் வரிசைகளைக் கூறிவிட்டு இறுதியாக, சோழ நாட்டில் உள்ள சுவாமி மலையைத் தான் பார்க்க வந்தேன் என்றும் சொல்கிறாள் குறத்தி.

மலைப் பிராந்தியங்களில் உள்ள மரங்களைப் பற்றிக் கேட் கிறாள் இராச கன்னிகை.

அரிய பல மரவகைகளையெல்லாம் கூறிவிட்டு, சோழ நாட்டில் மிக்குள்ள தென்னை மரங்களையும், செண்பகம் முதலிய மலர்கள் உள்ள சோலைகளையும் காண வந்தேன் என்று குறத்தி கூறுகிறாள்.

அதன்பின்னர் விலங்கினங்களைப் பற்றியும், பறவையினங் களைப் பற்றியும், மூலிகை வகைகளைப் பற்றியும் ரத்னங்களைப் பற்றியும் கேட்கிறாள் இராச கன்னிகை.

அனைத்துக் கேள்விகளுக்கும் குறத்தி விளக்கம் தருகிறாள். பின்னர் நதிகளைப்பற்றிக் கேட்கிறாள் இராசகன்னிகை. எல்லா நதிகளின் வரிசையையும் சொல்லி, இறுதியாகச் சோழநாட்டில் உள்ள புகழ்மிக்க காவிரியைப் பார்த்தேன் என்றும் 'அனைத்து ஆறுகளிலும் காவிரியே தலை சிறந்தது' என்றும் கூறுகிறாள் குறத்தி.

தெய்வத் தலங்களைப் பற்றிக் கேட்கிறாள் இராசகன்னிகை. அனைத்துத் தலங்களையும் வரிசையாகப் பகர்கிறாள் குறத்தி.

இறுதியாகத் தஞ்சையில் உள்ள விசேஷ தெய்வங்களைப் பார்க்கவந்தேன் என்று குறத்தி சொல்கிறாள்.

அனைத்தையும் கேட்ட இராச கன்னிகை, 'குறத்தியே உன் சாதிச் சிறப்பைக் கூறு' என்று கேட்கிறாள்.

குறச்சாதியின் வளப்பம் கூறிய குறத்தி இராசகன்னிகை யிடம், 'அம்மே, குறச்சாதியில் தேசக் குறச்சாதி, மலைக் குறச் சாதி, காட்டுக் குறச்சாதி, தேவக் குறச்சாதி என்று நான்கு வகை உண்டு. நான் மலைக் குறச்சாதி, சகசி மன்னனின் சோழ நாட்டிலே வாழும் தெய்வக் குறச்சாதியைப் பார்க்கவந்தேன் என்று செப்புகிறாள்.

பின்னர், குறத்தியை நோக்கிய இராச கன்னிகை, 'நீ யார் யாருக்குக் குறி சொன்னாய்? எவரெவர் பரிசு தந்தார்கள்? என்று கேட்கிறாள்.

அங்கதேசம் முதலான தேசங்களில் குறிசொல்லிப் பரிசுகள் பெற்றதாகக் கூறிய குறத்தி மேலும், 'சகசி மன்னனின் சோழ நாட்டிலே குறி சொல்லிப் பரிசுகள் வாங்க வந்தேன்' என்று சொல்கிறாள்.

'நான் ஒரு காரியம் நினைத்திருக்கிறேன். அதற்குக் குறி சொல்லு' என்று கேட்கிறாள் இராச கன்னிகை.

குறி சொல்லத் துணிந்த குறத்தி இராச கன்னிகையிடம் சம்மதம் தெரிவித்து, குறி சொல்லும் இடத்திற்கும், முதலில் தெய்வ ஆராதனை செய்வதற்கும் வேண்டிய ஏற்பாடுகள் செய்யுமாறு செய்யவேண்டிய விவரம் கூறுகிறாள்.

குறத்தி கூறியபடி ஏற்பாடுகளைச் செய்கிறாள் இராச கன்னிகை.

தன்னிஷ்ட தெய்வங்களையும் குலதெய்வத்தையும் வழி பட்டுப் பாடிவிட்டு, இராச கன்னிகையின் கைபார்த்துக் குறி கூறுகிறாள்.

இராச கன்னிகையின் உயர்வு நலங்களைக் கூறிய குறத்தி 'அம்மே நீ நினைத்தது உன் திருமணத்தைப் பற்றி' என்று சொல்கிறாள்.

'நான் கருதிய காதலனைப் பற்றிக் கூறு' என்று கேட்கிறாள் இராச கன்னிகை.

இராச கன்னிகையைச் சேர இருக்கும் மன்னனின் அடையாளங்களைச் சொல்கிறாள் குறத்தி.

'இந்த அடையாளங்கள் பொதுவாக எல்லா மன்னர் களுக்கும் உண்டு, நான் விரும்பும் மன்னரின் இடம் குலம் பற்றிச் சொல்' என்று கேட்கிறாள் இராச கன்னிகை.

'வேவு காரனைப்போல் கேட்கிறாயே அம்மே' என்று சொல்கிறாள் குறத்தி.

'என் குறிப்பான கேள்விகளுக்கு விடை சொன்னால் தான், தெய்வபலமுள்ள குறத்தி நீ' என்று கூறுகிறாள் இராச கன்னிகை.

'நீ விரும்பும் காதலன் தஞ்சை மன்னர் சகசி' என்று கூறி அம்மன்னரின் குலச்சிறப்பு, குணநலன், செல்வச் சிறப்பு ஆகியவற்றையும் சொல்கிறாள் குறத்தி.

இராச கன்னிகை மகிழ்ச்சி கொள்கிறாள்.

'அம்மன்னர் எத்தனை நாட்களில் என்னை மணம் புரிவார் சொல்லு' என்று கேட்கிறாள் இராச கன்னிகை.

'இன்னும் மூன்று நாழிகையில் சகசி மன்னர் உன்னை மணம் புரிவார்' என்று உறுதி கூறுகிறாள்.

மகிழ்ச்சியுற்ற இராச கன்னிகை குறத்திக்குப் பரிசுகள் அளிக்கிறாள்.

'சகசி மன்னர் இங்கு வந்தபின் அவர் கைகளாலும் பரிசு தரச்சொல்கிறேன்' என்று இராசகன்னிகை சொல்கிறாள்.

குறத்திக்குப் பரிசு அளித்துவிட்டுத் தன் தோழியைச் சகசி மன்னரிடம் தூதனுப்புகிறாள் இராசகன்னிகை.

இச்சமயம், குறத்தியைத் தேடிக்கொண்டு குறவன் வருகிறான்.

தஞ்சை நாட்டின் காட்டிலே பறவைகளை வேட்டையாடிக்கொண்டுவரும் குறவனாகிய சிங்கனைச் சூத்திரதாரன் விசாரணை செய்கிறான்.

சூத்திரதாரனுக்கும் குறவனாகிய சிங்கனுக்கும் உரையாடல் நிகழ்கிறது.

'சிங்கியை (குறத்தியை)க் காணவில்லையே' என்று மனம் வருந்திக் கேட்கிறான்.

'உன் சிங்கியைக் காட்டுகிறேன், உனக்குள்ள திறமைகளைச் சொல்லு' என்று சூத்திரதாரன் கேட்கிறான். தனக்குள்ள ஆற்றலைச் சிங்கன் தெரிவிக்கிறான். அதன்பின்னர்ச் சூத்திரதாரன் சிங்கியைச் சிங்கனுக்குக் காட்டுகிறான்.

சிங்கியைக் கண்டு மகிழ்ந்த சிங்கன், அவள் பிரிந்து சென்றதைப் பற்றிப் பேசுகிறான். இராச கன்னிகை கொடுத்த அணி ஆடைகளுடன் இருந்த சிங்கியைப் பார்த்து; 'இவையெல்லாம் எங்கே கிடைத்தன?'' என்று கேட்கிறான்.

'இவை யாவும் சகசி மன்னரின் நாட்டில் இராசகன்னிகை கொடுத்தவை !' என்று சொல்கிறாள் குறத்தி. முதலில் சிங்கிமீது சந்தேகம் கொண்டு பின் தெளிவடைகிறான் சிங்கன்.

இச்சமயம் இராச கன்னிகை சிங்கியிடம் வருகிறாள்.

'என்னடி குறத்தி, நீ குறவனுடன் மகிழ்ச்சியாக இருக்கிறாய். ஆனால் நீ சொன்ன வாக்குப்படி இன்னும் சகசி மன்னர் வரவில்லையே' என்று கேட்கிறாள்.

'இப்போதே சகசி மன்னர் வரப்போகிறார். உன்னை மணம் புரிவார். நானும் குறவனும் இருந்து உன் கல்யாணத்தைப் பார்த்து மகிழ்ந்து பின்னர் எங்கள் தேசத்துக்குப் போவோம்' என்று குறத்தி சொல்கிறாள். குறத்தி வாழ்த்துகிறாள்.

அச்சமயம் தோழி வருகிறாள்.

'குறத்தி சொன்னாற்போல, சகசி மன்னர் பரிவாரத்துடன் வந்து கொலுவீற்றிருக்கிறார். நீ மன்னனிடம் வந்து வேண்டிக் கொள்' என்று தோழி சொல்கிறாள்.

தோழி சொன்னவாறு இராச கன்னிகை கொலுவிருக்கும் சகசி மன்னரிடம் சென்று வணங்கி வேண்டிக்கொள்கிறாள்.

சகசி மன்னன் இராச கன்னிகையை மணம்புரியச் சம்மதம் தெரிவிக்கிறான்,

தோழிகள் சோபனம் பாடுகிறார்கள். குறவஞ்சி நாடகம் நிறைவுறுகிறது.

இந்த இசைநாட்டிய நாடகத்தில் பயன்படுத்தப்பெற்ற இராகங்கள் 12. தருவு 3. ஆகிரி 4. சௌராஷ்டிரம் 5. கண்டாரவம், 6 சாரங்கா, 8. சங்கராபரணம், 11. தேவகுப்தி 12. காம்போதி, 17. தோடி, 32, ஸ்ரீராகம் 34, தோடி, 37. காம்போதி 47, பைரவி.

# விஷ்ணு சாகராஜ விலாசம்

## நாடகக் கதைச் சுருக்கம்

இந்த நாடகம் 14 கதாபாத்திரங்களைக்கொண்டு நடிக்கப் பெற்ற இசை நாட்டிய நாடகமாகும். வேத்தியல் மரபில் ஆக்கப்பெற்றது. தஞ்சையில் ஆட்சிபுரிந்த சகசி மன்னனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு இயற்றப் பெற்றது.

இசை நாட்டிய நாடக மரபுக்குரியதாக இசைப்பாடல் களாலும் இடையிடையே உரைநடை விரவப் பெற்றும் உருவாக்கப்பெற்ற படைப்பு.

இந்நாடகத்தில் தோடயமங்களம் 1 மங்களம் 1 காப்பு விருத்தம் 1 விநாயகர் தருவு 1 இசைப்பாடல்களாலான தருவு கள் 33 சோபனப்பாட்டு ஆகியவை உள்ளன.

முதலில் சூத்திரதாரன், நாடகத்தைத் துவக்கி வைக்கக் கட்டியக்காரனை அறிமுகம் செய்து வைக்கிறான்.

'சோழநாட்டில் புகழ்பெற்ற திருவீழிமிழலைத் தலக் கோயிலுக்கு ஸ்ரீ மகாலிங்கமூர்த்தியை வழிபட, ஸ்ரீ மகா விஷ்ணு வருகின்றார்' என்று கட்டியக்காரன் கூறிவிட்டு மறை கிறான்.

ஸ்ரீ மகாவிஷ்ணு, பூதேவி, சீதேவி இருவருடனும் திரு வீழிமிழலைக் கோயிலுக்கு வருகிறார்கள். ஸ்ரீ மகாலிங்கமூர்த்தி யான சிவபெருமானை வழிபட்டு அருச்சிக்க, பூக்களைக் கொண்டுவருமாறு ஸ்ரீ மகாவிஷ்ணு கட்டளையிடுகிறார். லக்ஷ்மிதேவியும், பூமிதேவியும் அன்றலர்ந்த பூக்களைக் கொண்டுவருகிறார்கள்.

செந்தாமரை முதலிய நறுமண மலர்களைக் கொண்டு வந்து ஸ்ரீ மகாவிஷ்ணுவிடம் அருச்சனை செய்யக்கொடுக் கிறார்கள். லக்ஷ்மி தேவியும் பூமி தேவியும் ஒருவர் பூவை

எடுத்துக் கொடுக்க, ஒருவர் கொடுத்த பூக்களை எண் ண கொள்கிறார்கள். இவ்விதம் ஆயிரம் செந்தாமரை மலர்களால் ஸ்ரீ மகாவிஷ்ணு அருச்சித்துக்கொண்டிருக்கிறார்.

அருச்சனையின் முடிவில் ஆயிரத்துக்கு ஒரு பூ குறைகிறது இவ்வுண்மையைப் பூமிதேவியும் லக்ஷ்மிதேவியும் சொல்கிறார்கள். ஸ்ரீ மகாவிஷ்ணு மனம் கலங்குகிறார். அருச்சனை பூர்த்தி யாகாமல் சிவாபராதம் நேர்ந்து விட்டதே என்று வேதனைப் படுகிறார். குறைந்த ஒரு பூவுக்காகத் தன் கண்மலரைப் பெயர்த்து அருச்சனை செய்ய முற்படுகிறார், ஸ்ரீ மகாவிஷ்ணு. அதைக்கண்டு மனம் வருந்திய பூமிதேவியும் லக்ஷ்மிதேவியும் தங்கள் கண்களைத் தருவதாக முன் வருகிறார்கள். இவ்வித கண் பெயர்த்து அருச்சிக்க முற்பட்ட ஸ்ரீ மகாவிஷ்ணுவையும், லக்ஷ்மிதேவி பூமிதேவி இருவரையும் புகழ்ந்து இவர்கள் பக்திக்கு உவந்து காட்சி தருகிறார் ஸ்ரீ மகாலிங்கமூர்த்தி.

ஸ்ரீ மகாவிஷ்ணு துதிசெய்கிறார். வேண்டிய வரங்களைக் கேட்குமாறு ஸ்ரீ மகாலிங்கமூர்த்தி அருள் கூறுகிறார். ஸ்ரீ மகாவிஷ்ணு, வணங்கிக் கூறுகிறார்; "ஸ்வாமி, எப்போதும் தங்கள் பாதங்களை வழிபட்டுக் கொண்டிருக்கும் பேற்றை வரமாக அருளுங்கள்" என்று கேட்கிறார்.

மகிழ்ச்சியுற்ற ஸ்ரீ மகாலிங்கமூர்த்தி கூறுகிறார்; "ஸ்ரீ மகாவிஷ்ணுவே, நீர் கேட்டுக் கொண்டபடி வரம் தந்தோம். ஆனால் இந்தக் கலியுகத்திலே, நீர் ஸ்ரீ மகாவிஷ்ணு ரூபமா யிருந்து அருச்சித்தால் மட்டும் போதாது. தலங்கள் பலவற்றிலும் சிறந்தது சோழநாட்டுத் தஞ்சைத் தலம். அத்தலத்திலே யோசுவ குலத்திலே பிறந்த மன்னனான ஏகமகாராசன் இருக்கிறான். அம்மன்னனுக்குப் புதல்வனாகப் பிறந்து முடி சூட்டிக்கொண்டு, பல சிவத்தலங்களுக்கும் சென்று என்னை வழியட்டு நலம் பெறுவீராக"

இவ்வாறு ஸ்ரீ மகாலிங்கமூர்த்தி திருவருள் புரிகிறார். ஸ்ரீ மகாவிஷ்ணு மனம் களிப்படைகிறார்.

''ஸ்வாமி, தாங்கள் கட்டளையிட்டபடியே நடந்து கொள் கிறேன்'' என்று மகாவிஷ்ணு கூறுகிறார்.

''ஸ்ரீமகாவிஷ்ணுவே, இவ்விதம் என்னை வழிபட்டுத் துஷ்ட நிக்கிரகம் சிஷ்டபரிபாலனம் செய்து வருக'' என்று சிவபெருமான் கூறுகிறார்.

''ஸ்வாமி, தங்கள் கட்டளைப்படி, போசல குலத்திலே பிறந்து தங்களை வழிபட்டு, துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலனம் செய்கிறேன் சங்கசக்கரம் தாங்கள் கொடுத்தவை உள்ளன. அவற்றைக் கொண்டு திரைலோக்யஜயம் பண்ணி வாழ்கிறேன்'' என்று மகாவிஷ்ணு கூறுகிறார்.

பரமேசுவரன் கட்டளைப்படி ஸ்ரீ மகாவிஷ்ணு, தஞ்சையில் போசல குல ஏகோசி மன்னரின் மனைவியான தீபாம்பிகைக்குப் புதல்வனாக அவதரிக்க எண்ணம் கொண்டார்.

பூமிதேவியும் லக்ஷ்மிதேவியும் பரமேசுவரனை வணங்கி, ''ஸ்வாமி எங்களுக்கு என்ன கட்டளை?'' என்று கேட்டார்கள். பரமேசுவரன் அவ்விருவருக்கும் திருவருள் புரிகின்றார். ''ஸ்ரீவிஷ்ணு பத்னிகளே. சூரியவம்சத்தில் போசல குலத்திலே ஸ்ரீ மகாவிஷ்ணு அவதரிப்பார். நீங்கள் இருவரும் சந்திர வம்சத்திலே கலிங்க மன்னனுக்கும் புதல்வியராகப் பிறக்க வேண்டும். ஸ்ரீமகாவிஷ்ணு அவதாரமான பின்பு உங்களுக்கும் அவருக்கும் திருமணம் செய்து வைக்கிறேன்'' என்று கூறு கிறார்.

இந்த ஏற்பாட்டின்படி, ஸ்ரீ மகாவிஷ்ணு தஞ்சை ஏகோசி மன்னரின் புதல்வராகச் சகசி மன்னராகப் பிறந்து சகல தெய்வத் தலங்களையும் அடைந்து சிவ வழிபாடு செய்து வாழ்ந்து கொண்டிருக்கிறார்.

இலக்குமிதேவியும் கலிங்க மன்னரின் புதல்வியாரகப் பிறந்து புதல்வியராகப் பிறந்து வளர்கின்றார்கள்.

கலிங்க மன்னனும் அவன் மனைவியான சாரசாக்ஷியும் தம் பெண்கள் இருவரும், திருமண வயதை அடைந்து விட்டதனால், கல்யாணம் செய்ய யோசிக்கிறார்கள்.

இச்சமயம் திரிகால ஞானி ஒருவன், கலிங்க ராசனிடம் வருகிறான். கலிங்க இராசனுக்கு ஏற்பட்ட கவலையைப்பற்றி அறிந்து கொள்கிறான் திரிகால ஞானி. கலிங்க இராசனுக்குத் தன் திறமையைப்பற்றிக் கூறுகிறான். அச்சமயம் சின்னப்பண்டாரம் என்பவனும் அங்குவந்து சேர்கிறான்.

கலிங்கமன்னன், தன் புதல்வியர் இருவருக்கும் தக்க கணவன் வேண்டுமென்று திரிகால ஞானியிடம் சொல்கிறான்.

திரிகால ஞானி சொல்கிறான்.

'கலிங்க இராசாவே பரமசிவன் கட்டளையின்பேரில் ஸ்ரீ மகாவிஷ்ணு தஞ்சையில் ஏகோசி மன்னரின் புதல்வன் சகசி மன்னராகப் பிறந்துள்ளார். அவ்விதமே ஈசுவரன் கட்டளைப்படி ஸ்ரீ மகாவிஷ்ணுவின் பத்னிகளாகப் பூமிதேவியும் லக்ஷ்மி தேவியும் உன் புதல்விகளாகப் பிறந்திருக்கிறார்கள். விரைவில் நாமே சகசி மன்னனுக்கு உமது புதல்வியரை மணம் புரிவிக்கிறோம். விரைவில் கன்னிகைகளை அழைத்துவா' என்று சொல்கிறான். திரிகால ஞானியின் சொற்படி, தன் மனைவி சாரசாக்ஷியிடம் சொல்லி, சகியை அனுப்பிக் கன்னிகைகளை அழைத்துவரச் சொல்கிறான்.

அனைவரும் தஞ்சைச் சகசி மன்னனின் அரண்மனைக்குப் போகிறார்கள். கலிங்க மன்னனும் சாரசாக்ஷியும் சகசி மன்னனை வணங்குகிறார்கள். தம் புதல்வியரை மணம் செய்து கொள்ள வேண்டுமென்று சொல்கிறார்கள். தம் புதல்வியரின் அழகையும் குண விசேஷங்களையும் எடுத்துச் சொல்கிறார்கள்.

சகசி மன்னன் சம்மதம் தெரிவிக்கிறான். தம் புதல்வியருக்குச் சகசி மன்னனை மாலையிடச் சொல்லி மணம் முடிக்கிறார்கள்.

கலிங்க இராசனின் புதல்வியர், சகசிமன்னனை வணங்கி மகிழ்ந்து பாடுகிறார்கள்.

கல்யாணம் முடிந்து சோபனம் பாடப்படுகிறது. இத்துடன் விஷ்ணு சாகராஜ விலாச கல்யாணம் நிறைவுறுகிறது.

இந்நாடகத்தில் இராகங்கள் குறிக்கப்பெறவில்லை.

இசைப் பாடல்களான தருவுகளுக்கு உரிய இராகங்களை இசைவல்லார் கண்டறிக.

# காவேரி கல்யாணம்

## கதைச் சுருக்கம்

இந்த நாடகம் 10—கதாபாத்திரங்களைக் கொண்டது. வேத்தியல், பொதுவியல் என்ற இருவகை மரபில் இந்நாடகம் பொதுவியல் மரபில் நடிக்கப்பெற்றது. காவேரி சாகர கல்யாணம் என்றும் வழங்கப்பெறும். 'யக்ஷகானம்' என்று சிறப் பித்துக் கூறப்பெறும் நாடகம். இந்நாடகத்தை பாகவதமேளா மரபுக்குரியதாகவும் கருதலாம்.

இசை,நாட்டிய நாடக மரபின் வழியே இசைப்பாக்களாலும் இடையிடையே உரைநடை விரவப்பெற்றும் ஆக்கப்பெற்ற நாடகம்.

இந்நாடகத்தில் முதலில் தோடயமங்களம், மங்களம், விநாயகர் தருவு, காப்பு விருத்தம், இசைப்பாடல்களாலான தருவுகள் 33 மங்கள தருவு 1 ஆகியவை அடங்கியவை.

சூத்திரதாரன், காவேரி கல்யாண நாடகத்தைத் துவக்கிவைக்கக் கட்டியக்காரனை அறிமுகம் செய்து வைக் கிறான்.

காவேரியின் தந்தையான கவேர இராசன், தன் மனைவி யுடன்' சபைக்கு வருகிறார் என்று முதலில் கட்டியக்காரன் கூறுகிறான் நாடகம் துவக்கப்படுகிறது.

கவேர இராசன் சபையில் அமர்ந்திருந்து, தன் மனைவியைப் பார்த்து,தம் மகள் காவேரி வளர்ந்து பருவம் அடைந்து விட்டதனால் மணம் புரிவிக்க வேண்டுமென்று சொல் கிறான்.

கவேர இராசனின் மனைவி கூறுகிறாள்:

'நம் காவேரிக்கு மணம் செய்ய வேண்டியதுதான். அவள் சிவ வழிபாட்டில் தீவிரமாக இருக்கிறாள். அவளுக்கு நல்ல கணவன் கிடைப்பான். ஒரு குறத்தியும் அவ்விதமே சொல்யிலிருக்கிறாள். மணம்செய்ய, இப்போது தருணம் வந்துவிட்டது. தகுந்த கணவரைத் தேர்ந்துவர அமைச்சரை அனுப்பவேண்டும்' என்று.

'மனைவி சொல்லியவாறு கவேர இரா்சன், அமைச்சரிடம் கூறி,காவேரிக்கு ஏற்ற கணவனைப் பார்த்து வருமாறு கட்டளையிடுகிறான்.

காவேரிக்கு ஏற்ற கணவனைத் தேர்ந்து அறிந்துவரப் பலநாடுகளுக்கும் போகிறார் அமைச்சர்.

புறப்பட்டுச் சென்ற அமைச்சர் வழியில் அகத்திய முனிவரைப் பார்க்கிறார். கவேர இராசனுடைய புதல்வி காவேரிக்கு ஏற்ற கணவனைத் தேடி வந்ததாகவும், அவள் சிறப்புக்களையும் எடுத்துக் கூறுகிறார் அமைச்சர்.

அகத்தியர் அமைச்சரிடம் சொல்கிறார்.

'நான் சமுத்திர இராசனுக்குப் பெண் பார்க்க வந்தேன். நல்ல சமயம். காவேரிக்கு ஏற்ற கணவன் சமுத்திர இராசன்' என்று.

இருவரும் மனம் மகிழ்கிறார்கள், அமைச்சருடன் அகத்தியர் கவேர இராசனிடம் வருகிறார். அகத்தியரிடம் கவேர இராசன் விளக்கம் கேட்கிறான். அகத்தியரும் சமுத் திர இராசனுடைய சிறப்புக்களை விவரித்துரைக்கிறார். காவேரிக்கு ஏற்ற கணவன் சமுத்திர இராசனே என்றும் சொல்கிறார்.

அகத்தியர் மொழி கேட்டுக் கவேர இராசன் மனம் மகிழ்கிறான்.

'என் கன்னிகையைச் சமுத்திர இராசனுக்குக் கொடுக்கிறேன். சம்மதம். ஆனால் காவேரி, விவரம் அறிந்த கன்னிகை அல்லள். அவளிடம் விவரம் கூறிச் சம்மதம் பெறவேண்டும். அவள் இப்போது தனக்கேற்ற மண–வாளனைக் கருதித் திருவையாற்றிலே பஞ்சநதியீசரைப் பூசித்துக்கொண்டு விரத மிருக்கிறாள். அவளை நாம் இங்கே அழைத்தால் வரச் சம்மதியாள். அவள் இருக்குமிடத்திற்கு நாம் சென்று சம்மதம் கேட்க வேண்டும்' என்று கூறுகிறான்.

அகத்தியர், கவேர இராசனுடைய வேண்டுகோட்கு இணங்கிப் புறப்படுகிறார். கவேர இராசனும் அவன் மனைவியும் பரிவாரத்துடன் செல்கிறார்கள்.

திருவையாற்றிலே பஞ்சநதியீசர் கோயிலில், காவேரி சிவபெருமானை அருச்சித்து வழிபட்டுக்கொண்டிருக்கிறாள். தனக்குத் தகுதிவாய்ந்த கணவன் வாய்க்க வேண்டுமென்று பஞ்சநதியீசரை வேண்டிக்கொள்கிறாள்.

காவேரி சிவவழிபாடு செய்துகொண்டிருக்கும்போது பஞ்சநதியீசுவரர் கோயிலுக்கு, அகத்தியர், கவேர இராசன், அவன் மனைவி, அமைச்சர் அனைவரும் வருகிறார்கள்.

அகத்தியர் சொன்ன செய்தியை, கவேர இராசன் காவேரிச்குச் சொல்கிறான். சமுத்திர ராசனைப்பற்றிச் சிறப்பித்துக் கூறுகிறான்.

காவேரி மறுமொழி கூறுகிறாள்.

"நான் பஞ்சநதியீசரிடம் வேண்டிக்கொண்டு சிவவழிபாடு செய்து கொண்டிருக்கிறேன். எனக்கு நல்ல மணவாளனைக் கிடைக்கப்பண்ணுமாறு வேண்டிக் கொண்டுள்ளேன். அதனால் பஞ்சநதியீசுவரர் சொன்னாலன்றிச் சம்மதிக்க மாட்டேன்" என்று.

காவேர இராசன், காவேரி சொன்ன செய்தியை அகத்தியரிடம் கூறுகிறான்:

"அகத்திய மாமுனியே, என்மகள் பஞ்சநதியீசர் சொன்னா லன்றிச் சம்மதியாள். எனவே நீங்கள், தவவலிமையால் பஞ்ச நதியீசுவரரைப் பிரத்யட்சம் பண்ணச்செய்து அவரிடம் சம்மதம் கேட்கச் செய்து, என் கன்னிகையைச் சமுத்திர இராசனுக்கு மணம் முடித்துவைக்க வேண்டும்" என்று தெரிவிக்கிறான்.

அகத்தியர் அதற்குச் சம்மதம் தருகிறார்.

"கவேர இராசனே, என் தவ வலிமையால் பஞ்ச நதியீசுவரரைப் பிரத்யட்சம் பண்ணிக்கொண்டு சம்மதம் கொடுக்கச்செய்து உன் கன்னிகையைச் சமுத்திரனுக்கு மணம் செய்து வைக்கிறேன்" என்று கூறுகிறார்.

பின்னர், காவேரியைப் பார்த்தும் சொல்கிறார்.

"காவிரிப் பெண்ணே. உன் விருப்பம்போல் பஞ்சநதி யீசுவரரைப் பிரத்யட்சம் செய்கிறேன். சமுத்திர ராசனே உனக்கேற்ற கணவன்" என்று.

அகத்தியர், பஞ்சநதீயீசுவரரைத் தம் தவவலிமையால் துதி செய்து பிரத்யட்சமாகச் செய்கிறார்.

பரமசிவன் பிரத்யட்ச மாகிறார். அகத்தியரைப் பார்த்துப் பஞ்சநதியீசுவரர் கூறுகிறார்.

"அகத்தியரே, உம்முடைய துதிக்கு மனம் மகிழ்ந்தோம் காவேரியைச் சமுத்திர இராசனுக்கு மணம் செய்து வைக். கிறோம். விரைவில் சமுத்திர இராசனை அழைத்து வருக"

என்று அருள் புரிகிறார்.

அகத்தியர் சென்று சமுத்திர இராசனை அழைதீது வருகிறார்.

சமுத்திர இராசன் பஞ்சநதியீசரைப் பணிந்து துதி செய்கிறான். பஞ்சநதியீசுவரர் அருள் புரிகிறார்.

"சமுத்திர ராசனுக்கு ஏற்றவள் காவேரி! காவேரிக்கு ஏற்றவன் சமுத்திர இராசன்" என்று கூறுகிறார்.

காவிரி, பஞ்சநதியீசரிடம் சம்மதம் தெரிவிக்கிறாள்.

பின்னர்ப் பஞ்சநதியீசர் சமுத்திர இராசனை நோக்கிக் கூறுகிறார்:

"சமுத்திரா, காவேரி உன்னை மணந்துகொள்ளச் சம்மதம் தெரிவித்துவிட்டாள். என் முன்னிலையில் அவ்வளை மணம் புரிந்துகொள்" என்று. சமுத்திர இராசன் மனம் மகிழ்கிறான். கவேர இராசனும் களிப்படைகிறான்.

"காவேரிக்கும் சமுத்திரனுக்கும் மணம் புரிவிக்க முன் நின்று செய்த பெருமை அகத்தியருக்கே" என்று இருவரும் அகத்தியரைப் புகழ்ந்து வாழ்த்துகிறார்கள்.

பஞ்சநதியீசர் கட்டளைப்படி, அகத்தியர் காவேரிக்கும் சமுத்திர ராசனுக்கும் திருமணம் செய்துமுடிக்கிறார்.

அனைவரும் பஞ்சநதியீசுவரரை வணங்கித் துதிக்கின்றார்கள் சோபனத்துடன் காவேரி கல்யாண நாடகம் நிறைவுறுகிறது.

இந்நாடகத்திலும் இராகங்கள் குறிக்கப் பெறவில்லை. இசை வல்லலார் கண்டறிக.

---

# பூலோக தேவேந்திர விலாசம்

## தருவு முதற்குறிப்பும் பக்க எண்களும்

# சந்திரிகா ஹாஸை விலாசம்

## தருவு முதற்குறிப்பும் பக்க எண்களும்

# குறவஞ்சி

## தருவு முதற்குறிப்பும் பக்க எண்களும்

# விஷ்ணுசாஹராஜ விலாசம்

## தருவு முதற்குறிப்பும் பக்க எண்களும்

# காவேரி கல்யாணம்

## தருவு முதற்குறிப்பும் பக்க எண்களும்

# பூலோக தேவேந்திர விலாசம்

## தமிழ் இசை நாட்டிய நாடகம்

தஞ்சை

மராட்டிய மன்னர்

சகசீ காலத்துப்

படைப்பு

*கி.பி. 1684—1712*

# பூலோக தேவேந்திர விலாசம்

## இசை நாட்டிய நாடகம்

**நாடகத்தில் வரும் கதை மாந்தர்கள்**

1. சூத்திரதாரன் — நாடகத்தை அறிமுகம் செய்து விளக்கம் கொடுப்பவன் நாடகத்தை நடாத்துவோன்
2. கட்டியக்காரன் — நாடகத்தைத் துவக்கிவைப்பவன்
3. ரதி — மன்மதனின் மனைவி
4. மன்மதன் — ரதியின் கணவன்
5. சுசீலை — கதாநாயகி, சகசி மன்னரிடம் காதல் கொண்டவள்; காம்போச மன்னனின் மகள்
6. சகி — சுசீலையின் பாங்கி
7. காம்போசராசன் — சுசீலையின் தந்தை
8. காந்திமதி — காம்போசராசனின் மனைவி
9. சித்த புருடன் — சுசீலை கன்னிக்குச் சகசி மன்னனைப் பற்றித் தெரிவிப்பவர்
10. சகசி மன்னன் — தஞ்சை மராட்டிய மன்னர்; சுசீலையால் காதல்கொள்ளப் பெற்ற கதைத் தலைவன்

**கதை நிகழும் இடம்:** தஞ்சை, அரண்மனை.

**காலம்:** சகசி மன்னர் ஆட்சிக் காலம்: 1684—1712

**நாடகம் நிகழ்ந்த இடம்:** தஞ்சை, சகசி மன்னன் அரண்மனை நாட்டியசாலை.

# பூலோக தேவேந்திர விலாசம்

## (இசை நாட்டிய நாடகம்)

இராகம்—நாட்டை தாளம்—சம்பை

### தோடய மங்களம்

ஜய பார்வதீ ரமண
ஜய ஜானகீ ரமண
ஜய அந்தக தமன
ஜய மது ஸூதன (ஜய ஜய)

ஜய திரிபுர ஹரண
ஜய வேதோத்தரண
ஜய அகிலநுத சரண
ஜய ஜனா பரண (ஜய ஜய) 1

ஜய ரவிசசி நேத்ர
ஜய அகிலநுத பாத்ர
ஜய பன்னக சுசரித்ர
ஜய ஜகன் மித்ர (ஜய ஜய) 2

ஜய நந்தி வரவாஹ
ஜய அண்டஜ வாஹ
ஜய நித்யோத் ஸாஹ
ஜய சமித தாஹ (ஜய ஜய) 3

### மங்களம்

மகனீய தியாகேசுனிகி மங்களம் — நித்யமு
மாபாலி தேவுனிகி மங்களம் (1)

கலக வசந்துனிகி கமனீய சரித்ருனிஇ
மனஸிஜ ஹருனிகி மங்களம் (2)

சோமாஸ்கந்த மூர்த்திகி சோபன பிரதுனிகி
மாமீத தயஸேயு சுவாமிகி மங்களம் (3)

போசலகுல சாஹேந்திர பாஸூரகுல தேவுனிகி
மாசிவ தியாகேசுனிகி மங்களம். (4)

**சூத்திரதாரன் வசனம்:**

இந்தப்படிக்குச் சகல தேவதா பிரார்த்தனை பண்ணின ததனந்தரத்திலே காப்புக் கேட்பிக்கின்ற மார்க்கம்:

**விருத்தம்**

**காப்பு**

பாவேந்த ரெல்லாம் போற்றும் பாக்கிய வான்பூ லோக
தேவேந்திர சகசி ராசன் திகழ்விலா சத்தைப் பாட
நாவேந்து மங்கை பாதம் அன்புடன் போற்றி நாளும்
பூவேந்து கமலை மாதைப் பொன்னடி பணிவோம் நாமே.

சூ: **வசனம்:**

இந்தப்படிக்குக் காப்புக் கேட்பித்த ததனந் தரத்திலே பூலோக தேவேந்திர விலாசம் என்கிற நாடகத்திலே சகல விக்கினங்களும் நிவாரணம் பண்ண விக்கினேசுவரனைப் பிரார்த்தனை பண்ண, விக்கினேசுவரன் வருகிற மார்க்கம்.

**விநாயகர் தருவு**

வந்தே சிவஸூதம்
வரத மமரநுதம்
ஸூந்தர குணயுதம்
ஸூப்பிரஸன்ன வதனம் (1)

பாசாங்குச தரம்
　　பணிவர கேயூரம்
மூஷிக வாஹனம்
　　மோதக கரம் (2)
பாலேந்து சேகரம்
　　பால ஸிந்தூரதரம்
லாலித பக்தவரம்
　　லீலயா விக்னஹரம். (3)

**சூ: வசனம்:—**

இந்தப்படிக்கு விக்கினேசுவரன் வந்து சகல விக்கினங்களும் நிவாரணம் பண்ணின ததனந்தரத்திலே, இரதி தேவி சிங்கார வனத்துக்கு வருகிறாள் என்று சகல சனங்களுக்கும் எச்சரிக்க, கட்டியக்காரன் வருகிற மார்க்கம்.

## தருவு

இராகம்: **சௌராஷ்டிரம்**

1. வெள்ளிப் பிரம்பும் கையில் கொண்டு
　　வெள்ளைப் பல்லையுங் காட்டிக்கொண்டு
　வெள்ளை நாமம் சாத்திக் கொண்டு
　　குள்ளன் கட்டியக் காரன் வந்தானே. (1)

**சூ: வசனம்:—**

இந்தப்படிக்குக் கட்டியக்காரன் வந்து எச்சரிக்கை எச்சரித்த ததனந்தரத்திலே பூலோக தேவேந்திர விலாச நாடகத்திலே இரதி தேவி மன்மதன் மேலே மோடியாய்ச் சகியோடு கூடி, சிங்கார வனத்திற்கு வருகிற மார்க்கம்.

## இராகம்: ஆஹிரி

### திரை — உள் தரவு

2. அளகம் கோதியே முடித்து
அலர்ந்த சுகந்த மணிந்து
களபமிக மெய்யில் பூசிக்
களிப்புடன் இரதியும் வந்தாள். (1)

சரிகை ரவிக்கை யதிலடங்காமல்
தனங்கள் இரண்டும் விம்மவே
பரவச மாகிய இந்து வதன
பரவை யிரதியும் வந்தாள். (2)

## இராகம்: சௌராஷ்டிரம்

### வெளி தருவு

3. வகையா யிரதியும் வந்தாள்
சகியுடனே
வகையா யிரதியும் மதனுடன்
மோடியாய்
அகமிக மெலிவு மாய்
ஆசை பொறாமல் (1)

சந்தனத் திலகமுந் தீட்டி
விந்தையடாகவே
சந்தனம் மெய்யி லணிந்து
இரு விழிகளில்
அந்தம தாகவே
அஞ்சன மிட்டு (2)

சந்திரகாவிச் சேலை யுடுத்திச்
சிங்கார மாக
சந்திர காவி யுடுத்து
இந்த வுலகுதனில்
வந்த இரவி லெழு
சந்திரன் போல (3)

தாளில் சிலம்புகள் கொஞ்ச
கலு கலென
தாளில் சிலம் புகள்
தான்மிகக் கொஞ்சவே
வேளுடன் கோப மாய்
விளங்கும் பூங்காவில் (4)

**சூ. வசனம்:**

இந்தப்படிக்கு இரதி தேவி வந்து சகியுடன் கூடிச் சிங்கார வனத்தை வருணிக்கிற மார்க்கம்

இராகம்: **தன்யாசி**

**தருவு**

4. இங்கே நாமேன் வந்தோம்
சகியே யிப்போ — **பல்லவி**
இங்கே நாமேன் வந்தோம் — சகியே
இவ்விடம் பார்க்கின் மதனனின்
சிங்காடிக் கரும் புள்ள
சிங்கார வனமிது (1)

வங்கண மாய்ச் சேரும்
வண்டுக ளிதுவல்ல
நங்கையே அவன் கையில்
நாணிது பாரடி (2)

பொய்யல்ல நீ யிதைப்
　　பூவென் றெண்ணாதே
மைய லானவர் கையில்
　　வாளிகள் காணிது　　(3)

கிளி யென்று சொல்லிக்
　　கிட் டாதே
வளமா கவே யேறும்
　　வாகனங் காணிது　　(4)

இது வெல்லா மிருக்கவே
　　இங்கு மதன்வருவான்
பதறாமல் வேறே வனம்
　　பார்ப்போ மெழுந்திரடி　　(5)

சூ. வசனம்:

இந்தப்படிக்கு இருக்கவே, சகியோடு இரதிதேவி பேசிக் கொண்டிருக்கிற சமயத்தில் அப்புறம் கதாசம்விதானம் எப்படி யென்றால் இரதி தேவியை, மதன் தேடிக்கொண்டு வருகிற மார்க்கம்.

இராகம்: சாரங்கா

தருவு

5.　மன்மதன் வந்தான்
　　சிங்கார மாக
மன்மதன் வந்தான் — தன்
　　வங்கணக் காரனோடு
தன் மனைவி இரதியைத்
　　தயவாகவே தேடி　　(1)

பொன்னம்பூ நிசார் தொடுத்து
    பூவங்கி யேதரித்து
தன்னதான வோலைப் பூ
    சமுதாடு கையில் கொண்டு (2)

சூ. வசனம்:

இந்தப்படிக்கு மன்மதன் வந்து சகியோடு கூடியிருக்கிற இரதியைப் பார்த்து, வங்கணக்காரனுடன் சொல்கிற மார்க்கம்.

இராகம்: **பைரவி**

**தருவு**

6. மோடியாய் வந்தாளே இந்தரதியும்
    மோடியாய் வந்தாள்
தேடி வந்தோமே நாம்
    வனத்தினில் இவளைச்
சிங்கிக் கொள்கிறேன் பார்
    சித்தம் வெறுத்தென்மேல் (1)

சகத்தி லுள்ளோரை யெல்லாம்
    சயித்த வென்றனுக்கு
வகையா யிந்த ரதியை
    வணங்கச் செய்வ தரிதோ (2)

பிரிந்த பெண்கள் தம்மையும்
    பிரிந்த புருடரையும்
மருவச் செய்வது நானன்றோ
    வங்கணக் காரா — இவள் (3)

சூ. வசனம்:

இந்தப்படிக்கு மன்மதன் வங்கணக்காரனுடன் சொல்லிய பின் இரதியும் மன்மதனும் உத்தரப் பிரத்யுத்தரம் சொல்கிற மார்க்கம்.

இராகம்: கௌளிபந்து

சம்வாத தருவு

7. மன்மதன்: என் திராணை பாரடி இனி
உன்னை யெய்யு றேண்டி

ரதி: அறிந்துதா னுகந்து
மோடி செய்வேன் காண் (1)

மன்: அரவிந்த சரமுன் மேல்
அதட்டி யெய்வேனடி

ரதி: அரும்பு முல்லையாலே நான்
அதனை வெல்லுவேன் காண் (2)

மன்: வனிதையே இனிச் சோக
வாளி போடுகிறேன் பார்

ரதி: உகந்து மனதி னாலே
மாற்றிக் காட்டுவேன் காண் (3)

மன்: மாந்தளிர் பாணத்தை நான்
வாங்கி விடுவேன் இனி

ரதி: சந்தனக் கையி னாலே
தள்ளி விடுவேன் காண் (4)

மன்: முல்லைச் சரத்தை யினி
முனைந்து விடுவேன் காண்

ரதி: வெல்லுவேன் அதை யென்கை
விரலி னகத்தினால் காண் (5)

மன்: நீலோத் பலத்தை யினி
நிமிடத்தி லெய்யுறேன் பார்

ரதி: ஆழமான கண் களினால்
அதனை வெல்லுவேன் காண் (6)

சூ. வசனம்:—

இந்தப்படிக்கு மன்மதன் ஐந்து பாணங்கள் எய்ய, அந்தப் பாணங்களை, இரதி தன்னுடைய அவயவயங்களினாலே சயித்ததுகண்டு, மன்மதன், கோபத்துடனே சொல்கிற மார்க்கம்.

தருவு

8. சம்மோக னாஸ்தி ரத்தை
நாஸினி யெய்தேன் பார்
சம்மதி யின்றி யும்மைத்
தான் வந்தணைந்தே னையா (1)

சூ. வசனம்:—

இந்தப்படிக்கு இரதிதேவி சம்மோகனாஸ் திரத்தாலே மோகித்து மோடிவிட்டு, கிட்ட வந்த இரதியைப் பார்த்து மன்மதன் சொல்கிற மார்க்கம்

இராகம்: சுரடி

தருவு

9. இனிமேல் ரதியே நீ
என்ன செய்வாயடி
கனமோடி செய்தநீ யென்
காலைப் பிடிக்க லாச்சே (1)

எந்த னுடைய வல்லமை
எல்லா மறிந்தி ருந்தும்
சிந்தை பேதகம் செய்தாய்
சிங்கிக் கொள்ளச் சொன்னேனே (2)

மேலாம் கன்னிநீ யென்று
விருதா யிருந்தது போய்
நாலுபேர் முன்னே யிப்போ
நாண — இட மாச்சுதே (3)

பிரிந் திருந்த பூங்காவில்
பேசா திருந்த வுன்றன்
கர்வம் வணங்கச் செய்து
கெட்டியாய்ச் சயங் கொண்டேனே (4)

சூ. வசனம்

இந்தப்படிக்கு, உன்னைச் சயித்தே னென்று சொன்ன மன்மதன் வார்த்தைகேட்டு, இரதிதேவி மன்மதனைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்.

இராகம்: **கும்மகாம்போதி**

**தருவு**

10. என்னைநீ யிப்போ சயிப்பது
என்ன பெருமை காண்
கன்னியர்களைப் புருடர் சயிப்பது
கலியுகத்தில் புதுமையா—அதனால் (1)

வெற்றியாகவே புறத்தி லொருத்தரை
வில் லெடுக்க வொட்டாத
சத்திரபதியான சகசேந்திரன் முன்
தடுத்து வில்லெடுத்தா லப்போவல்லவன் (2)

மிஞ்சிய சுந்தரத்தா லுன்னை
வெற்றி கொண்டவன் முன்னே
அஞ்சாமல் நின்று பேசிலாயாகில்
ஆண்பிள்ளை சிங்கம்நீ மெய்தானே (3)

சூ. **வசனம்:—**

இந்தப்படிக்குச் சொன்ன இரதி வார்த்தையைக் கேட்டு மன்மதன் சொல்கிற மார்க்கம்.

இராகம்: **மத்தியமாவதி — ஏகதாளம்**

**தருவு**

11. பெண்மதியா லேனிப்படி யென் முன்னே
பேசவந்தா யடி எளிதாமோ
தண்மதி முக சககேந்திரனுக்கு நாம்
சரிபோ வவர் மகிமை யறியாய் (1)

தேவியே யானால் கேளா யிந்தச்
சேதியெல்லாம் நாம் சொல்லுகிறோம்
பூவுல காளும் மன்னனை யிந்தப்
பூலோக தேவேந்திர னெனச்சொல்லுவோம் (2)

எப்படி யவ னிந்திர னென்றெண்ணி
ஒப்பு வதென் றிகழாதே
தப்பித மல்ல இந்திர னுக்கிவன்
சரியெனுஞ் சாகேந்திரன் தானதிகம் (3)

எந்த மார்க்கத்தில் தானதி கம்மென்று
இருதயத்தில் யோசனை எண்ணாதே
அந்த மார்க்கமும் சொல்லுகிறோ மிப்போ
அன்பா யுள்ளத்தி லறிந்துகொள்ளாய் (4)

**வேறு — தருவு**

12. காமதேனு
அவனுக் குண்டு — நல்ல
கைக்காம தேனு
இவனுக் குண்டு (1)

கற்பகத் தரு
அவனுக் குண்டு — தேக
கற்பகத் தரு
இவனுக் குண்டு

மெய்புள்ள யானை
அவனுக் குண்டு — நல்ல
வீரத்வ யானை
இவனுக் குண்டு (3)

மந்திர வாள்
அவனுக் குண்டு — வீர
மாற்றுள்ள வாளும்
இவனுக் குண்டு (4)

சுந்தர ரம்பை
அவனுக் குண்டு — தினம்
சுரதம்செய் ரம்பை
இவனுக் குண்டு (5)

அமரர் தர்சனை
அவனுக் குண்டு — தேவ
ஆலய தர்சனை
இவனுக் குண்டு (6)

குமுறவே முரசு
அவனுக் குண்டு — கையில்
கொட்டிய முரசும்
இவனுக் குண்டு (7)

ஆகையா லிவனே யதிகம்
அவனந்த முனிபத்னியை யணைந்தான்
சகசிராச தேவேந்திரன் இப்படி
ஒருத்தன் மனைவிக்கும் யாசிப்பதில்லை (8

கூ. **வசனம்:**

இந்தப்படிக்குச் சொன்ன மன்மதன் திரும்பியும் இரதியைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்.

இராகம்: **சங்கராபரணம்**

**தருவு**

இந்தச் சகசி
ராசேந்திரன் குணங்களை
எத்தனை யென்று
இரதியே சொல்வேன்
சந்ததம் ஸ்ரீகிருஷ்ணன்
போலவே வேடிக்கையாய் (1)

சகல கலாநிதியாய்
இருப்பா ரடி
சக்தியானு ரக்தராய்
இருக்கிறா ரடி (2)

மிகவும் தசரத ராமன்
போலவே — சு
மித்திராத் மஜ சேவிதராய்
இருப்பா ரடி (3)

சகலரும் அறிய வே
சந்திரன் போலவே
சகல கலாநிதி யாயும்
இருப்பா ரடி (4)

லட்சணத் துடனே
விஷ்ணுவைப் போலவே
லக்குமி யுக்தராய்
இருப்பா ரடி (5)

தட்சின சிம்மாசனத்தில்
முருகன் போலவே
சிவசத்தி தரராய்
இருப்பா ரடி (6)

சூ, **வசனம்:**

இந்தப்படிக்கு மன்மதன் கூறியபின் நீ சொன்னாற்போல சகசேந்திரனைக் கண்டு ஆசை கொண்ட நாயகியைச் சயித்து வருகிறேனென்று மேலும் மன்மதன் சொல்ல, ததனந்தரத்திலே மன்மதனும் இரதியும் உத்தரப் பிரத்யுத்தரம் சொல்கிற மார்க்கம்.

சூ. **வசனம்:**

இந்தப்படிக்கு மன்மதன் இரதியைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்.

இராகம்: **சுகபந்துவராளி — சாபு தாளம்**

**தருவு**

14 ஏரதியே சகசேந் திரனை
என்னால் கிட்டப் போகாது
பரமசிவன் அவன் மீதில்
பிரத்தியட்ச மாக இருக்கிறார் (1)

முன்னே சங்கர னாலே
மோசம் வந்த தறிவாயே
இன்னுமங்கே போகச் சொல்கிறாய்
எளிதாமோ சும்மா போடி (2)

சூ. **வசனம்**

இந்தப் படிக்குச் சொன்ன மன்மதனைப் பார்த்து இரதிதேவி சொல்கிற மார்க்கம்

இராகம்; **காபி — ஆதி தாளம்**

**தருவு**

15. என்னை வெல்வதோ சிலாக்கியம்
ஆசை மன்மதா
என்னை வெல்வதோ சிலாக்கியம்
என்புருடன் நீயாகையால்

தென்னளகைச் சகசேந் திரனைச்
சேரவே மைய லான

கன்னிகை ஏவும் சரத்தால்
கலங்கச் செய்வதோ யோக்கியம் (2)

இப்போநீ அந்தப் பெண்ணை
எதிர்த்து வெல்லவை யாகில்

அப்போ துன்னுடைய திரானை
அங்குகாண் — இப்படி வந்து (3)

சூ. வசனம்:

இந்தப்படிக்கு இரதிதேவியின் வார்த்தை கேட்டு மீண்டும் நீ சொன்னாற்போல சகசேத்திரனைக் கண்டு ஆசைகொண்ட நாயகியைச் சயித்து வருகிறேனென்று மன்மதன் சொல்ல, ததனந்தரத்திலே மன்மதனும் இரதியும் உத்தரப் பிரத்யுத்தரம் சொல்கிற மார்க்கம்.

இராகம்: சுபபந்துவராளி — சாபு தாளம்

சம்வாத தருவு

16. மன்: அப்படியே சகசேந் திரனை
ஆசையாய்ப் பார்த்திருக்கும்

செப்பு முலையாளை யிப்போது
சிக்கிக் கொள்வேனே (1)

ரதி: சிங்கித்தான் கொண்டாலு மவன்
சேர்ந்த வுடனே யுன்னை

சிங்கிக் கொள்வா ளிந்தவார்த்தை
செல்லாது போங்காண் (2)

மன்: செல்லாது போங்கா ணென்று
திரும்பநீர் சொல்லவேண்டாம்
வல்லமை யறியா யோ
வாதேனடி போடி (3)

ரதி: போடியென் றென்னை மெள்ளப்
புல்ல வேண்டா மினி — வா
தாடித் தெருட்டு மீதல்ல
தாட்சண்ய மோகாண் (4)

மன்: தாட்சண்யம் செய்யேன் காண்
தன்னாலே யான தெல்லாம்
ஆட்சியாய்ப் பார்த்துச் சயித்தால்
அணையநீ வாடி (5)

ரதி: வாடி என்று நீர்சில
வன்ம மெண்ணித் தீருமோ
மோடி வந்த தினி
முடிக்கவே வேணும் (6)

மன்; முடிக்க மனதில்லா விட்டால்
முன்னே வாது சொல்வேனோ
துடுக்கு செய்கிறா யென்னைச்
சுந்தர வல்லி (7)

ரதி; வல்லி என்றுநீர் கிட்டி
வலியச் சேர வேண்டாம்
செல்லுவீ ரிவள் வாது
திரட்டு மையா (8)

மன்: சார்ந்து அவளை நாளும்
சயம்கொண்டு வந்தா லப்போ
சாந்தணி முலைமின்னே நீ
தானே வாராயோ (9)

ரதி: வாரோ மென்கிறீர் அங்கே
வகையாய் வெல்லாமல் வாதால்
மாறாமல் நீராய் வந்து
வலியவே சேரும் (10)

**சூ. வசனம்:**

இந்தப்படிக்கு மன்மதனும் இரதியும் பரஸ்பரம் பேசிக் கொண்டு இருக்கிற சமயத்திலே ததனந்தரம் கதா சம்விதானம் எப்படியென்றால் — காம்போச இராசாவினுடைய குமாரத்தி சுசீலை ரேகை என்கிற கன்னிகை சகசி மகாராச தேவேந்திரன் சாரி வருகிறதைப் பார்த்து, அவருடைய சௌந்தர்யாதிசயம் கண்டு மோகித்து விரகாதி சயத்தினாலே சகியோடு கூடிச் சிங்கார வனத்துக்கு வருகிற மார்க்கம்.

இராகம்: **ஆஹிரி—ஆதிதாளம்**

(உள் தருவு)

17. கன்னிகை வந்தாள் சகியுடனே — (எடுப்பு)

கன்னிகை வந்தாள் — அணி
கனக பணிக ளிலங்க
மன்னன் சகசேந்திரனைக் கண்டு
மைய லடங்காமல் கொண்டு (1)

விரக பதங்கள் பாடி
வெண்ணிலா வதனால் வாடி
இருவிழி புனலு மோடி
இருதனம் குலுங்க நாடி (2)

### வேளி தருவு

18. சுசீலை கன்னிகை வந்தாள் — சிங்காரமாக
(எடுப்பு)

சுசீலை கன்னிகை வந்தாள்
துரை சகசேந்திரனைக் கண்டு
சசி கிரணத்தால் மெலிந்து
சரீர மிகத் துவண்டு (1)

வடமா யணி தரள
மாலை நிரை திரள
கொடி யிளம் பவளக்
கொடிபோ லிடை துவள (2)

சித்தமு மிகக் கலங்க
சேரவே நினைந்து தங்க
குத்து முலையுங் குலுங்கக்
கோவை போலிதழ் துளங்க (3)

லேர்மருக் கொழுந்து சூடி
விரக பதங்கள் பாடி
சேர்மயில் கூடவே தேடிச்
சிங்கார வனத்தை நாடி (4)

சூ. வசனம்:

இந்தப்படிக்குச் சுசீலை வந்து விரகம் பொறுக்கமாட்டாமல் சசியைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்.

இராகம்: நாதநாமக்கிரியை — சாபு தாளம்

### தருவு

19. மன்னன் சகசேந்திரனைச் சகியே — கண்டு
மையல் மிகக் கொண்டேன் சகியே
என்ன செய்வேனடி சகியே — தன
மிரண்டும் மிகவிம்முது சகியே! (1)

கங்குல் விடியுதில்லை சகியே — மதி
காய மிகமெலிந்தேன் சகியே
செங்கை வளைநெகிழ்ந்து சகியே — இதோ
சிறுக நழுவுதடி சகியே! (2)

அன்ன மிரங்குதில்லை சகியே — அணி
யாடை பிடிக்குதில்லை சகியே
கன்னன் சகசிராசனைச் சகியே — என்று
கலந்துநான் இருப்பேன் சகியே! (3)

சூ. **வசனம்:**

இந்தப்படிக்கு இராச கன்னிகை சகசி இராசேந்திரனை நினைத்துச் சகியுடனே விரகமாகப் புலம்புவதைப் பார்த்து மன்மதன், தான் நினைத்த காரியம் சயமாயிற்று என்று, இந்தக் கன்னிகையைச் சயிக்கிற நிமித்தமாக வருகிற மார்க்கம்.

இராகம்: **கும்ம காம்போதி — ஆதிதாளம்**

**தரவு**

20. சந்திரமுகி சுசீலை மேல்
சரங்கள் தொடுக்க வேண்டி
கந்தவேள் வில் கொண்டு
கடுகவே வந்தானே (1)

சூ. **வசனம்:**

இந்தப்படிக்கு மன்மதன் வந்து கன்னிகையைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்.

இராகம்: **தோடி — சாபு தாளம்**

**தருவு**

21. எய்வே னினி வாய்திறந்
தாரை வைவாய் — மிஞ்சி
எழும்பும்மெய் வாய் விழியால் — மெரட்டி
என்வாளி கொய்வாய் (1)

கெஞ்சடி யிப்போது
சகசேந் திரனை நீ — கண்டு
கிட்டியு மவனுன்னைக் கிட்டாமல் — மானே
இருந்தேனே வந்தேனே (2)

துடுக்கு நடவாதே
இனி நிந்தை சொல்லவும் — போகாதே
தடுத்துன்னா லாகாதே — எந்தன் இரு
தாளைப் பணிமாதே (3)

அடுத்து நீ இப்படி
யேவணங் காவிடில் — அங்
கணையும் வகையாய்த் தொடுப்பேனே அடிப்பேனே
இனி விடேனே

கு. **வசனம்:**

இந்தப்படிக்குச் சொன்ன மன்மதனைப் பார்த்து இராச கன்னிகை சொல்கிற மார்க்கம்.

இராகம்: **சங்கராபரணம் — சாபு தாளம்**

22. எய்யாதே நில்லு
அடே மன்மதா ! (எடுப்பு)

எய்யாதே நீ நில்லு
எங்கள் சகசேந்திரன் தன்
கையால் மாலை யிட்டுக்
கலந் தணைவா னிப்போ (1)

மதிக்கும் வகையா யென்னை
வாட்ட வேண்டா மென்று
உதட்டி லுறவை விட்டு
உண்மை யைச் சொல்லு

அதட்டுவ தெல்லாம் பின்னே
ஆகட்டு மயல் கொண்ட
மதத்தால் மதுவை யுண்ட
வண்டுபோல் மயங்குகிறேன் (2)

எல்லா மொரு நாழிகை
இதிலே சகசி ராசன்
சல்லா பமா யென்னைத்
தழுவு வான் கண்டாய்
புல்லாத மாதர் மேல்
பூங்கணை தொடுக்காதே
வல்லமைக் காரா உன்
மானிடம் அறியேனோ (3)

சூ. **வசனம்**

இந்தப் படிக்குச் சொன்ன நாயகியைப் பார்த்துக் கோபத்துடனே மன்மதன் சொல்கிற மார்க்கம்.

**இராகம்: சுகபந்துவராளி—சாபு தாளம்**

**தருவு**

23. நானினி யுன்னை விடேன்
ஏனிப் போ வீணிலே
என்னுடன் வாதாடி
எதிர்த்துப் பேசுறா யடி. (1)

மிஞ்சாதே நீ நில்லடி
அஞ்சு கணையினாலே கர்வம்
அடங்கவே அதட்டி
நான் எய்யுறே னடி (2)

சூ. **வசனம்**

இந்தப்படிக்கு மன்மதன் பாணங்களை எய்யச் சகிக்க மாட்டாமல் மிகவும் நொந்து இராச கன்னிகை, சகியைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்.

### இராகம் பந்துரவாளி—சம்பை தாளம்

### தருவு

24. என்னாசை வசமல்ல சகியே—இதுக்கு
என்ன செய்வேன் சொல் சகியே
மன்னன் சக சேந்திரன் சகியே—என்னைக்
கல்யாண மெப்போ செய்வான் சகியே? (1)

இந்திர னிந்திராணியும்போல் சகியே—நாங்கள்
இருவரெப்போ மகிழ்ந்திருப்போம் சகியே
கந்தவேள் வள்ளியைப் போல் சகியே—என்று
களித்து விளையாடுவோடும் காண் சகியே (2)

மாதவனும் லக்ஷ்மியும்போல் சகியே - நாங்கள்
மலரணையி லிருப்பதெப்போ சகியே
வேதவனும் வாணியும் போல் சகியும்—நாங்கள்
வேடிக்கையா யிருபப தெப்போ சகியே? (3)

பஞ்சார னென்மீதில் சகியே—வன்மம்
பாராட்டி எய்யுகிறான் சகியே
அஞ்சாதே யென்று சொல்லு சகியே—எனக்
காதரவா யொருவரில்லை சகியே? (4)

கு வசனம்

இந்தப்படிக்கு இராச கன்னிகை சகியைப் பார்த்துப் புலம்பிக்கொண்டு இருக்கிற வேளையில் பரமேசுவரன் கிருபையினாலேயே ஒரு சித்த புருடன் அந்த வனத்துக்குத் தபசு செய்ய வருகிற மார்க்கம்.

### இராகம்: சௌராஷ்டிரம்

### தருவு

25. திரு நீறு மிகவணிந்து
சப தாவட முங்கொண்டு
மருவு ருத்திராக்க மாலையணிந்து
மா முனிவன் வந்தனனே (1)

சடையும் விரித்துக் கொண்டு
  தரித்த புலித் தோலுடனே
திடமான பக்தி யுடன்
  சித்த புருடன் வந்தானே (2)

சூ. வசனம்:

இந்தப்படிக்குச் சித்த புருடன் தஞ்சபுரியீசனைச் சேவிக்க வருகிற வேளையிலே சிங்கார வனத்திலே இராச கன்னிகையைக் கண்டு, (சித்த புருடன்) சொல்கிற மார்க்கம்

இராகம்: **காவேரி — ஆதி தாளம்**

**தருவு**

26. கன்னிகை நீ யாரடி — இங்கே வந்த
  காரணம் ஏதடி (எடுப்பு)

வகையான தேவ ரம்பையோ — அல்லதிந்த
  வனத் தினில் தேவதையோ
உன்னுடைய பேர் என்னடி — நீயிருக்கும்
  ஊரேது தெரியச் சொல்லடி (1)

கருத்தில் துயர மென்னடி எனக்கிதைக்
  கவடில் லாமல் சொல்லடி
தெரியநீ யென்னுடன் சொன்னால் — உந்தன்
  சிந்தனை தீர்ப்பே னடி (2)

சூ. வசனம்:

இந்தப்படிக்குச் சொன்ன சித்த புருடனைப் பார்த்து, தன்னுடைய சேதி சொல்ல வெட்கப் பட்டிருக்கிற இராச கன்னிகையின் மனதறிந்து ,சகி, சித்த புருடனைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்.

இராகம்: சுப பந்துவராளி — ஆதி தாளம்

தருவு

27. சகசி ராசனைக் கண்டிந்தத் தையல்
மையல் கொண்டா ளையா
— மாமுனிவனே-இந்தச்

சஞ்சலந் தீரவே தைரியம்
சொல்வா ரில்லை — மாமுனிவனே (1)

வகையறி யாம லிந்த
வனத்துக் கிவள் வந்தாளையா
— மாமுனிவனே

அஞ்சுவாளி தொடுத்து மதனும்
வாகாகவே யெய்தா னையா
— மாமுனிவனே (2)

சொன்னாலுங் கேட்க வில்லை
தொடர்ந்துபின் வாரா னையா
— மாமுனிவனே

இவன் சொல்லுக் கேற்றவகை
சொல்லி ரட்சியு மையா
— மாமுனிவனே (3)

எந்நாளு மிந்தச் சகாயம்
இதயத்தில் மறவா னில்லை
— மாமுனிவனே

நிமிடமிருந் திந்த வகைக்
கேற்ற தியம்பு மையா
— மாமுனிவனே (4)

சூ. **வசனம்:**

இந்தப்படிக்குத் தைரியமாகச் சொன்ன சகியைப் பார்த்துச் சித்த புருடன் சொல்கிற மார்க்கம்.

இராகம்: **பைரவி — ஆதி தாளம்**

**தருவு**

28. மதனை வெல்லுவா ராரடி ?
— எல்லார்க்குமவன்
சதிகார னறிவா யோடி !
— பூமியிலிவனை
மதியா திருப்ப துண்டோடி!
— எதிர்த்தபேர்மேல்
பதறி வாளி யெய்வானடி!
— அடியோசேடி! (1)

வேதனிவன் சௌரியங் கண்டு
— சரமோரைந்து
விந்தையாகச் செய்தான் பண்டு
— உடனே பயந்து
சூதாகவே வரி வண்டு
— மருவவதைத்
துளங்கு பூவாய்ச் செய்தான்விண்டு !
— அடியோ சேடி (2)

அவனை வெல்வகை கேளடி
— உங்கள் நிமித்தம்
அன்பாய்ச் சொல்கிறேனடி!
— மதனைச் செயித்த
சிவனைநீ பூசை செய்வாயடி !
— சகசேந்திரனுன்னைச்
சேருவா னிது மெய்யடி
—அடியோ சேடி (3)

சூ. **வசனம்:**

**இந்தப்படிக்குச் சித்த புருடன் சொன்ன ததனந்தரத்திலே சகி, இராச கன்னிகையைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்.**

**சகி வசனம்:**

வருவாய் இராச கன்னிகையே, சித்த புருடன் சொல்கிறான் சிவபூசை பண்ணினால் சகலமும் சயமாகும். நீ நினைத்த காரியம் கைகூடும்.

**சூ. வசனம்**

இந்தப்படிக்குச் சகி சொன்ன வார்த்தை கேட்டு இராச கன்னிகை நியமத்துடனே தஞ்சேசுவரனைப் பூசை செய்ய வருகிற மார்க்கம்.

இராகம: **லலித பஞ்சமம் — ஆதி தாளம்**

**தருவு**

29. தரு இராச கன்னிகையும்
சகி சித்த புருடனும்
வரசிவ பூசை செய்ய
வந்தனரே (1)

**சூ. வசனம்:**

இந்தப்படிக்கு வந்த இராச கன்னிகையைப் பார்த்துச் சித்த புருடன் சொல்கிற மார்க்கம்.

**சித். வசனம்:**

வருவாய் இராச கன்னிகையே, மகாலிங்கமான தஞ்சேசுவரர் இதோ இருக்கிறார். நீ ஒரு மனதுடன் பூசை செய்தால், நீ நினைத்த காரியம் கைகூடும். அதற்கு ஆலோசனை இல்லை.

**சூ. வசனம்:**

இந்தப்படிக்கு இராச கன்னிகை, தஞ்சேசுவரனை நமஸ்காரம் பண்ணுகிற மார்க்கம்.

**இராகம்: தன்யாசி — ஆதிதாளம்**

**தருவு**

*30.* அலர்ந்த மல்லிகையா லும்மை
அருச்சனை செய்கிறேன்
நலம்சேரும் சகசேந் திரனையென்
நாதனாகப் பண்ணும் (1)

வாசமுல்லை மல ருமக்கு
வகையாச் சாத்துகிறேன்
போசல குலேந் திரனையென்
புருடனாகப் பண்ணும் (2)

ஏகமன துடனே வில்வம்
எடுத்தருச்சனை செய்வேன்
ஏகேந்திரன் தரு சுதனை
எந்தன்பதியாய்ப் பண்ணும் (3)

தூபதீப நிவே தனம்
சுவாமிநான் செய்கிறேன்
தீபாம்பிகை தனய னென்னை
சேரும்வகையாய்ப் பண்ணும் (4)

**ஆ. வசனம்:**

இந்தப்படிக்கு இராசகன்னிகை பக்தியுடனே, தஞ்சேசு வரனைப் பூசை செய்து தோத்திரம் பண்ணுகிற மார்க்கம்.

**இராகம்: காம்போதி — சாபு தாளம்**

**தருவு**

31. நீலகண்டா, திரிலோசனா — தஞ்சையீசுவரா!
துஷ்ட நிக்ரகா, சிஷ்ட பாலகா — தஞ்சையீசுவரா!
சூலதரா, கங்காளா — தஞ்சையீசுவரா!
மதிசூடும் வேணியனான — தஞ்சையீசுவரா! (1)

அங்கஜ கர்வஹறா — தஞ்சையீசுவரா!
எங்களானந்த வல்லிநாயக — தஞ்சையீசுவரா!
இங்கொருவர் துணை காணேன் — தஞ்சையீசுவரா!
சகசேந்திரனை நான்சேரப் பண்ணும்
தஞ்சையீசுவரா! (2)

சூ. **வசனம்:**

இந்தப்படிக்கு இராச கன்னிகை சகசிராச தேவேந்திரனை, தனக்குப் பிராண நாதனாகப் பண்ணவேணுமென்று பரமேசுவரனைத் துதி பண்ணும்போது பக்த பராதீனனான பரமேசுவரன் கன்னிகை பக்திக்கு மெச்சி லிங்கத்திலேயிருந்து பிரத்யட்சமாகிறார். பிரத்யட்சமான பரமேசுவரனைப் பார்த்து இராசகன்னிகை தோத்திரம் பண்ணுகிற மார்க்கம்.

**தருவு**

32. சரணம் ஸ்ரீ கௌரீசா
சரணம் சர்வ லோகேசா
சரணம் போஸல தேவேசா
சரணம் தஞ் சேசா (1)

அரவ பூஷணா வேத
ஆனந்த வல்லி நாதா
பரவைக் கௌிய தூதா
பங்கயப் பொற் பாதா (2)

வருமான் கையேந்திய கையா
மருவுங் கண்டத்தில் மையா
திருநீ றணிந்த மெய்யா
சித்த மிரங்கு மையா. (3)

சூ. **வசனம்:**

இந்தப்படிக்குத் தோத்திரம் பண்ணின இராச கன்னிகையைப் பார்த்துத் தயவுடன் பரமேசுவரன் சொல்கிற மார்க்கம்.

**பரமேசுவரன் வசனம்:**

வருவாய் பெண்ணே இராச கன்னிகையே உன்னுடைய பக்திக்கும் நீ பண்ணுகிற தோத்திரங்களுக்கும் மனம் மகிழ்ந்து பிரத்தியட்சமானேன். நீ வேண்டின வரங்கள் கேட்டுக் கொடுக்கிறோம் பெண்ணே.

சூ. **வசனம்**

இந்தப்படிக்குச சொன்ன பரமேசுவரனைப் பார்த்து இராசகன்னிகை சொல்கிற மார்க்கம்.

**இராகம்: மத்திமாவதி — அட தாளம்**

33. ஆசை கொண்டு மெலிந்தேன்
அனங்க னாலேயும் மெலிந்தேன்
வாச மலர்கொண் டும்மை
வந்து பணிந்தேன் (1)

ஈசனே யினி யென்றன்
இதயம் சந்தோஷ மாக
போசல குல சாகபூ
பாலனைச் சேரப் பண்ணும் (ஆசை) (2)

சகல கலா நிபுணன்
சகலர்க்கு முபகாரன்
விகச கமல நயனன்
விட்டுணு சுவ ரூபன் (3)

மகர கேதனன் சோழ
மண்டல புரந் தரன்
வெகுசுந் தரமாய்ப் பவனி
வீதியில் வரக் கண்டு (ஆசை) (4)

சரணா கதத் திராணன்
சம ரகத்தில் விசயன்
கருணா சுதா சமுத்திரன்
கன காத்திரி தைரியன் (5)

சரசெ மித்திர வமிசன்
சகல சாம்ராச்சிய பாலன்
பரமேசா வுன்னுடைய
பக்த னவனைக் கண்டு (ஆசை) (6)

சூ. **வசனம்;**

இந்தப்படிக்குச் சகசி மகாராச தேவேந்திரனைத் தனக்குப் பிராணநாதனாகப் பண்ண வேணுமென்று வேண்டிக்கொண்ட கன்னிகையைப் பார்த்துப் பரமேசுவரன் சந்தோஷத்துடனே சொல்கிற மார்க்கம்

இராகம்: **கன்னட—சாபு**

**தருவு**

34. சொன்ன வசனங் கேட்டு
மின்னரசி நமக்கு மெத்த
இந்நேரம் சந்தோஷ மாச்சு
எல்லா மப்படிச் செய்கிறோம் (1)

என்ன கேட்பாயோ வென்று
இதயத்தி லெண்ணி யிருந்தேன்
பின்னே வேறொன்றைக் கேளாமல்
பெருமையுள்ள வரமருளு மென்றாய் (2)

நம்மைப் பூசை செய்தமையால்
 நல்ல புத்தியும் வந்து
சன்ம சாபல்ய மாக்கினேன் சித்தம்
 என் பக்தன்மேல் எண்ணு (3)

அப்படியே சகசி ராசன்
 அணிமையில்நீ இப்போ செல்வாய்
செப்புமுலை மீதில் சேர
 சேர்ப்பிக்கிறோம் காண் பெண்ணே. (4)

**சூ. வசனம்:**

இந்தப்படிக்குப் பரமேசுவரன் கன்னிகைக்கு வேண்டின வரம் கொடுத்து, சித்த புருடனைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்.

**பரமேசுவர வசனம்:**

கேளாய், சித்த புருடனே, நாம் எப்போதும் போல சகசி மகாராசாவினுடைய இதய பத்மத்திலே வாசமாக இருக்கப் போகிறோம். நாம் அங்கேயிருந்து இந்தக் கன்னிகைக்கு வேண்டிய வரம் நிறைவேறப் பண்ணுகிறோம். நம்முடைய யனிதனாக இருந்து இந்தக் கன்னிகையைக் கூட்டிக்கொண்டு அங்கே வருவாயாக.

**சூ. வசனம்**

இந்தப்படிக்குப் பரமேசுவரன் இராசகன்னிகைக்கு வரம் கொடுத்து, கமலமித்திர வமிச சுதாசாகர பூர்ண சந்திரனான சகசி மகாராச தேவேந்திரனுடைய இதய கமலத்தில் வாசம் பண்ண எழுந்திருந்தார்.

அப்புறம் கதா சம்விதானம் எப்படியென்றால் இராசகன்னிகை, பரமேசுவரனைப் பூசை பண்ணுவதற்குள் பிரத்தியட்சமானதைப்பார்த்து மன்மதன் தான் நினைத்த காரியம் சயமில்லையென்று கலங்கி வெட்கப்பட்டு, நழுவுகிற மன்மதனைப் பார்த்து, இராசகன்னிகை சொல்கிற மார்க்கம்.

**இராகம்: கௌளிபந்து — ஆதிதாளம்**

**தருவு**

35. என்ன செய்வாய் அடமன்மதா
என்ன செய்வாய் மன்மதா
எனது பிராணேசன் சகசேந்திரனைச்
சேர வரபூசை செய்கிறேன் (1)

வகையாய் நானினி யுன்னை
மடி பிடிப்பேனே
வாளி யைந்தையுந் தொடுத்து
மலர் முடிப்பேனே (2)

பங்காளிக் குயில் நாணைப்
பதம் பிடிப்பேனே
பருகவுன் வில்கரும்பைப்
பறித் தொடிப்பேனே (3)

தண்ணி லூரும் மீனுக்குமுன்
தான் பயந்தேனே
கணத் தினில் நீபிடித்த
சமத்துண்டு தானே (4)

வெண் ணிலாவி லிருந்து
விளையாடி னேனே
விளங்கும் தென்றல் திரையை
விசிறச் சொல்வேனே (5)

கர்த்தன் சகசேந் திரனுக்குளன்
காதல் சொல்வேனே
கமலை மாதருள் கொண்டு
கலவி வெல்வேனே (6)

சித்தம் மகிழ்ந் தவனைச்
சேர்ந்து கொள்வேனே
சயத்தம்பம் நாட்டி யுன்னைச்
சிக்கிக் கொள்வேனே (7)

இராகம்: தன்யாசி—ஆதி தாளம்

தருவு

36. காமாநீ யெய்தா யென்னை—நாளைக்
காட்டிக் கொடுப்பேனடா வுன்னை
நாமதம் நினையேன் பின்னை—சொன்னேன்
சகசி ராசன் வருமுன்னே (1)

அன்னத்திலிருந்து ஈசர்மேல் பூ வெறிந்து—முன்பு
அனங்க னாயினை வில்முறிந்து
சினத்த பேர்யேல் கணைசொரிந்து—சக
தீசன் வருவ தறிந்து (2)

முன் குபேரனுடன் வாது—செய்து
முறிந்தததது மறந்த தேது
என்குபேர னிந்தச் சூது-கண்டா
லெளிதாய் விடானடா யிப்போது (3)

ஆசை தீர விளையாட—கம
லாலை யம்மை யருள்சூடி
நேசன் சகசேந் திரனைக்கூட—இனி
நிமிஷமடா பயலே போடா (4)

### இராகம்; தோடி—ஆதி தாளம்

31. கண்டால் விடானடா
காமா ஓடிப்போடா
மண்டலேந்திரன் சகசேந்திரன்
மன்னன் வரும்வேளை (1)

மெய்யாய்ச் சொன்னே னடா
வில்லை யொடியடா
கையில் சரத்தைக் கூடை
கட்டிச் சுருட்டடா (2)

வையுங் குயி லடா
வாயி லறையடா
ஐயையோ மதப்பயல்நீ—என்னையே
யோசனை என்ன செய்கிறாய் (3)

சிந்தை கலங்கடா
தேர்விட் டிறங்கடா
வந்த தீவிரம் போலவே
வாங்கி நடவடா (4)

நிந்தை வரு மடா
நீகீர்த்தி மானடா
எந்தன் மீதிலுன்றன் ராஸஜ—விந்தைசெய
அந்தநாள் அல்லடா (5)

சமரச தீரனடா
சகசேந் திரனடா
கமலை மாதைப் பணியும்
கருத்துள் ளவனடா (6)

அமரநீ யென்னிடம்
ஆசை நினைத்திட தமதாகவே
அமரர் கோனென — அமரமேளமும்
குமுற வருகிறாய் (7)

ராகம்: தோடி — ஆதி தாளம்

தருவு

38. உன்னாலே யாவதினி யேதடா — அட
உருவிலுன்றன் மார்பாணி நானடா!
பன்னூறு அரி சாஹேந்திரன்
பாதத்தை அண்டிக் கொண்டேனடா (1)

கண்டாய் பிரிந்தா லப்போ மிஞ்சடா — இப்போ
காலைப் பிடித்தென்னைக் கெஞ்சடா
தாண்டிப் பேசி னாலினி
தாடையிலே போடு வேண்டா (2)

திருடா முன்போலவே என்னைப்பார்க்கிறாய்-கையில்
சிலையை வளைத்தேன் அம்பைக் காக்கிறாய்
மரியாதை யல்ல யிந்த
மட்டிலேநீ தப்பிப் போடா (3)

நிமிஷம் சகியேன் இனிப்பாரடா — இப்போ
நீ நானென்று சொல்ல நீயாரடா
கமலை நாயகியைப் போற்றும்
கர்ணன் சகசேந்திரனைச் சேர்ந்தேன் (4)

கு. வசனம்:

இந்தப்படிக்கு இராச கன்னிகை சொன்ன வார்த்தையைக் கேட்டு மன்மதன் மறுவார்த்தை சொல்ல வெட்கப்பட்டு தன்னிலே தான் புலம்பிக் கொண்டு நடக்கிற மார்க்கம்.

இராகம்: மத்திமாவதி ஆதிதாளம்

**தருவு**

39. என்ன மன்மதன் இனிநானே — இந்த
ஏந்திழைக் கிளைத்துப் போனேனே
மன்னன் சகசிராசன் தானோ —பெண்ணினங்கள்
மயங்கச் செய்யுமவன் சொன்னேனே (1)

மகரக்கொடி, அவனதாச்சே — அல்லால்
வதன மதிக்கென் மதியாச்சே
திகழ்செவி தன்கரும்பு மாச்சே — எந்தன்
செஞ்சிலையைக் கண்டபேர்
சிங்கிக்கொள்வது மாச்சே (2)

மலர்மார்பி லணிவதோ முல்லை — இந்த
வாளிது வில்லும் பயனில்லை
கலகம் செய்வதில் பயனில்லை — சேதுகாசிமட்டும்
திரிந்து புகட்டினான் வெகுதொல்லை (3)

கமலை நாயகி யருள்நெறியும் — பேர்
கர்ணன் சகசேந்திரனைக் கூடத்திரியும்
சமயம் பார்த்தொரு நெறியும் — திக்கெண்குறியும்
காட்டித் தப்பிதம் வந்தது (4)

**சித்த புருடன் வசனம்**

கேளாய் இராச கன்னிகையே, பரமேசுவரன் சொற்படிக்கு பூமண்டலாகண்டனான சகசி பூபாலனுடைய சமுகத்துக்கும் போக வேணுமே, அவருக்கு உன்னைக் கல்யாணம் பண்ணிக் கொடுக்க வேண்டுமே.

இதற்கு உன்னுடைய தாயார். தந்தையார் மற்றுமுள்ள பந்துக்களைச் சகியோடு சொல்லி அழைத்துவர அனுப்பு பெண்ணே.

**சூ. வசனம்:**

இந்தப்படிக்குச் சொன்ன சித்த புருடன் வாகங்கியம் கேட்டு இராச கன்னிகை, சகியைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்.

**இராசகன்னிகை வசனம்:**

பெண்ணே சகியே, இந்த விருத்தாந்தமெல்லாம் நம்முடைய மாதா பிதாக்களோடு சொல்லி அவர்களையும் சகலமான பந்துக்களையும் கல்யாணத்திற்குச் சீக்கிரமாகக் கூட்டிக் கொண்டு வா பெண்ணே

**சூ. வசனம்:**

இந்தப்படிக்குச் சகி சொன்ன வார்த்தையைக் கேட்டு காம்போச ராசாவும் காந்திமதியும் சந்தோஷத்தை அடைந்து, தம்முடைய கன்னிகையான சுசீலையின் கல்யாணத்திற்கு வருகிற மார்க்கம்.

இராகம்: **சௌராஷ்டிரம் — சாபுதாளம்**

**தருவு**

40. காந்திமதி யிலங்கு காம்போச ராசேந்திரன்
சேர்ந்த சனங்களுடன் சிங்கார மாகவே
சாந்தணி முலையுள்ள சரச சுசீலை
ஏந்திழை சொற்படிக் கெல்லாரும் வந்தனரே

**சூ. வசனம்:**

இந்தப்படிக்குக் காம்போசராசன் காந்திமதியுடன் வந்து கன்னிகையைக் கூட்டிக் கொண்டு, சித்த புருடன் முதலான பந்துக்களுடனே கூட சகசிமகாராச தேவேந்திரனுடைய சமூகத்திற்கு வருகிற மார்க்கம்.

இராகம்: **பூபாலம் — ஆதிதாளம்**

**தருவு**

41. அகமகிழ் காம்போச ராசன்
அனைவரையும் கூட்டிக் கொண்டு
சகசிராச தேவேந்திர னுடைய
சமுகத்தில் தான் வநதானே

சூ. **வசனம்:**

இந்தப்படிக்குக் காம்போசராசன் வந்து தினநாத வம்ச சிகாமணியான சகசி மகாராச தேவேந்திரனுக்குச் சலாம்பண்ணி எச்சரிக்கிற மார்க்கம்.

இராகம்: **தேவகாந்தாரி — சம்பை தாளம்**

**கைவார தருவு**

42. பூலோக சநதிர சாகேந்திர பராகு
பாதாவதான எச்சரிக பராகு
பானுகுல திலக சம்பன்ன பராகு
ஆதாரமான வளர் முகிலே பராகு
அணையும் பேர்க் குபகாரனையா பராகு (1)

பூலோக சந்திர சகசேந்திர பராகு
போசல குலத்தில் வரும்புண்ய பராகு
மாலான ஏகேந்திரன் பாலா பராகு
மண்டலாதீ சுவரா மன்னா பராகு (2)

பாவலர்கள் புகழவரும் நாதா பராகு
பாரதி லிலங்குந் தனபதியே பராகு
தேவிகமலா லயம்மன் அருளும் பராகு
தீபாம்பிகை யளித்த செல்வா பராகு (3)

சூ. **வசனம்**

இந்தப்படிக்கு, காம்போசராசன் எச்சரிக்கை பண்ணின ததனந்தரத்திலே சித்த புருடன் சகசி மன்னனைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்

**இராகம்: காபி — ஆதி தாளம்**

**தருவு**

43. சிவபூசை செய்தா ளிவள்
சகசி மகாராச சந்திரா — உன்னை
சேரவே நினைத்து
சகதி மகராச சந்திரா (1)

தவ பலம் கிடைத்தது
சகதி மகாராச சந்திரா — இனி
சாமிநீர் மாலையிடும்
சகதி மகாராச சந்திரா (2)

சந்திர வமிசப் பெண்ணிவள்
சகசி மகாராச சந்திரா — மனதில்
சந்தோசமா யெண்ணும்
சகசி மகாரரச சந்திரா (3)

சுந்திர முள்ளவள்
சகதி மகாராச சந்திரா — பேரும்
சுசீலை கன்னிகாண்
சகசி மகாராச சந்திரா (4)

கன்னி கையை யிப்போது
சகசி மகாராச சந்திரா — மகிழ்ந்து
கல்யாணம் செய்யும்
சகதி மகாராச சந்திரா (5)

என்ன பாக்கியம் செய்தோம்
சகசி மகாராச சந்திரா — நாங்கள்
எல்லோரும் காணவே
சகசி மகாராச சந்திரா (6)

சூ, **வசனம்**

இந்தப்படிக்குச் சகசி மகாராச தேவேந்திரனைப் பார்த்து, சித்த புருடன், பரமேசுவரனுடைய 'அப்பனுக்ஞை' என்கிற வார்த்தையைக் கேட்டுச் சகசி மகாராச தேவந்திரன் அங்கீகரித்த பாவம் அறிந்து காம்போச ராசனும் காந்திமதியும், தங்களுடைய கன்னிகை சுசீலையைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்.

இராகம்: **தேவகாந்தாரி — அட தாளம்**

**தருவு**

44. எத்தனை பாக்கியம்
செய்தோமோ
சித்தசன் சகசேந்திரன்
செல்வியைக் கல்யாணம் பண்ண (1)

வள்ளியை முருகனுக்கு
மருவச் செய்தவன்போல
தெள்ளு மலை மகளை
அரனுக்குச் செய்தவன் போல (2)

வெள்ளைப் பாடற்கடல் மின்னை
விட்ணுவுக் களித்தவன் போல
மெள்ள வுமக்குக் கன்னிகையை
மெய்யாகவே நாம் தாரோம் (3)

சூ. **வசனம்:**

காம்போச ராசன் சொன்ன ததனந்தரத்திலே சுசீலை கன்னிகை சகசி மகாராசேந்திரனைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்.

## இராகம்: தேவகாந்தரி — சாபு தாளம்

### தருவு

45. என்னை யாளும் தஞ்சை
ஏக ராச னருளிய
மன்னவன் சகசி ராசரே
மைய லாகி வந்தேன்
சின்ன மூலை மீதுன்
கைக் கனக மளித்து
என் னாசை தீரவே
இதழும் தந்து — என்னை (1)

சாதக பட்சி போல
சாமி யுன்னை நாடி
ஆதி முதல் சிவனை
அடி பணிந்து
சோதி மயமாகி வந்து
சொன்ன சிவன் சொற்படி
நாதா யிங்கே வந்தேன்
அன்புடனே சோபனம் (2)

### தருவு

46. சோபனம் சோபனமே
பூபதி சகசிராச புரந்தரனுக்கு
நல்ல சுகுணனுக்கு நரபதிக்கு
எல்லார்க்கும் உபகார இதயனுக்கு
— சோபனமே

வல்லமையுள்ள புருஷனுக்கு
மன்னவர் சிகாமணிக்கு
சொல்லிலொரு பொய் சொல்லாத சுந்தரனுக்கு
சுசீலை நாதனுக்கு சுகிருதனுக்கு — சோபனமே

விசயன்போல வந்த வீரனுக்கு
நிசமாய்க் கமலைமாதை நித்யம்
பணிவோனுக்கு
சசிமதி முகனுக்கு, சகசேந்திரனுக்கு
சோபனமே, சோபனமே.

## மங்களம்

47. மன்னன் சகசி ராசனுக்கு மங்களம் — சோழ
மண்டலா தீசுவரனுக்கு மங்களம் (1)

தினகர தேஜசனுக்கு தீபாம்பிகை சுதனுக்கு
வனஜபொற் பாதனுக்கு மங்களம் (2)

வரு மெங்கள் மோகனுக்கு
உரை யேகேந்திர பாலனுக்கு
சுசீலை மணவாளனுக்கு மங்களம் (3)

போசல குலனுக்கு, புகழ்சகசி மகாராசனுக்கு
பூலோக தேவேந்திரனுக்கு மங்களம் (4)

சுபம்

---

# சந்திரிகா ஹாஸை விலாசம்

## தமிழ் இசை நாட்டிய நாடகம்

தஞ்சை

மராட்டிய மன்னர்

சகசீ காலத்துப்

படைப்பு

கி.பி. 1684—1712

# சந்திரிகா ஹாஸை விலாசம்

## தமிழ் இசை நாட்டிய நாடகம்

**நாடகத்தில் வரும் கதை மாந்தர்கள்:**

1. சூத்திரதாரன் — நாடகத்தை அறிமுகம் செய்து விளக்கம் கொடுப்பவன் நாடகம் நடாத்துவோன்
2. கட்டியக்காரன் — நாடகத்தைத் துவக்கி வைப்பவன்
3. சகசி மன்னன் — தஞ்சைவள நாட்டின் மன்னவன் சந்திரிகா ஹாஸையால் காதல் கொள்ளப் பெற்றவன்
4. சந்திரிகா ஹாஸை — மாளவநாட்டு மன்னன் மகள் சகசி மன்னனை மணந்தவள்
5. மஞ்சுபாஷினி — மாளவநாட்டு மன்னனின் மனைவி சந்திரிகாஹாஸையின் தாய்
6. மாளவதேசாதிபதி — சந்திரிகாஹாஸையின் தந்தை
7. சுகவாணி — சந்திரிகா ஹாஸையின் பாங்கி
8. சிவயோகி சித்தன் — சந்திரிகா ஹாஸைக்கு, சகசி மன்னனைப் பற்றிக் கூறிக் காதல் கொள்ளச் செய்தவன்

**கதை நிகழும் இடம்:** கமலாபுரம், வன்மீகநாத சுவாமி கோயில்

**காலம்:** சகசி மன்னனின் ஆட்சிக் காலம்

**நாடகம் நிகழ்ந்த இடம்:** தஞ்சை சகசி மன்னனின் திருவாரூர் அரண்மனை

# சந்திரிகா ஹாஸை விலாசம்

## தமிழ் இசை நாட்டிய நாடகம்

இராகம்—நாட்டை | தாளம்—சம்பை

**தோடய மங்களம்**

ஜய பார்வதீ ரமண
ஜய ஜானகீ ரமண
ஜய அந்தக தமன
ஜய மது ஸூதன (ஜய ஜய)

ஜய திரிபுர ஹரண
ஜய வேதோத்தரண
ஜய அகிலநுத சரண
ஜய ஜனா பரண (ஜய ஜய) 1

ஜய ரவிசசி நேத்ர
ஜய அகிலநுத பாத்ர
ஜய பாவன சரித்ர
ஜய ஜகன் மித்ர (ஜய ஜய) 2

ஜய நந்தி வரவாஹ
ஜய அண்டஜ வாஹ
ஜய நித்யோத் ஸாஹ
ஜய சமித தாஹ (ஜய ஜய) 3

**மங்களம்**

கமனீய தியாகேசுனிகி மங்களம் — நித்யமு
மாபாலி தேவுனிகி மங்களம் (1)

கனக வசந்துனிகி கமனீய சரித்ருனிகி
மனஸிஜ ஹருனிகி மங்களம் (2)

சோமாஸ்கந்த மூர்த்திகி சோபன பிரதுனிகி
மாமீத தயஸேயு சுவாமிகி மங்களம் (3)

போசலகுல சாஹேந்திர பாஸுரகுல தேவுனிகி
மாசிவ தியாகேசுனிகி மங்களம். (4)

**சூத்திரதாரன் வசனம்:**

இந்தப்படிக்குச் சகல தேவதா பிரார்த்தனை பண்ணின ததனந்தரத்திலே காப்புக் கேட்பிக்கின்ற மார்க்கம்:

### காப்பு — விருத்தம்

செந்திரு மார்ப னான ஸ்ரீசகசி ராச னுக்கு
சந்திரிகா ஹாஸை கல்யா ணந்தனைத் தமிழால் பாட
அந்தமாந் திருவா ரூரில் அருள் கம லால யம்மன்
மைந்தனாம் விட்ட வாசல் மதகரி காப்புத் தானே.

**சூ. வசனம்**

இந்தப்படிக்கு காப்புக் கேட்பித்த ததனந் தரத்திலே சந்திரிகா ஹாஸை விலாசம் என்கிற நாடகத்திலே சகல விக்கினங்களும் நிவாரணம் பண்ண விக்னேசுவரனைப் பிரார்த்தனை பண்ண, விக்னேசுவரன் வருகிற மார்க்கம்.

### விநாயகர் தருவு

வந்தே சிவஸுதம்
வரத மமரநுதம்
ஸுந்தர குணயுதம்
ஸுப்ரஸன்ன வதனம் (1)

பாசாங்குச தரம்
பணிவர கேயூரம்
மூஷிக வாஹன
மோதக கரம் (2)

பாலேந்து சேகரம்
பாலஸிந்தூர தரம்
லாலித பக்தவரம்
லீலயா விக்ன ஹரம் (3)

சூ. வசனம்:

இந்தப்படிக்கு விக்னேசுவரன் வந்து சகல விக்கினங்களும் நிவாரணம் பண்ணின ததனந்தரத்திலே இராச கன்னிகை வன்மீகநாத சுவாமியைச் சேவிக்க வருகிறாள் என்று சகல சனங்களுக்கும் எச்சரிக்க, கட்டியக்காரன் வருகிற மார்க்கம்.

## தருவு

1 வரிசை யாக மெய்யில் துப்பட்டி
வலது பக்கம் போட்டுக் கொண்டு
கறுமை மீசை முறுக்கிக் கொண்டு
கட்டியக் காரன் வந்தானே

2 அடரு கந்தம் பூசிக் கொண்டு
இலங்க நாமம் சாத்திக் கொண்டு
கடுமை யாகப் பேசிக் கொண்டு
கட்டியக் காரன் வந்தானே

சூ. வசனம்:

இந்தப்படிக்குக் கட்டியக்காரன் வந்து சகல சனங்களுக்கும் எச்சரித்த ததனந்தரத்திலே இராசகன்னிகை, தனக்கு நல்ல புருடன் வேணுமென்று மனசிலே எண்ணிச் சகியோடுகூட இராச கன்னிகை வன்மீகநாத சுவாமி தரிசனார்த்தமாக வருகிற மார்க்கம்.

## உள் தருவு

3 இராச கன்னிகை வந்தாள் — (இராச)

இரம்மிய மாகவே நல்ல
இராச ஹம்ச நடையுள்ள

விம்மு முலை யுள்ள — வரும்
மின் வெல்லு மிடையளான — (இராச)

அந்தை கலகலென அணி
ஆடை யிலங்கவே

சந்தன மணிந்த பூரண
சந்திர முகி யான — (இராச) (1)

## வெளி தருவு

4 இராச கன்னிகையும் வந்தாள்
சகியுடனே
இரம்மிய மான இரதிபோல— (இராச)

செங்காவிச் சேலை யுடுத்து
செண்டு கையினில் பிடித்து
சிங்கார மலர் முடித்து
சிந்து பதங்கள் பிடித்து (1)

சின்ன முலையு மிலங்கச்
செவ்விதழ் மிகத் துலங்க
வண்ண வளைகள் குலுங்க
மன்மதன் கண்டு மயங்க (2)

கொத்து முத்து வடமாட
குயில்மொழி மயலாடக் கண்ணாட
தத்தை யெல்லாருங் கொண்டாடச்
சகியுடனே தானுங் கூட (3)

சூ. **வசனம்:**

இந்தப்படிக்கு இராச கன்னிகை, வந்து சகதீசனான வன்மீகநாத சுவாமியைக் கண்டு நமஸ்காரம் பண்ணித் தோத்திரம் பண்ணுகிற மார்க்கம்.

**தருவு**

5 வாசவ ஸந்நுதா
சாமகானப் பிரியா
வன்மீகேசுவரா — எந்தன்

மனதுக் கேற்ற பிரியனை
மகிழ்ந் தருளு மையா
வன்மீகேசுவரா — எந்தன்

வாசமாய்ப் பக்தரின்
மனதினில் உறைகின்ற
வன்மீகேசுவரா — கையில்

மான் மழு சூல
கபால மேந்திய
வன்மீகேசுவரா —

எந்தனை யாட் கொண்டு
இரட்சித்திடவல்ல
வன்மீகேசுவரா — புவியில்

இந்திர சமான புருஷனை
சேரப் பண்ணும்
வன்மீகேசுவரா —

அந்தமு மாதியும் நீர்
அல்லால் வேறில்லை
வன்மீகேசுவரா — இனி

அடியேன் சொல்வதே ஷையா
உந்தன் சித்தம்
வன்மீகேசுவரா!

சூ. வசனம்:

இந்தபபடிக்கு இராசகன்னிகை தோத்திரம் பண்ணி, பக்தியுடனே தனக்கு நல்ல புருஷனைக் கட்டளையிடச் சொல்லி வன்மீகேசுவரனைப் பூசை பண்ணுகிற மார்க்கம்.

### தருவு

அரவிந்த மலராலே யிப்போ துமக்கு
அருச்சனை செய்கிறேன் — சுவாமி
அரவிந்த முகனான நாத னென்னை
அணையப் பண்ணும் — சுவாமி (1)

அதிக மது வதனா லிப்போ
தபிடேகம் செய்கிறேன் — சுவாமி
மதுர வாசகனான நாத னென்னை
மருவவே செய்யுமென் — சுவாமி (2)

இந்தச் சந்தனம் தினந்தா னிப்போ
திலங்கவே சாத்துகிறேன் — சுவாமி
சந்தனத் தெண்புய நாத னென்னைச்
சேரச் செய்யுமென் — சுவாமி (3)

சாம்பிராணி தூபங்கள் இப்போ துமக்குத்
தான்மிகக் கொடுக்கிறேன் — சுவாமி
சாம்ராச்சிய னாகிய நாத னென்னைச்
சரசம் செய்யச் சேரப்பண்ணும்—சுவாமி (4)

இலங்கு தீபாதிகள் இப்போ துமக்கு
எடுக்கிறேன் வரிசையாக — சுவாமி
குலதீப னான நாத னென்னைக்
கூடப் பண்ணுமென் — சுவாமி (5)

நன்னெறி யுள்ள யன்ன மிப்போ துமக்கு
நிவேதனம் செய்கிறேன் — சுவாமி
அன்னதாதா வான நாத னென்னை
அணையப் பண்ணுமையா — சுவாமி (6)

சாமிநான் சொன்ன திப்போ துமக்கு
தப்பித மில்லாமல் செய்தேன் — சுவாமி
நேமமாய் நானிந்தப் படிக்கே நின்று
நிறைவேறப் பண்ணும் — சுவாமி (7)

சூ. வசனம்:

இந்தப்படிக்கு இராசகன்னிகை தனக்கேற்ற புருடனைக் கட்டளையிடச் சொல்லி வன்மீகேசுவரனை அருச்சனைசெய்து கொண்டிருக்கிற சமயத்திலே அப்புறம் கதா சம்விதானம் எப்படியென்றால், ஒரு சித்த புருடன் பூப்பிரதட்சிணம் பண்ணிச் சகல தேசங்களும் திரிந்து சகலமான தலங்களும் சேவிததுக் கமலாபுரத்தில் வன்மீகநாத சுவாமியைத் தரிசனம் பண்ண வருகிற மார்க்கம்.

தருவு

7 விரித்த சடையும் விளங்க
விபூதி யணிந்து கொண்டு
சரசமாய்ச் சூலம் கையில் இலங்க — நல்ல
தபசியாகவே வருகிறான்!
விந்தையாகவே நீரும்
வேடிக்கையே பாரும்

புலித் தோலையு முடுத்துப்
புனித கௌடம் தொடுத்து
இலங்கு ருத்திராட்ச மாலை பூண்டு — கையில்
இனிய சபதாவடம் கொண்டு

சூ வசனம்;

இந்தப்படிக்கு சித்தபுருடன் வந்து சுவாமிக்கு நமஸ்காரம் பண்ணி விசித்திரமாக வன்மீகநாத சுவாமியைப் பூசைபண்ணித் தியானம் பண்ணிக்கொண்டு இருக்கிற இராச கன்னிகையைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்.

**சித்தபுருடன் வசனம்:**

வா பெண்ணே, கன்னிகையே! நீ தேவ கன்னிகையோ, யட்சகன்னிகையோ, நாககன்னிகையோ, இராசகன்னிகையோ, வன்மீகநாத சுவாமியைப் பக்தியுடனே பூசை செய்கிறாய்! நீ எந்தக் காரியம் மனதிலே நினைத்து இப்படி விசித்திரமாய் இருக்கிற பூசை பண்ணுகிறாய்? நீ யாருடைய கன்னிகை? உன்னைப் பார்த்தால் மிகவும் சந்தோஷமாயிருக்கிறது. உன்னுடைய பூர்வோத்திரம் சொல்லு பெண்ணே!

சூ. வசனம்:

இந்தப்படிக்குச் சொன்ன சித்தபுருடன் வார்த்தையைக் கேட்டு இராசகன்னிகை சொல்கிற மார்க்கம்.

**இராசகன்னிகை வசனம்:**

கேளுமையா சுவாமி. நான் தேவகன்னிகையும் அல்லள், சித்த கன்னிகையும் அல்லள்; கந்தருவகன்னிகையும் அல்லள் யட்ச கன்னிகையும் அல்லள், நாக கன்னிகையும் அல்லள், நான் மாளவ தேசாதீசுவரனுடைய கன்னிகை. நம்முடைய பிதா வமிசம் சந்திர வமிசம். தாயார் பெயர் மஞ்சுபாஷினி, என்னுடைய பெயர் சந்திரிகாஹாஸை. நான் ஸ்நாதயவ்வனி

யாக என்னுடைய மனதுக்கேற்ற புருடனை வேண்டி, பக்தியுடனே வன்மீக சுவாமியைப் பூசை பண்ணுகிறேன். இது என்னுடைய விருத்தாந்தம். உம்மைப் பார்த்தால் பரமேசுவரனைப்போல் இருக்கிறது. நீர் எங்கேயிருந்து வந்தீர்? தெரியச் சொல்லுமையா சுவாமி !

சூ. **வசனம்**

இந்தப்படிக்குச் சொன்ன இராச கன்னிகைவார்த்தையைக் கேட்டுச் சித்த புருடன் சொல்லுகிற மார்க்கம

**சித். வசனம்:**

கேளாய், சந்திரிகாஹாஸை, என்னுடைய பெயர் சிவயோகி சித்தன். நான் பூப்பிரதட்சிணம் பண்ணி, சகல தேசங்களும் திரிந்து சகலமான தலங்களும் சேவித்து இந்த மகாலிங்கமான வன்மீகநாத சுவாமியைத் தரிசனம் பண்ண வந்தேன் பெண்ணே!

சூ. **வசனம்:**

இந்தப்படிக்குச் சொன்ன சித்த புருடன் வசனம் கேட்டு இராசகன்னிகை சொல்கிற மார்க்கம்,

**இரசசகன்னிகை வசனம்**

கேளுமையா சிவயோகி சித்தரே, நான் புருடோத்தமனாய் இருக்கிற நாயகன் வேணுமென்று பரமேசுவரனைப் பூசை பண்ணிக் கொண்டிருந்தேன். பரமேசுவர ரூபமாய்த் தேவரீர் எழுந்தருளினீரே. தேவரீர் சகலதேசங்களும் பார்த்திருக்கிறீரே. அந்தந்த இராசாக்களுடைய சௌந்தரிய குணாதிசயங்கள், தெரியச் சொல்லுமையா சுவாமி!

**சித். வசனம்**

ஆனால் சொல்கிறேன் கேள் பெண்ணே!

## தருவு

அங்கதேச ராசன் அன்னமே
வல்லவ னவன் காண்
சிங்கார மில்லை யவன்
சேதி இதுகாண்

வங்காள தேச ராசன்
வடிவில் பெரியவன் காண்
சங்கீத மறியான் அவன்
சரித்திரமு மிதுகாண்

கொங்க தேசத்தில் ராசன்
குலத்தில் பெரியவன்காண்
தங்க மில்லை யவனுக்குத்
தரித்திரம் தான் காண்

மச்ச தேசத்தில் ராசன்
மகிமையில் பெரியவன் காண்
துச்சன் பெரிய வரைமிகு
தூடணம் சொல்லுவான் காண்

குர்ச்சர தேச ராசன்
குணத்திலே நல்லவன் காண்
உச்சி வினோதங்கள்
ஒன்று மறியான் காண்

கேரள தேச ராசன்
கீர்த்தியால் பெரியவன் காண்
சுவாரஸ்ய மாகச் சொல்லும்
சாகித்திய மறியான் காண்

சௌவ்வீர தேச ராசன்
    தனத்தில் பெரியவன் காண்
கைவிட்டுக் கொடுக்க மாட்டான்
    கடினக் காரன் காண்

கொங்கண தேச ராசன்
    குருவசனம் பிசகான் காண்
இங்கித புருட ருடைய
    இதய மறியான் காண்

சிங்கள தேச ராசன்
    மரியாதை யுள்ளவன் காண்
சுங்கான் குடிப்பான் அவன்
    சுத்த மறியான் காண்

சாளுவ தேச ராசன்
    தரும சிந்தனை யுள்ளவன்
கோளுரைப்பான் வார்த்தை கேட்டு
    கொண்டாடு வான் காண்

கல்யாண தேச ராசன்
    காரியம் அறிந்து செய்வான்
இல்லாத கோப முள்ள
    இளிச்ச வாயன் காண்

மகததேச ராசன் அபி
    மானத்தில் பெரியவன் காண்
வகையறி யாமல் தினம்
    வாது செய்வான் காண்

அல்லாமல் சோழ இராசேந்திரன்
அதிசயம் சொல்லப் போகாது
வல்லியே யானா லிப்போது
வழுத்து கிறேன் கேளாய்

கூ வசனம்

இந்தப்படிக்குச் சொன்ன சித்த புருடனைப் பார்த்துக் கன்னிகை சொல்கிற மார்க்கம்.

தருவு

9 அதுளது சொலலு மையா
அதிசய மானவனே
மீதியில்லாம லெனது மனம்
மிக நாடுது கேளுமையா

இராச வசனம்

சித்த புருடரே இப்போது நீர் சொன்ன இராசாக்களெல் லாரும் ஒரு குணத்திலே அதிகமும் ஒரு குணத்திலே குறைவு மாக இருக்கிறார்கள். இவர்கள் நமக்குச் சம்மதமில்லை. சோழ இராசேந்திரன் அதிசயம் சொல்லப் போகாதென்று சொன்னீரே, அந்தச் செய்தி நமக்குத் தெரியச் சொல்லுமையா சுவாமி.

தருவு

10 கேளடி அடியே மின்னே
கேளடி பெண்ணே — இப்போது
சோழேந்திரன் சரித்தி ரத்தைச்
சொல்கிறேன் விவர மாக (1)

சத்தியத்தில் அரிச் சந்திரன்
தானத்தில் இரா தேயன்
நித்தியத்தில் மார்க்கண் டேயன்
நிதியில் குபேரன் காண் (2)

புத்தியில் பிருகஸ்பதி
புச பலத்தில் பீமன்
விந்தையில் ஆதி சேடன்
வில்லினில் விசயன் காண் (3)

சுந்த ரத்தில் மன்மதன்
சுரதத்தில் ஸ்ரீ கிருஷ்ணன்
சந்ததம் பொறு மையில்
தரும தனூசன் காண் (4)

விந்தையாய்க் குளிர்ந்த குணத்தில்
விளங்கிய பூர்ண சந்திரன்
புந்திமகிழ் சாகித்தி யத்தில்
பும்பாவ சரசுவதி காண் (5)

சரச கம்பீ ரத்தில்
தழைத்த சமுத்திர ராசன்
வரிசை யாய்த் தைரியத்தில்
மகா மேரு காண் (6)

சரணாகத ரட்சணத்தில்
தசரத ரகு ராமன்
திரமான விப வத்தில்
தேவேந்திர னவன் காண் (7)

சூ. வசனம்:

இந்தப்படிக்குச் சொன்ன சித்தபுருடன் வார்த்தையைக் கேட்டு, கன்னிகை சொல்கிற மார்க்கம்

**கன்னிகை வசனம்**

கேளும் ஐயா சித்த புருடரே, அவர் சரித்திரமெல்லாம் கேட்டுச் சந்தோஷமாயிற்று. அவருடைய சௌந்தரியாதிசயம் தெரியச் சொல்லும் ஐயா சுவாமி.

சி. வசனம்:

ஆனால் சொல்லுகிறேன் கேளடி பெண்ணே

தருவு

எத்தனை யென்று சொல்வேன்
இலங்கு சோழேந்திரன் ரூபம்
தந்தையே கேளா யவன்
சாட்சாத்நல மன்மதன்காண் பெண்ணே (1)

அவருடைய முகம் கண்டு
அம்புலி லச்சை யுடனே
கவலையேற் றதனோ டஞ்சி
களங்க மானான்காண் — பெண்ணே (2)

பங்கய மலன் விழியைப்
பார்த்துச் சரியாக வேண்டி
சங்கை யில்லாமல் சலத்தில்
தபசு செய்குது காண் — பெண்ணே (3)

பூவையே கேள் அவனுடைய
புச சி ரங்களைப் பார்த்து
ஏழு பருவதங்க ளெல்லாம்
எழாம லிருக்குதுகாண் — பெண்ணே (4)

துங்க னான இவனுடைய
சுந்தரம் தன்னைக் கண்டு
அங்கசன் லச்சையி னாலே
அனங்க னானான்காண் — பெண்ணே (5)

வசனம்:

கேளும் ஐயா சித்த புருடரே, அவர் சௌந்தரியாதிசயம் கேட்டுச் சந்தோஷமானது. அவர் மாதா பிதாவை, அவருடைய வமிசம் அவர்களுடைய பெயர், அவர்களுடைய தேச அலங்காரமெல்லாம் தெரியச் சொல்லுமையா சுவாமி!

## தருவு

கோகத் தனியேநீ கேளாய் (எடுப்பு)
ராகேந்து முகி!
மகாராசன் சரித்திர மெல்லாம் (கோ)

பங்கய மித்திர வமிசன்
பரமே சுவர பக்தன்
சங்கீத சாகித்தி யத்தில்
சரசுவதி சுவ ரூபன் (1)

சகசி ராச பௌத்திரன்
சரச சற்குண சீலன்
சகல சாம்ராச்சிய தீபன்
சச்சன ருக்கா தாரன் (2)

பூபதி யேகராச புத்திரன்
பூபன் தஞ்சை புரீசன்
தீபாம்பா கருப்ப சுதாப்தி
தீரன் பூரண சுதாகரன் (3)

தரியலர் பணி பாதன்
தருசோழ மண்ட லேந்திரன்
வரிசை மகரத் துவசன்
மானியன்பேர் சகசி ராசன் (4)

ஆனா லவன் தரிசனம்
யார்க்கும் கிடைப்ப தரிது
தேனே செய்சிவ பூசையில்
சித்தித்தால் சித்திக்கும் காண் (4)

சூ. வசனம்:

இந்தப்படிக்குச் சித்தபுருடன் சகசி மகா ராஜ தேவேந்திர னுடைய குண சௌந்தரிய வருண பாரம்பரியம் வருணித்து அவருடைய தரிசனம் சாதாரண சனங்களுக்குத் துர்லபம்

என்று சொன்ன வார்த்தை கேட்டு, கன்னிகை அவருடைய சௌந்தரியாதிசயம் நினைந்து சகியுடனே விரகம் அபிநயிக்கிற மார்க்கம்.

தருவு

(விரக பதம்)

13 ஆசை யாகினேன் நானே
அவர் மீதில் மானே
போசல குல சகசி
பூபன் சேதி யறிந்து (ஆசை)

முத்து முலை விம்முது
குளிர் மதியும் சுடுது
முத்து மாலையும் நீராய்
முனைந்து காணுது (1)

மெத்த மனம் நோகுது
விழியில் நீரா றாகுது
சித்தசன் கணையி னாலே
தேகமும் மெல்யுது (1)

மந்த மாருதம் வீச
வருகுயி லென்னை யேச
அழகான கிளிக ளேச
அதட்டி வசை பேச

சந்தனம் மெய்யினில் பூச
தான்வேண்டி மனம் கூச
இந்த வகையாலே ரோசம்
எனக்கு வருது நேசா (2)

அன்னமு மிறங் காது
அகமும் தெளி யாது
எண்ண கங்குலொரு யுகமா
யிருக்க விடி யாது (3)

சுவர்ண பூஷணம் இது
தொட மனம் பிடிக்காது
கர்ணன் சகசேந்திர னிப்போது
கலந்தா லல்லது தீராது (4)

சூ. வசனம்:

இந்தப்படிக்கு இராச கன்னிகை விரகாதி சயத்திலே சகியோடு சொல்கிற மார்க்கம்.

தருவு

(விரகபதம்)

14 விந்தை நீ பாரடி மின்னே
இப்போதும் என்னே
அந்த மாய னவயம்
அதிக வாசை கொள்ளுது — (விந்தை)

செவி யிரண்டு மவர்
சேதி கேட்க நினைக்குது
அவன் ரூபம் காணவிழிகள்
ஆசை யாகுது

கவலைசேர் கைக்க ளிரண்டும்
கட்டிக் கொள்வே னென்குது
சிவந்தவென் கனிவா யவன்
செவ் விதழை நாடுது (1)

முகமெந் நேரமும் அவனை
முத் தாட நினைக்குது
சிகர முலை யவன்கைகள்
தீண்ட நாடுது

நகையாகக் கபோல மவன்
கை ரேகை தேடுது
மகிழ்ந்து சரசம் செய்ய
மனது நாடுது (2)

அணிந்த சரிகை யாடை
அவன் விடுவிக்க நாடுது
துணிந்து நெஞ்சு என்குரல்
தொனிக்க நாடுது

பணியணி சகசேந்திர பூபால
னுடனே தான் கூட
குணத்துடனே மன்மதன கோவில்
கொண்டாடுதே — மனம் (3)

சூ. வசனம்

இந்தப்படிக்கு இராச கன்னிகை விரகம் அபிநயித்துக் கொண்டிருக்கிற சமயத்திலே அப்புறம் கதாசம்விதானம் எப்படியென்றால் இராசகன்னிகை சிருங்கார வனத்தில் சுவாமி சேவிக்கப்போய் அனேக நேரமாயிற்று என்று இராசகன்னியை அழைக்கப் பாங்கி வருகிற மார்க்கம்.

தருவு

15 சந்தனம் மிக வணிந்த
தனங்க ளிரண்டும் குலுங்க
சுந்தரக் கன்னிகையைத் தேடி
சுக வாணி வந்தாளே
சந்திரகாவிச் சேலை கட்டி
சகல பணி யணிந்து
சிந்தையும் மகிழ்ந்து நல்ல
சிருங்கார வனத்தில் வந்தாளே (2)

சூ. வசனம்

இந்தப்படிக்குச் சகவாணி வந்து இராசகன்னிகையைப் பார்த்துச் சொல்லுகிற மார்க்கம்.

சு. வசனம்:

கேளும் பெண்ணே, சந்திரிகா ஹாஸே, இன்றைக்கு ஒரு நாளும் இல்லாத விசாரம் இப்போது அடைய வந்த காரணம் என்ன, சிருங்கார வனத்தில் ஏதாகிலும் கண்டு பயந்தாயோ, அல்லாமல் வனக்கிரீடையினாலே மெலிந்தாயோ அல்லாமல் மனதுக்கேற்ற நாயகனை நினைத்து ஆசையானாயோ, இதில் எந்த விதத்தினாலே இருக்கிறாயோ சொல் மின்னே.

சு. வசனம்:

இந்தப்படிக்குச் சுகவாணி சொன்ன வசனம் கேட்டு, இராச கன்னிகை சொல்கிற மார்க்கம்.

இராசகன்னிகை வசனம்:

கேள் மின்னே, சுகவாணி, ஒரு சங்கையைக் கண்டும் பயந்த நானும் அல்லள். நான் இப்படி இருக்கிறதற்கு ஒரு காரணம் உண்டு. அந்தக் காரணம் சொல்கிறேன் கேள், மின்னே. சுகவாணி, மனதுக்கேற்ற நாயகன் வேணுமென்று, இந்த வன்மீகேசுவரனை அருச்சனை பண்ணிக்கொண்டிருக்கிற வேளையில், இந்தச் சித்த புருடன் ஐம்பத்தைந்து தேசாதி ராசாக்கள் சரித்திரம் சொல்லி அப்பால், சகல சாம்ராஜ்யாதி பதியான சகசி மகாராச தேவேந்திரனுடைய குணரூப விலாச ரேகைகள் சொல்லி, அவருடைய தரிசனம் மகத்தாயிருக்கிற சிவபூஜை செய்த பேருக்கு லபிக்குமே யல்லாமல் மற்ற பேருக்கு லபிக்காதென்று சொன்னார். அப்போது முதலாக அந்த நாயகனே என்னுடைய புருடனாக வேணுமென்று அவருடைய சவுந்தரிய அதிசயங்கள் நினைத்து, நானிப்படி விரகத்தை அடைந்திருக்கிறேன். இனி, நீ இந்தச் சித்தபுருடனுடன் யோசனை பண்ணிக்கொண்டு அந்த நாயகனையே எனக்குக் கூட வைப்பாய் பெண்ணே.

சூ. வசனம்

இந்தப்படிக்குச் சொன்ன இராச கன்னிகை வார்த்தை கேட்டுக் சுகவாணி, சித்த புருடனைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்

சுக. வசனம்:

கேளும் ஐயா சித்த புருடரே, சகல தேசத்துக்கும் ஏக சக்கிராதிபதியான சகுசி மகாராச தேவேந்திரன் நம்முடைய இராச கன்னிகைக்கு நாயகனாக வேணும் என்று அவள் இச் சித்திருக்கிறாளே, அவர் வந்து சேருகிறதற்கு ஓர் உபாயம் சொல்லுமையா சுவாமி.

சித். வசனம்

கேள் மின்னே சுகவாணி, அவள் தாய், தந்தையர் வந்தால் அதற்குத் தக்க உபாயம் சொல்கிறேன். அவர்களை அழைத் துக் கொண்டு வா மின்னே.

சுக வசனம்:

அப்படியே அழைத்துக்கொண்டு வருகிறேன் ஐயா.

சூ. வசனம்:

இந்தப்படிக்குச் சித்த புருடன் வார்த்தையைக் கேட்டுச் சுகவாணி போய் இந்த வார்த்தைகளையெல்லாம் மாளவ இராசனுடனும் மஞ்சுபாஷிணியுடனும் சொல்ல அவள் கேட்டு அப்படிக்கு ஒத்த சர்வம் சகா சக்கிரத்துக்கு ஏக சத்திராதிபதி யான சகுசி மகாராசாவை நம்முடைய கன்னிகை, நாயகனாக

வேண்டுமென்று ஆசை கொண்டிருக்கிறாள். அவருடைய சினேகமும் அவருடைய சம்பந்தமும் சிவ பூஜா பலத்தினால் கிடைத்தால், கிடைத்ததல்லாமல் மனித யத்தனத்தினால் கிடையாது. ஆனால் சித்தபுருடன் வந்து அழைத்துக் கொண்டு வரச் சொன்னானென்று சுகவாணி வந்து சொன்னாளே, அதனாலே ஓர் ஆசை பார்ப்போம் என்று சொல்லி, மாளவ இராசன் மஞ்சு பாஷிணியுடன் சித்த புருடனுக்கு அருகில் வருகிற மார்க்கம்.

### தருவு

மாளவ தேச ராசேந்திரன்
மஞ்சு பாஷிணி யுடனே
தோளினில் மாலை யிலங்க
சொகு சாக வந்தானே (1)

நவமான அணிக ளெல்லாம்
நாகரிக மாய ணிந்து
தவசித்த புருடன் தரிசனம்
தான் காண வந்தானே (2)

சூ. **வசனம்:**

இந்தப்படிக்குவந்த மாளவ இராசாவும் மஞ்சுபாஷிணியும் சித்த புருடனைக் கண்டு நமஸ்காரம் பண்ணித் தோத்திரம் பண்ணுகிற மார்க்கம்.

### தருவு

சரணம் சரணமையா சுவாமி
சரணம் சரண மையா
திரமாய்ச் சிவனைப் போற்றும்
சிவயோகி சித்த புருடரே (1)

கருணையென் காத லான
கருத் துள்ள தேவரீர்
தரிசனம் கண்ட போதே
சன்ம சாபல்ய மாச்சு (2)

எந்த னுடைய மகள்
இருதய மறிந்து தாமும்
சந்தோஷ மாகப் பண்ணும்
சுவாமி யெப் போதும் (3)

சூ. வசனம்:

இந்தப் படிக்கு மாளவ இராசன் தோத்திரம் பண்ணி சித்த புருடனைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்.

மாளவ வசனம்:

கேளுமையா, சித்த புருடரே, இந்தச் செய்திகளெல்லாம் சுகவாணி சொல்லக் கேட்டுச் சந்தோஷமாயிற்று. இப்போது, அந்தக் கன்னிகை ஆசை கொண்டிருக்கிறாள். சகசி மகாராச தேவேந்திரனை இவளுக்கு நாயகனாகப் பண்ணுவதற்கு ஓர் உபாயம் சொல்லும் ஐயா சுவாமி.

சூ வசனம்:

இந்தப்படிக்குச் சொன்ன மாளவ இராசனைப் பார்த்துச் சித்தன் சொல்கிற மார்க்கம்.

தருவு

கேளாய் சசுசேந்திரன் சிநேகம்
கிடைப்ப தெளிதோ காண்
மாளவ ராசேந்திரனே — பூ
மண்டலத்தி லுள்ள பேருக்கு

இந்திரன் சசியையும் விட்டு
எந்நேரமு மிவன கத்தில்
சிந்தனை தீரப் பூசித்திவன்
தரிசனை வேண்டுகிறா னவன் (1)

கைலாச கிரியை விட்டுக்
கௌரி யுடனே சிவன்
தயவா யவன் மனதில் — நித்தம்
தானிருக் கிறான தனால் (2)

மாணிக்க முடி மன்னர்
மகாராச தரிசனம் வேண்டிக்
காணிக்கை கொண்டு வாசலில்
காத்தி ருக்கிறா ரதனால் (3)

சூ. **வசனம்**

இந்தப்படிக்குச் சொன்ன சித்தபுருடன் வார்த்தை கேட்டு மாளவ இராசன் சொல்கிற மார்க்கம்.

**மாளவ இரா: வசனம்**

கேளும் ஐயா! சித்த புருடரே, அப்படிக் கொத்த சகசி மகாராச தேவேந்திரனுடைய தரிசனம் எப்படிக் கிடைக்கப் போகிறது. தேவரீர் அன்றோ அவருடைய மகத்துவமெல்லாம் சொல்லி ஒன்றும் அறியாத கன்னிகைக்கு விரகம் வரச்செய்தீர். தேவரீர்தானே இந்தக்காரியம் சங்கட்டனை பண்ணி நானும், என்னுடைய வமிசமும் பவித்திரமாயிருக்கிறதற்காகச் சகசி மகாராசா தேவேந்திரன் என்னுடைய கன்னிகையைக் கல்யாணம் பண்ணிக்கொள்ளத் தக்கதாக யத்தனம் பண்ணி இரட்சியும் ஐயா.

கூ. வசனம்:

இந்தப்படிக்குச் சொன்ன மாளவ இராசன் வார்த்தை கேட்டுச் சித்தபுருடன் சொல்கிற மார்க்கம்.

**சித். வசனம்:**

இந்தப்படிக்குச் சொன்ன மாளவ இராசன் வசனம் கேட்டுச் சித்தபுருடன் சகசி மகாராச தேவேந்திரனுடைய சமுகத்துக்கு வருகிற மார்க்கம்.

**தருவு**

19 சிவயோகி சித்தன் வந்தான் — மெய்ஞான
சிவயோக சித்தன் வந்தானே

சகல வித்தை விளையாட
சகசேந்திரன் கீர்த்தி கொண்டாட
சுசுவிராச கன்னிகையைக் கூடவே
சொல்லவே யோசனை நாடவே (1)

கூ. வசனம்

இந்தப்படிக்குச் சித்த புருடன் சகசிமகாராச தேவேந்திரன் சமுகத்துக்கு வந்து 'சயவிசயீபவ'என்று தோத்திரம் பண்ணுகிற மார்க்கம்.

20 **கட்டியம் கூறும் தருவு (கைவார தரு)**

பூலோக தேவேந்திரா
போசலாம்புதி சந்திரா
புவனரக்ஷ நிருபேந்திரா
புகழ் சகசேந்திரா

நானாகலைப் பிரபலா
நம் சோழ பூபாலா
நாதயே கேந்திரன் பாலா
நிருப சாகேந்திரா — பராகு (1)

தீன சன மந்தாரா
சேர்ந்தவர்க் குபகார
தீபாம் பிகா வரகுமாரா
திகழ்மானினீ பாஞ்சாலா
மகனீய குண சீலா
மதுர சங்கீத லோலா — பராகு (2)

அறிந்த மாத்திரம் வித்தை
ஆடுகிறேனுன் சமூகத்தில்.
அதி லுள்ள பிழைகளை
திருத்துமென் சுவாமி
சிறந்த தஞ்சைப் பதிவாசா
செழித்திடும் சோழதேசா (3)
ஸ்ரீ சகசேந்திரனே பராகு
ஸ்ரீ சகசி மகாராசேந் திரனே—பராகு

சூ. வசனம்:

இந்தப்படிக்குச் சித்தபுருடன் எச்சரித்து சகசிமகாராச தேவேந்திரன் சமுகத்தில் வித்தையாடுகிற மார்க்கம்

சூ. வசனம்

இந்தப்படிக்குத் தான்ஆடின வித்தையைப் பார்த்துச் சகசி மகாராசா சந்தோஷத்துடனே இருக்கும் வேளையைக்கண்டு தான் வந்த காரியம் சொல்கிற மார்க்கம்.

சித். வசனம்

கேளும் ஐயா சுவாமி, நான் வந்த காரியம் சொல்கிறேன். கேள் ஐயா, அது என்னவென்றால் சந்திர வமிசனான மாளவ

இராசனுடைய கன்னிகை சந்திரகாஹாசை என்னும் பெண் என்னைச் சகல தேசாதிசுவரருடைய சரித்திரங்களையெல்லாம் சொல்லச் சொன்னாள். நான் சகல இராசாக்களுடைய சரித்திரம் சொல்லித் தேவரீர் சரித்திரம் சொன்னேன். தேவரீர் சரித்திரம் கேட்டவுடனே விரகத்தை அடைந்து தேவரீருக்கே பாரியையாக வேணுமென்று இருக்கிறாள். அவருடைய தாய் தந்தையர் சகசி மகாராசேந்திரனுக்கு இந்தக் கன்னிகையைக் கூடுவதற்குச் சொல்லி நம்மை வேண்டிக்கொண்டனர். அதனாலே இங்கே வந்தேன். அந்தக் கன்னிகை தேவரீருக்கே யோக்கியம். அவருடைய சௌந்தரியம் சொல்கிறேன் கேளும் ஐயா.

### தருவு

21 சந்திர சமான வதனை இராசகன்னி — நல்ல
செந்தாமரை மலர்க்கையாள் ராசகன்னி

பந்துபோல் முலை யுள்ளவள் ராசகன்னி (1)
விந்தை பவளக் கொடியிடையாள் ராசகன்னி

அன்னங்கள் போல் நகையாள் ராசகன்னி — வெகு
அமிருத முள்ள யிதழாள் ராசகன்னி

வண்ண முல்லை நகையாள் ராசகன்னி
கெண்டை யொத்த விழியாள் அந்த ராசகன்னி (2)

மேகம்போ லழகாயுள்ள ராசகன்னி பூவில்
மெல்லிய தேகமுள்ளவள் ராசகன்னி

சகசேந்திர தேவருக் கான ராசகன்னி
தினம் தானுமே வருந்துகிறாள் ராசகன்னி (3)

**சித். வசனம்**

கேளும் ஐயா சகசி மகாராச தேவேந்திரனே, அந்தக் கன்னிகையுடைய ரூப அதிசயம் சொன்னாற்போல் ஆயிற்று. இனி அவள் குணாதிசயம் சொல்கிறேன் கேளும் ஐயா.

**தருவு**

22 நெறியாள் சின்னஞ் சிறியாள் — உம்மை
அறியாள் கண்டால் பிரியாள்
நறையார் மல ரணிமார்பன் — ஆன
நரேந்திரா சக சேந்திரா

கவ டெள்ளள வில்லாள் — வரக்
கண்டா லெதிர் நில்லாள்
அவளன் புள சொல்லாள் — அலை
அனங்கன் கலை வில்லாள்

புவி மாதரை யேசாள் — ஒரு
பொய் யாவது பேசாள்
சிவனார் பதம் நேசாள் — மெய்
திரள் சந்தனம் பூசாள்

வடவேங்கட மலையாள் — மனம்
மலையாள் இள முலையாள்
உடலா லெனி லிளையாள் — மதி
ஒளிகிண்டு மெண் கலையாள்

தொடு லீலைகள் தேராள் — சுவாமி
துரையென்று பின் பாராள்
அடியா ளென்று பேராள் — இப்போ
தழையா மலும் வாராள்

சமூகந் தனில் கொஞ்சாள் — வீட்டில்
தனித்தாள் பின்னு மஞ்சாள்
குமுறும் குறை மிஞ்சாள் — சுகம்
கொடுப்பாள் அதில் கெஞ்சாள்

அமலக் குயில் மாரா — எங்கள்
அளகைப் பதி யூரா
கமலா லயம் மனைவாழ்த்திய — கெடைச்
கன்னா சக சேந்திரா

சூ. வசனம்:

இந்தப்படிக்குச் சித்த புருடன் கன்னிகையினுடைய சௌந்தரிய குணாதிசயம் சொல்லச் சகசிமகாராச தேவேந்திரன் கேட்டுச் சந்தோஷத்துடனே அவளைக் கல்யாணம் பண்ணிக் கொள்கிறோம் என்னும் இதயம் அறிந்து, இந்த வேளையிலே தானே அவள் தாய் தந்தையரையும் கன்னிகையையும் அழைத்துக்கொண்டு வருகிறோமென்று சித்தபுருடனுடன் இந்த விருத்தாந்தங்களை இராசாவுக்கும் இராச பத்தினிக்கும் சொல்லி அவர்களைக் கல்யாணத்துக்குக் கொண்டு வருகிற மார்க்கம்.

## தருவு

23 மஞ்சு(ள) பாஷிணி கன்னிகை
மாளவ ரர்சன் மற்று முள்ளோர்
தஞ்சை வாழ் சக சேந்திரன்
சமுகத் தில்தான் வந்தாரே

சூ. வசனம்

இந்தப்படிக்கு வந்த மாளவ இராசன் சகசி மகாராச தேவேந்திரனைப் பார்த்துச் 'சலாம்' பண்ணுகின்ற மார்க்கம். இந்தப்படிக்குச் சலாம் பண்ணி மாளவ இராசன் தோத்திரம் பண்ணுகின்ற மார்க்கம்.

மாளவ வசனம்

ஸ்ரீசகசி மகாராசனே, சல்லாமுரே, சல்லாமுரே பராகு சுவாமி.

24 தருவு

தேவசன பால தேவரீர் — பாத
தரிசனம் கண்டவுடன்
தாவரமா யெங்கள்
சன்ம சாபல்ய மாச்சு (1)

சிவ பூசாபல மகிமை
சீக்கிரத்தி லெங்கள்
கவலை தீரவே சமூகம்
காண லாச்சே (2)

இனி யுன்றன் மனமகிழ்ந்து
யெங்கள் கன்னிகையை
அனுகூல மாக நித்தம்
அணையவே நினையும் (3)

சூ. வசனம்

இந்தப்படிக்கு மாளவ இராசன் சகசி மகாராச தேவேந்திரனைப் பார்த்துச் சொல்லிப் பின்பு தன்னுடைய கன்னிகையைப் பார்த்துச் சொல்கின்ற மார்க்கம்.

25

## தருவு

அதிருஷ்டவநி நீ பெண்ணே
  ஆகும் கண்டா யிப்போதே
சதுரன் சகசி மாராசன்
  சமூகம் கிடைத்ததே (அ)
மதன சந்நிபன் சோழ
  மண்டல புரந்தரன் (1)

சதயன் அனைவரையும்
  காக்க வல்லோன்
இதயம் களங்க மில்லான்
  இரவி குல சேகரன் (2)

பாத தரிசன மிப்போதே
  பார்க்க லபித்த போதே
உலக் மெல்லாம் தானே
  ஒரு குடைக்கீ ழாளும் (3)

வல்லவன் சிவனைப் போற்றும்
  மனது முள்ளோன்
கலவிசெய்ய நித்தியமும் பிரியாமல்
  கல்யாண மாகிற போது (4)

சூ. வசனம்

இந்தப்படிக்குச் சொன்ன மாளவ இராசன் கன்னிகையை யும் சகசி மகாராச தேவேந்திரனையும் பார்த்து இனி உம் மனசுக்கு இச்சையான வார்த்தையைப் பேசிக்கொள் என்கிற வார்த்தையைக் கேட்டுக் கன்னிகை சகசி மகாராச தேவேந்தி ரனைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்.

26

## தருவு

இப்போதன்றோ சந்தோஷ மாச்சு
— இதுவரைக்கும்
இருந்த குறைகளெல்லாம் போச்சு
— தேவரீரென்னை
சப்பிர மஞ்சத்தி லழைப்பித்துப்
— பேசி மகிழ்ந்து
சுவாமி கையில் சந்தனப் பூச்சுப்
— பூசியுடனே

மனது நிலனே யொருவருள்
ளொருவ ரென விரவியே
தனதன யென திருகன
தன வகையினில்
மஞ்ச மீதினில் விளையாடி
— விந்தையாகவே

வாச சுகந்தாதி யெல்லாம் சூடி
— தயவுடன்
கொஞ்சிக் கொஞ்சி முத்தாடி
— மன்மதனுடைய
குரோதம் தீரும்வகையைத் தேடி
— வகையாயென் றன்

அதுவித மயலது
பதறுதல் தணியவே
மதுரச மொழுக
அதர வமுதினில்
கலையை நெகிழ்த்துள மகிழ்ந்தீர்
— ஆதிக்கிய சுகம்

காணும் விதங்களை நினைந்தீர்
— விம்முகின்றவென்

முலை மார்பினில் வீழ்ந்தணைந்தீர்
— இருவரும் மிக
மோகம் மிஞ்சும்வேளை யறிந்தீர்
— விடிவளவும்

இருவிழியு மயர்ந்து
பொருதல் மறதிவர
ஒருமையுட வேவெகு
சரஸமுஞ் செய்தீர்
அமலையருள் நாயகி
யருள் சூடி — ஓரெள்ளளவும்

களங்க மில்லாமல் உறவாடி
— சுக போகத்தில்
சம போக மாக விநாடி — லீலைபுரிந்து
சகசேந்திர வகையுடனே கூடி
— இருவர் தேகம்

புளகிதம் வர மிடறு
உளவள வெரலி தர
நளினமு மதிலுறை
அளியென லானோம்.

27 **வேறு தருவு**

ஆசையாய் வந்தேனுன் மீதில்
ஆதரவா யென் மீதில்
நேசமா யிதழ் கோதாமல்
நீர் பராமுகம் செய்ய

தன்மமோ வுமக்கென் மீது
வன்மமோ, பெண்சன்ம மொரு
சன்மமோ, அடியேன் செய்த
கன்மமோ, பெம்மான் — ரம்மியமோ

மூத்து மாலை நீராக
முடிமாலை சருகாக
மெத்த மனசு நோக
விழியில் புன லாறாக

ஓடுமோ, சரீர மெங்கும்
வாடுமோ, வும்மை மறக்கக்
கூடுமோ, கிள்ளை மேல் — வா
தாடுமோ, வேறு ஆசை — நாடுமோ

மாரன் கணைகள் தூவ
வாசனைக் குயில்கள் கூவச்
சோகமாய் நிலவு மேலக்
கொங்கை விம்மியே தாவ

நீதமோ நாளுமக் கென்ன
பேதமோ, மைய லொருவர்
வீதமோ, அடிக்கடி — வி
ரோதமோ, விடு — காதமோ

தென் கமலையில் வந்த
தேவிதனைப் பணிந்த
தேன் கருணை மிகுந்த சக
சேந்திரா நீ சேராத — தேதையா

இவர் சொல் சூதையா
மகிழ்ந்தணையு மிப்போ தையா
கலடுமக் காகா தையா
வெகு நாளாக — ஆசை

## வேறு தருவு

28 மாரா, பூசை யிதுசமயம்
மகிழுமென் சுவாமி
தாரணி புகழ் ஏகோசி
தந்த சகசிராச சந்திரா

தங்க மார்பிடம் நீதம்-என்
சாம்பிராணி பூசு கதம்பம்
கொங்கை யிரண்டும் பூர்ண கும்பம்
கோயில் மெய் மனதே பிம்பம்

வதன தாமரைப்பூ முக்கியம்
மார்ச்சனம் வியர்வை யாரோக்கியம்
ஆதரம் நைவேத யோக்கியம்
அங்கசன் சொல்லிந்த வாக்கியம்

அன்பாய் கமலைக் கனேகம்
அருச்சிக்கும் சகசேந்திர மோகா
இன்ப சுரத சம் போகா
இந்திரா திக்கம் ஏகபோகா

### வேறு தருவு

29 பாரையா உன்றன் பாதந்தனை
நம்பினேன் நான்
நாரி நான் சகசிராச நாதா
நரபா லேந்திரா — பாரையா

வலிய வந்தால் பின்னை யுண்டு — மெத்த
வாது செய்ததென்ன மிண்டோ — நல்ல
நிலவு காயுதிந்த நிலவிலே — மகிழ்ந்து
கலவியே புரிந்தென் மெலிவுதீரவகை
— பாரையா

முத்து முத்தாய்க் கூட நாடி — வந்தேன்
முத்தம் தர விளையாடி — யிரு
முத்துமுலைமேல் மாரன்
அத்திரம் சொரிய வென்
சித்தம் மிக நோகுதுன் சித்தம் — இனித்
திரும்பிப் பாராயோ

கற்றவருக் குபகாரா வெங்கள்
 கமலை மாதைப் பணிதீரா — ஏக
சத்திர பதியாக வந்த உத்தம
 சக சேந்திரா
மெத்தை மீதிலென்னை நித்தம்
 மருவ வகை பாரையா — பாரை

சூ. **வசனம்**

இந்தப்படிக்குச் சகசி மன்னன் ராஜகன்னிகையை ஏற்றுக் கொள்கிறான்.

**சோபனப்பாட்டு**

30 சோபனமே சோபனமே
 தீபாம்பிகை தந்த சகசிராசனுக்கு
இரவி குலநிதிக்கு
 இந்திரனுக் கிளையவனுக்கு
சரச சத்குண னுக்கு
 தர்ம வானுக்கு
அரிவை யருக் கெல்லாம்
 அங்கசன் போல் வந்த
துரைகள் சிகா மணி
 சுந்தர னுக்கு
மகிழ்ந்து சந்திரிகா ஹாசை
 மானை யிப்போ
வகையாய்க் கல்யாணம் செய்த
 மன்ன னுக்கு
மகிபதியாய் வந்த மாரன்
 ஏகேந்திரன் தந்த
முகசந்திர சகசிராச
 முகுந்தனுக்கு சோபனமே

**மங்களம்**

மகராச சகசேந்திரனுக்கு மங்களம்
தஞ்சை வாழ் மகிபதிக்கு மங்களம் (1)

எதிரொருவ ரில்லாத ஏகசத்ரபதிக்கு
மதுர வாசகனுக்கு மங்களம் (2)

அண்டின பேரைக் காக்கும் அரசனுக்குத் தென்
சோழ மண்டலாதிபனுக்கு மங்களம் (3)

சிறந்த கமலைமாதை தினம் கருத்தினில்
மருவ நிற்பவனுக்கு மங்களம் (4)

**சுபம்.**

# குறவஞ்சி

## தமிழ் இசை நாட்டிய நாடகம்

தஞ்சை

மராட்டிய மன்னர்

சகசி காலத்துப்

படைப்பு

கி.பி. 1684—1712

# தஞ்சை மராட்டிய மன்னர் சகசி மீது குறவஞ்சி

## தமிழ் இசை நாட்டிய நாடகம்

**நாடகத்தில் வரும் மாந்தர்கள்:**

1. சூத்திரதாரன் — நாடகத்தை அறிமுகம் செய்து விளக்கம் கொடுப்பவன் நாடகம் நடாத்துவோன்
2. கட்டியக்காரன் — நாடகத்தைத் துவக்கி வைப்பவன்
3. சகசி மன்னன் — தஞ்சை வளநாட்டின் மன்னன் இராச கன்னிகையால் காதல் கொள்ளப்பெற்றவன்
4. இராச கன்னிகை — சகசி மன்னன் மீது காதல் கொண்டவள்
5. சகி — இராச கன்னிகையின் பாங்கி
6. குறத்தி — இராச கன்னிகைக்கும் மகாராசனுக்கும் மணம் நிகழும் என்று குறி கூறியவள் சிங்கி எனக் கூறப்பெறுபவள்
7. சிங்கன் — குறத்தியின் கணவன்

**கதை நிகழும் இடம்:** தஞ்சை, சிங்காரவனம்

**காலம்:** சகசி மன்னனின் ஆட்சிக் காலம்: 1684—1712

**நாடகம் நிகழ்ந்த இடம்:** தஞ்சைச், சகசி மன்னரின் அரண்மனை நாட்டியசாலை

# சகசி மன்னர் மீது பாடப்பெற்ற குறவஞ்சி

## தமிழ் இசை நாட்டிய நாடகம்

இராகம்—நாட்டை தாளம்—சம்பை

### தோடய மங்களம்

ஜய பார்வதீ ரமண
ஜய ஜானகீ ரமண
ஜய அந்தக தமன
ஜய மது ஸூதன (ஜய ஜய)

ஜய திரிபுர ஹரண
ஜய வேதோத்தரண
ஜய அகிலநுத சரண
ஜய ஜனா புரண (ஜய ஜய) 1

ஜய ரவிசசி நேத்ர
ஜய அகிலநுத பாத்ர
ஜய பாவன சரித்ர
ஜய ஜகன் மித்ர (ஜய ஜய) 2

ஜய நந்தி வரவாஹ
ஜய அண்டஜ வாஹ
ஜய நித்யோத் ஸாஹ
ஜய சமித தாஹ (ஜய ஜய) 3

## மங்கள தருவு

இவை தெலுங்கு மொழியில் எழுதப்பெற்ற மங்கள தருவுப் பாடல்கள்.

மஹநீய தியாகேசுனிகி மங்களம்
மாபாலி தேவுனிகி மங்களம் (1)
கனக வஸந்துனிகி மங்களம்
கமனிய சரித்ருனிகி மங்களம்
மனஸிஜ ஹருனிகி மங்களம் (2)
சோமாஸ் கந்தமூர்த்திகி மங்களம்
சோபன ப்ரதுனிகி மங்களம்
மாமீத தயஸேயு சுவாமிகி மங்களம் (3)
போஸலகுல சாஹேந்த்ர
பாஸுரகுல தேவுனிகி மங்களம்
மாசிவ த்யாகே சுனிகி மங்களம் (4)

சூ: வசனம்:—

இந்தப்படிக்குச் சகல தேவதா பிரார்த்தனை பண்ணின ததனந்தரத்திலே குறவஞ்சி நாடகத்திலே கதா சங்கிரகமான அகவல் கேட்பிக்கின்ற மார்க்கம்.

## கதா சங்கிரக அகவல்

திருவளர் மார்பன்
தருவளர் கரத்தான்
வஞ்சியர் மோகனன்
தஞ்சை நராதிபன்
மகபதி யெங்கள்
சகசி பூபதியைக்
கண்டன ளிராச
கன்னிகை யொருத்தி
கொண்ட மோகத்துடன்
கூடி வருவதும்

வந்து மயலாய்ச்
　　சிந்தை தளர்வதும்
குறிசொல்ல வல்ல
　　குறவஞ்சி வருவதும்
கன்னி சகசேந்திரனைக்
　　கலந்து சேர்வதும்
என்னு மிவ்வகை
　　யியற்குற வஞ்சியாய்ப்
பொங்கமாய்ச் சகசி
　　பூபதி மீதில்
அங்கித மாக
　　வருந்தமிழ் தன்னால்
கருதிய முத்துக்
　　கவியுரைத் தானே
தரணியில் நெடுநாள்
　　தழைத்து வாழ்ந்திடவே

சூ. **வசனம்:—**

இந்தப்படிக்குக் கதாசங்கிரக அகவல் கேட்பித்த ததனந்தரத்திலே குறவஞ்சி என்கிற நாடகத்திலே சகல விக்னங்களும் நிவாரணம் பண்ண விக்னேசுவரனைப்பிரார்த்தனை செய்யவே விக்னேசுவரன் வருகிற மார்க்கம்.

## ஸ்ரீ விநாயகர் தருவு

வந்தே சிவஸுதம்
　　வரத மமரநுதம்
ஸுந்த்ர குணயுதம்
　　ஸுப்ரஸன்ன வதனம் (1)

பாசங்குச தரம்
பணிவர கேயூரம்
மூஷிக வாகன
மோதக கரம் (2)

பாலேந்து சேகரம்
பால சிந்தூர தரம்
லாலித பக்தவரம்
லீலயா விக்னஹரம் (3)

சு. **வசனம்:—**

இந்தப்படிக்கு விக்னேசுவரன் வந்து சகல விக்னங்களும் நிவாரணம் பண்ணின ததனந்தரத்திலே, குறவஞ்சி நாடகத்திலே, சகசி மகாராச தேவேந்திரனைக் கண்டு விரகதாபம் கொண்ட இராசகன்னிகை, பாங்கிமாருடனே கூடச் சிங்கார வனத்துக்கு வருகிறாள் என்று சகல சனங்களுக்கும் எச்சரிக்கக் கட்டியக்காரன் வருகிற மார்க்கம்.

**குறிப்பு:** கட்டியக் காரனின் தருவு இங்கே காணப்பெறவில்லை.

**சு. வசனம்:**

இந்தப்படிக்குக் கட்டியக் காரன் வந்து சகல சனங்களுக்கும் எச்சரித்த ததனந்தரத்திலே குறவஞ்சி நாடகத்தில் கதா சம்விதானம் எப்படியென்றால், சகசி மகாராச தேவேந்திரன் ஒரு நாள் பவனி வருகிறபோது அவருடைய ரூபரேகா விலாசங்களைக் கண்டுகொண்டு, மோகத்துடனே விரகதாபம் பொறுக்க மாட்டாமல், மறுநாளே பாங்கிமாருடனே கூடி, இராச கன்னிகைசிங்கார வனத்துக்கு வருகிற மார்க்கம்; பராகு சுவாமி

## கதாசங்கிரக அகவல்

(2) **பிரவேச தருவு**

பங்கய மடந்தை
சங்கீதக் கிள்ளை
சோலை யிளமயில்
வால கோகிலம்
கீத வண்டு
கிளரு மன்னப்பேடை
மாதர்க் கரசு
மதன சஞ்சீவி
பவளவாய்க் கரும்பு
குவளவேல் விழியாள்
முடித்த கூந்தலும்
மொய்ம்மலர்ச் செருக்கும்
படிந்த பால்மொழியும்
பசுங்குழைக் காதும்
கட்டிய சுட்டியும்
பொட்டொடு மிலங்க
குரும்பைபோல் மெல்ல
அரும்பிடு முலைகளும்
விளங்க நல்ல
இளமலர்ச் சோலையில்
வளம்பெற யிராச
கன்னி வந்தனளே

**ஆதி — ராகம்** **ஆதி — தாளம்**

**உள் தருவு**

3 **கன்னிகையும் வந்தாள்**
ஓய்யார இராச (கன்னி)

தன்னிகரில்லாத் தஞ்சை மன்னன்
சகசேந் திரன்மேல் ஆசைகொண்டு (கன்னி)

மாரன் கணையால் மெலிந்து
ஆரம் பொருந்தாமல் நைந்து (1)

பார முலைகள் பிசைந்து
கோர மதியா லயர்ந்து

சோலையி யிளங்குயில் கூவ
வேலை யொலிகளும் தாவ (கன்னி) (2)

ராகம் — சௌராஷ்டிரம் தாளம் — அடதாள சாபு

## வெளி தருவ்

4 இராச கன்னிகையும் வந்தாள்
ஒய்யார மாகவே (இராச)

பேசும் கிளியி தென்னவே
வாச மலர்கள் சிந்தவே
சகசேந்திரன் மீதில் ஆசை
மிகுந்து பொங்கவே (1)

கும்ப முலைகள் குலுங்கவே — மார்பினிலிட்ட
செம்பொன் மணி யிலங்கவே
அம்புவிழி மயங்கவே சரணங்களை
நம்புமசிலம் பிலம்பவே (2)

கட்டும் இரத்தினச்
சுட்டி மின்னவே — நெற்றியிலிட்ட
வட்டப் பொட்டும்
விட்டெ றிக்கவே
கட்டும் மட்டும் (3)
திட்டவட்டமுள் — இரதியைப் போலவே
கட் டழகும்
நட்டணையுமாய் (4)

ஏக பூபால பாலகன்
சகசி ராச

லோக நாயகன் மீதினிலே
இந்திராணியைப் போல

மோக மிகவு மாகியே
நாகரீக வுல்லாசமாய் (இராச) (5)

சூ. வசனம்:—

இந்தப்படிக்கு இராச கன்னிகை விரக தாபம் நீந்த மாட்டாமல், தன்னைப் பாதிக்கிற மன்மதனைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம், பராகு சுவாமி.

(மன்மதன் பாட்டு)

**தருவு**

இராகம்; கண்டாவம் தாளம் ஆதி தாளம்

மலர் வாளி தனுவுடன் மன்மதா — நீ
வந்து நிற்பதேது மன்மதா (1)

சிலையை வளைத்ததேது மன்மதா — உனக்கு
சிவாசிவா யென்செய்தேன் மன்மதா (2)

பிஞ்சு மதியினாலும் மன்மதா — நல்ல
பிரச மலரினாலும் மன்மதா (3)

மிஞ்சி யென்மேலே வாராய் மன்மதா — என் மனம்
கெஞ்சுதே யிப்போது மன்மதா (4)

சத்திரபதி சுமுகன் மன்மதா — எங்கள்
சகசிராசன் மீதில் மன்மதா (5)

ஆசையான ராசி கன்னிநான் மன்மதா — என்னை
அறியா திருப்பதேது மன்மதா (6)

சூ. வசனம்

இந்தப்படிக்கு மன்மதனை நிந்திக்கிற சமயத்திலே அவனுக்கு மாமனாகிய சந்திரனும் வந்து வேதனை செய்யவே, அவள் அந்தச் சந்திரனைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம், பராகு சுவாமி.

(வெண்ணிலா பாட்டு)

தருவு

இராகம்: சாரிங்கா அடதாளம்

மோக மானேன்
சகசேந்திரன்மேல் — வெண்ணிலாவே

மோசம் போனேன்
என் செய்வேன் — வெ

நாகரிக மதராசன்
ஏகராசன் பாலன்மீதில் — வெ

சந்தனம் சுடுதையோ
செந்தனமுங் கொதிக்குதே — வெ

இந்த வேளைதனில் நீயும்
வெந்தணலா யுதித்தாயே — வெ

ஆசை கொண்டதென்னை யாரறிவோ — நான்
ஆசைகொண்டதும் நீயறியாயோ — வெ

மோசம் வந்தா லொருவருக்கும்
ரோசம் வந்து சொல்லொட்டாதே — வெ

புத்தமு தத்தில் பிறந்தும்
புத்தியிம் மட்டோ சொல் — வெ

சத்திரபதி சகசி ராசன் தன்மேல்
ஆசை கொண்ட நான்காண் — வெ

சூ. வசனம்:

இந்தப்படிக்குச் சந்திரனை நிந்தனை செய்கிற சமயத்திலே மலைய மாருதம் வந்து பாதிக்கவே, அந்த மலையமாருதத்தைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம். பராகு சுவாமி

## தென்றல் பாட்டு

7

### தருவு

மதி நிலாவைப் போலவே தென்றலே—நீயும்
வந்தணைந் தாயோ தென்றலே
இதமாகச் செய்யாமல் தென்றலே—மோசம்
இப்படிச் செய்தாயே தென்றலே (1)
தஞ்சைவாழ் சகசேந்திரன் என்னையே — வந்து
தழுவினா லென்செய்வாய் தென்றலே
வஞ்சக மாகவே தென்றலே — மிக
வருத்த வேண்டாமினி தென்றலே (2)

சூ: வசனம்:

இந்தப்படிக்குச், சந்திரன், மன்மதன், மலய மாருதம் பாதிக்கக் கண்டு, அந்த வேதனைக்குப் பொறுக்க மாட்டாமல் கிளி, கோகிலம், வண்டு, அன்னம் முதலியவற்றைப் பார்த்துத் தூது அனுப்புகிற மார்க்கம். பராகு. சுவாமி.

## தூது

### தருவு

இராகம்: சங்கராபரணம் சாபு தாளம்

கன்னியர் மதன் விண் மதியும்
காற்றும்பகை ஆச்சுது காண்
அன்னமே யஞ்சுகமே
ஆன வண்டே பூங்குயிலே

முன்னமே யானும்
முடிவணங்கித் தெண்டனிட்டேன்
மன்னன் சக சேந்திரனை
வரச் சொல்லச் சொல்வீரே

சு. **வசனம்**

இந்தப்படிக்கு இராச கன்னிகை முதலில் அன்னத்தைத் தூது போகச் சொல்லி வேண்டிக் கொண்டு அனுப்புகிற மார்க்கம். பராகு

**அன்னம் தூது**

**தருவு**

9 செங்கமலம் திகழ் அன்னமே — வளர்
செங்காலில் மட வன்னமே
தங்கநிறம் பொரு மன்னமே — என்
தயவுக்கு நீதா னாகுமன்னமே (1)
உன்னை யன்றி யுறவுதா னினி
ஒன்றும் காண்கிலேன் அன்னமே
மன்னன் சகசேந்திரன் தன்னி டத்தினில்
மயல் சொல்லிவா அன்னமே (2)

சு. **வசனம்:**

இந்தப்படிக்கு இராச கன்னிகை அன்னத்தைத் தூதனுப்ப; அது வராமல் தாமதமான படியினாலே கிளியைத் தூது போகச் சொல்லி வேண்டிக்கொள்கிற மார்க்கம் பராகு சுவாமி.

**கிளி — தூது**

**தருவு**

10 பேசவல்ல நல்ல கிளியே — உன்
பெருமை நான் அறிவேன் கிளியே

நேசமான பசுங் கிள்ளையே —இனி
நல்ல நேரமிது கிளியே (1)

பாலுடனே பழம் தருவேன் கிளியே — என்
பங்கயக் கண்ணனுட னணைப்பேன்

கோலவரி கை விடாமல்
குலாவிக் கொண்டாடுவேன் கிளியே (2)

தேச ராசர் பணி ஏகபூபதி
செல்வன் கிளியே சகஜி

ராசேந்திர னிடத்தி லாசை சொல்லி
கிளியே அழைத்து வா

ஓடி வா வென் னாணை
உண்மை சொன்னேன் கிளியே (3)

சூ. வசனம்:

இந்தப்படிக்குக் கிளியைத் தூது அனுப்ப அது வராத படியினாலே, வண்டைப் பார்த்துத் தூது போகச் சொல்லி வேண்டிக் கொள்கிற மார்க்கம்; பராகு சுவாமி.

## வண்டு — தூது

### தருவு

**இராகம்: தேவகுப்தி** **தாளம் — ஆதி**

பூவில் வண்டே, பூவில் வண்டே !

வாவி தோறு மாயலர்ந்து
தாவி மணக்கும் தாமரைப் — பூவில் வண்டே

தென்னா தெனாவென விசைக்கும்
மின்னனா ரளக மேவும் வண்டே.

சத்திர பதி பவனிக்கே
மெத்தவும் நான் மோகம் கொண்டேன்

தஞ்சை வாழ் சகஜி ராசன்
நெஞ்சுதா னிரங்கப் பேசாய்

சூ. வசனம்:

இந்தப்படிக்கு, வண்டைத் தூது அனுப்ப அதுவராமல் தாமதமானபடியால், குயிலைப் பார்த்துத் தூதுபோகச் சொல்லி வேண்டிக் கொள்கிற மார்க்கம், பராகு சுவாமி.

**குயில் தூது**

**இராகம் — காம்போதி** **தாளம் — சம்பை**

12 மாவிளஞ் சோலைக் குயிலே
வசந்த காலக் குயிலே
கூவிட வாரீர் குயிலே
குளிர்ந்த இசைக் குயிலே (1)

இன்னம் மாமரச் சோலை
இசைந்த தெல்லாம் பார்த்தேன்
பொன்னடி பணிவேன் உன்றன்
புகழைத் தோத்திரம் செய்வேன் (2)

வாசவன் சகசி ராச
மன்னவன் தன்னிடத்தில்
ஆசை சொல்லி இந்நேரமே
அழைத்தோடி வாராய் குயிலே (3)

சூ. வசனம்

இந்தப்படிக்கு இராசகன்னிகை, கிளி, கோகிலம், வண்டு, அன்னம் முதலான நான்கையும் தூது அனுப்ப அவை வராமல் தாமதமான படியாலே சகியைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம். பராகுசுவாமி.

**சகி தூது**

13 உயிருக் குயிரான சகியே — உறவுசொல்ல
உன்னையல்லால் ஏது சகியே

நயமுத்தமிழ் நாவாண ரேபுகழ் ஏத்தும்
நரபதி விகார மதவேள் (1)

சகசிமகா ராச னிடத்தில் தூதுசென்ற
குயிலும் வண்டு மன்னமும்

இகழ்விலா தோங்கும் கிளியும் ஐயோ
இன்னம் வரக்காணேன் சகியே (2)

விண்ணு கனதனங்கள் பிசைந்தே னிரவெலாம்
உறக்கம் வரவில்லை சகியே

மண்ணுமணி மேடை மீதில் சகசேந்திரன்
வந்தணையச் செய்வாய் சகியே (3)

(உயிருக்கு)

சூ, வசனம்:

இந்தப்படிக்கு இராசகன்னிகை சகியைப் பார்த்து இந்தச் சகியும் அவைபோலவே தாமதமாயிருப்பாளோ என்று திரும்பவும சொல்கிற மார்க்கம்.

தருவு

14 தருணிநீ தூது சென்றால்
ச்கசி ராசேந்திரன்
வருவாரோ வாராரோ என்று
தெரிய வேண்டும்
குறத்தியைக் குறிகள் கேட்க
வரிசையா யழைத்தோடி வாடி

சூ. வசனம்:

இந்தப்படிக்கு இராசகன்னிகை சொன்ன வார்த்தையைக் கேட்டுச் சகி போய்க் குறத்தியை அழைக்க, குறத்தி வருகிற மார்க்கம்.

## அகவல்

## குறத்திபிரவேச தருவு

15 கஞ்சயா துறைந்த
தஞ்சையூர்க் கதிபன்
மகபதி யெங்கள்
சகசி ராசேந்திரன்

வாழும் நாட்டில்
மடந்தையர் மகிழ
தாழ்குழல் நிரம்ப
த்யங்குதார் முடித்து

பச்சைப் பொட்டும்
வச்சிரச் சுட்டியும்
நெற்றியி லிலங்க
நெடுவிழி சுழல
கற்றபால் மொழிகள்
கலகல வென்னத்
தந்த வோலையும
விந்தையா யிலங்க

பங்கய முகத்தொளி
பற்றிப் பரந்தொளிர
சிங்கன் சாத்திய
சங்குத் தாலியும்

பொன்னின் மணியும்
பூணைக் காச்சியும்
மின்னி கன்னி
மிகவுமே தயங்க

குழந்தை மாறாப்பும்
குறக்கூடை யிடுக்கியும்

இழைத்தபொன் மாத்திரைக்
கோலு மிங்கிதமும்

ஆகவே கன்னிக்குக்
கைக்குறி யுரைக்கவே
வாகுடன் மலைக்குற
வஞ்சி வந்தாளே

**உன் தருவு**

**(முடுகு)**

வஞ்சி வந்தாள் — ஒய்யாரக் குற
வஞ்சி வந்தாள்

தடிக்கு முததியு
மடிக்கு மலையினில்

வடிக்கு மமுதென
நாடவே
வெடிககு மருமலர்
தொடுக்கு நல்தொடை
முடுக்கி முருகுழல்
சோரவே (வஞ்சி) (1)

படிக்கும் வகைசில
அடிக்கு மதனையும்
முடிக்கி அரியிடை
ஒடுக்கியே

அடுக்கி நவமணி
தொடுக்க நிரவிய
இடுக்கும் குறப்புட்டி
இடுக்கியே (வஞ்சி) (2)

மகர கேதன
னமுத வாசகன்

மருவுங் காவிரி
யாளுவோன்
தகர மாகுழ
லியர் மனோகரன்
சகசி பூபதி
நாட்டிலே (3)

சிகர மாமுலை
தளதளா
தளாவென வேல்விழி
சுழலவே
துகளி லாதொரு
கொடியி தாமென
மயிலு மாமென
விரவியே (4)

கொஞ்சுங் கிளியென
விஞ்சுங் குயிலென
இன்சொல் பலபல
பேசியே
அஞ்சு நடையொடு
மிஞ்சு வடிவொடு
அஞ்சு மலரென
மேவியே (5)

**உள் தருவு**

வஞ்சி வந்தா ளய்யா — ஒய்யாரக்குற
வஞ்சி வந்தாளய்யா

நஞ்சு விழியும்
சுழல
அஞ்சு நடையும்
பழகி

செஞ் சிலம்பும்
கொஞ்ச
கொஞ்சுங் கிளி
யிவளென வஞ்சி (1)

நேத்திரப் பொடி
திமிர்ந்து
காத்திர முலை
குலுங்க
சாத்தி ரங்கள்
சொல்ல வல்ல
மாத்திரைக் கோல்கைக்
கொண்டு வஞ்சி (2)

பொன்னிநதி சூழும்
நாட்டில்
தன்னிக ரில்லாத
விராச
கன்னிதன் திரு
வுளத்தில்
உன்னியக் குறிகள்
சொல்ல வஞ்சி (3)

லோக ராசர் பணிந்
தேத்தும்
யாக ராசரை
வணங்கும்
ஏக ராசன்
அளித்தருள்
சகசி ராசன்
திரு நாட்டிலே வஞ்சி (4)

(17) **வெளிதருவு**

**இராகம்தோடி**

மலைக் குறவஞ்சி வந்தாளே
மாரன் கலைக்கினி
தாகிய
கன்னிக் குக்குறி
சொல்லவே மலைக் (1)

உள்ளங் கையில்
வைத்த நெல்லிபோல்
உள்ளத்தில் எண்ணிய
உளவெலாம் சொல்லி மலைக் (2)

வெள்ளி பொன்
வெகுமானம் புல்லி வாங்கும்
வேடிக்கை யாகிய
விநோதம் செய் மெல்லி மலைக் (3)

வள்ளி நல்ல தர்மம்
புரியும் மாந்தர்
மயங்கும் படிக்குச் செய்யும்
மந்திர நெறியும் மலைக் (4)

சொல்ல வல்ல
நல்ல குறியும்
நீதி சோதிட சாத்திரத்தில்
சூட்சியு மறியும்—மலைக் குறவஞ்சி (5)

சூ. **வசனம்:**

**இந்தப்படிக்குச் சகி, குறத்தியை அழைத்துக் கொண்டு வந்து கன்னிகையைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்.**

**சேடி. வசனம்:**

இராசகன்னிகையே, நீ சொன்னதுபோல் தானே குறத்தியை அழைத்துக்கொண்டு வந்தேன். உன் மனசிலே நினைத்த காரியம் கேளடியம்மே.

**சூ. வசனம்:**

இந்தப்படிக்கு வந்த குறத்தியைப் பார்த்து இராசகன்னிகை சொல்கிற மார்க்கம்.

**தருவு**

18 எப்போது நீ குறமானாய்
இருப்பது எந்தத்
தேசமடி யம்மே

தப்புரை யுரையாமல்
மெய்ப்படி யாகவே
தானறிந்தது சொல்லம்மே

உசிதமாய் நீகண்ட
தேசங்கள் மலைகளும்
வசீகர வஸ்து தலங்களும்

ஒப்பிலாத வனநிதியும்
வரிசையாய்ச்
சொல்லடி மானே (எப்போது)

**சூ. வசனம்:**

இந்தப்படிக்கு இராசகன்னி, குறத்தியைக் கேட்கவே, குறத்தி சொல்கிற மார்க்கம்.

### தருவு

19 ஆனால் சொல்கிறேன் கேளடியம்மே !

பாற்கடலில் பள்ளி கொள்ளும்
பர வாசு தேவன்
உந்திமேல் கமலத்தில்
உதித்த வேத னிடத்து (1)

உயிர் தோன்றிய தம்மே
உயிரிடத்தில் ஆகாசம்
உப்புவிதை யதனி டத்தில்
நயமிகுந்த வாயு வந்து
வாயுவினில் தேயு வந்து (2)

தேயுவினில் சலமு தித்து
சலத்தினில் பிருதிவி வந்து
வேயதொரு பூமி தனில்
மேருமலை அங்கு தித்து (3)

அங்கு தித்த மாமேரு
அகிலத்துக் கச்சாணி யாய்
பொங்கும் பொன்னிற மாம்
பொன்மலைதான் மிக வோங்கும் (4)

கொடுமுடி ஆ யிரத்தெட் டும்
குவிந்த அஷ்ட பர்வதமும்
இடமுடனே இதைச் சூழும்
இதைச் சூழ்ந்த திருநிலம்காண் (5)

இருநிலத்தான் நவ கண்டம்
எனவே பிரிந் திருக்கும்
அரிய வரை யின்கீழ்ப்பால்
அழகிய சம்புத்தீ பென்பர்காண் (6)

தக்கிணத்தில் நாவல் நிற்கும்
சம்புத் தீவாம் காண்
பட்சமுடன் பச்சிமத்தை
பகர சந்தி யென்பார் (7)

உத்திரத்தில் ஆல மரம்
ஒன்று நிற்கு மால்அத்தீவு
நத்தினியாம் நாலு தீவும்
நாலுவகை யாயி ருக்கும் (8)

இதைச் சூழ்ந்த தேழுகடல்
ஏழுகடல் ஏழு விதம்
அதைச் சூழ்ந்த தேழுதீவாம்
அதிசயங்கள் பல வுண்டு (9)

தெண்டிரையேழ் கடலுக் கப்பால்
திரண்ட விருள் உலகங்காண்
மண்டுமிரு ளுக்கப் பாலும்
மருவு சக்கர வாளங்காண் (10)

இப்படியே பூ வுலகம்
இதமாக வளர்ந்தி ருக்கும்
செய்ய சீர் காவேரி
செழித்த சோணாட் டன்னமே (11)

குற. வசனம்:

இராச கன்னிகையே பூகோளப் பிரமாணம் இப்படியிருக்கும். அதிலே நாம் பார்த்ததற்குள் நீ கேட்ட தேசங்களும் தலங்களும் வன நதிகளும் அங்கே இருக்கிற வஸ்துக்களும் இது முதலான தெல்லாம் தெரியச் சொல்கிறேன் கேளடியம்மே.

**இரா: க: வசனம்:**

கேளடி குறமாதே, முன்பு நீ பார்த்த தேசங்களெல்லாம் தெரியச் சொல்லடி குறத்தி.

**குற: வசனம்:**

சொல்கிறேன் கேளடி யம்மே!

**தருவு**

**நாடுகள்**

(20) சாளுவம் பர்ப்பரம் குச்சரம் கோசலம்
சாவகம் கேகயம் அம்மே
தாவும் துலுக்கு குடகம் கௌந்திகம் கங்கம்
தன்னிகரில் பாஞ்சாலம் அம்மே

மாளவம் கலிங்கம் ஒட்டியம் சிங்களம்
வங்கம் விதர்ப்பங்க ளம்மே
மன்னிய கங்கம் கொல்லம் மராட்டம்
திரி கூடங்க ளம்மே

மச்சம் கல்யாணம் திரிலிங்க முச்சீனம்
மக்கா மலையாளங்க ளம்மே
அங்கதம் முதலான ஐம்பத்தாறு தேசம்
அதிசயமாகவே கண்டு ஐயன்
சகசேந்திர னாளும சோழதேசத்தை
அன்பாகப் பார்க்கநான் வந்தேன்

**இரா க. வசனம்:**

கேளடி குறப்பெண்ணே, நீ சொன்ன தேசங்களெல்லாம் கேட்டு மகா சந்தோஷமாச்சு. நீ எந்தெந்த மலைகளைப் பார்த்தாய், சொல்லடி குறத்தி.

**குற. வசனம்:**

சொல்கிறேன் கேளடி அம்மே.

### தருவு

### மலைகள்

21 சிங்கமலை கரந்தமலை
சின்னமலை பன்றிமலை
வங்கமலை தங்கமலை
சதுரமலை பொதியமலை — அம்மே

சக்கிரமலை காந்தமலை — நல்ல
சையமலை அம்மே
குடகுமலை உக்ரமலை
கோணமலை ரத்னம்
ஓங்குமலை விந்தியகிரி — இன்னும்
ஒருகோடி யுண்டுமலை — அம்மே

இவையெல்லாம் நான்கண்டு
மன்னன் சகசேந்திரன் — ஆளும்
சுவாமி மலைதன்னைப்
பார்க்க வந்தேனடி யம்மே

**இரா. ஊ. வசனம்**

ஆனால், கேளடி குறத்தி, இருக்கிற மலைகளெல்லாம் அனேகமாகப் பார்த்தேன் என்று சொல்கிறாய். மகா சந்தோஷமாச்சு. அவற்றிலே என்ன என்ன வஸ்துக்கள் உள்ளன சொல்லடி குறத்தி.

**குற. வசனம்:**

சொல்கிறேன் கேள் அம்மே.

### தருவு

### வஸ்துக்கள்

22 சிகர மெல்லாம் மேகம்வந்து
தினம் தினமும் தவழும்

செய்யும் சுனைதான் நிறைந்து
திரண் டருவியும் பாயும் (1)

அகில் நாவல் பலா விளா
அருங் கமுகு வாழை
ஆச்சா மாமரம் வன்னி
அரியசுர புன்னை (2)

மூங்கில்செஞ் சந்தனம் தேக்கும்
முதிய மரா மரமும்
முதிர்தீப மரமும் மிளகும்
மொழிந்த ரோம விருட்சம் (3)

வேங்கை கருங்காலி புன்னை
விருட்ச வகை யின்னும்
வேண்டிய தெல்லாம் கண்டேன்
மின்ன னார்க கரசியே (4)

விசயன் சக சேந்திரன்
ஆளும் சோழ தேசத்தில்
அதிக தென்னை மரமும்
அழகான செண்பகமும் (5)

நீள்மலர்ச் சோலைகளும்
சாலைகளும் நிறையும்
நேர்த்திதனைக் காணவந்தேன்
நேர் விழியார்க் கரசியே (6)

**இரா. க. வசனம்:**

கேளடி குறத்தி, நீ சொன்ன விருட்சங்கள் எல்லாம்கேட்டு, சந்தோஷமாச்சு. அங்கே என்ன என்ன மிருகங்கள் உண்டு சொல்லடி குறத்தி.

**குற. வசனம்:**

ஆனால் சொல்கிறேன், கேளடியம்மே

(23) **தருவு**

சிங்கம் மதயானை மிஞ்சுங் கரடி
கருங் குரங்கும்
சின மிருகம் வரி வேங்கை
தினம் தினமும் கண்டு

துங்கன் சகசேந்திரன் ஆளும்
வேதவனம் தனிலே
துய்ய மான் பன்றி முயல்
தொடர்ந்து பார்க்க வந்தேனடி யம்மே 2

**இரா. க. வசனம்:**

கேளடி குறத்தி,நீ சொன்ன மிருகங்களெல்லாம் கேட்டேன், அங்கே என்ன என்ன பட்சிகள் உண்டு. அவையெல்லாம் தெரியச் சொல்லடி குறத்தி.

**குற. வசனம்:**

சொல்கிறேன் கேளடியம்மே

**தருவு**

(24) **பறவைகள்**

பச்சைக் கிளியு முண்டு
பச்சை மயிலு முண்டு
பச்சைப் புறா வுண்டு
பாரா வசுண முண்டு

இசைக் குயிலு முண்டு
இராசாளி வல்லூறுடன்
இனிய கேகய முண்டு
கண்டபே ரண்ட முண்டு

சக்கர வாக முண்டு
வெள்ளைக் கிளியு முண்டு
தண லுண்ணும் பட்சி யுண்டு
தழைத்த யிருவி யுண்டு (3

மிக்க கருங்கிளி உமாபட்சி
யன்ன முண்டு
மின்னே தென்ன ளகையிலே
மின்னலார்க் கரசியே (4)

**இரா. க. வசனம்:**

கேளடி குறத்தி, நீ சொன்ன பட்சிவகைகளெல்லாம் கேட்டேன். சந்தோஷமாச்சு அங்கே என்ன என்ன மருந்து வகைகள் உண்டு சொல்லடி குறத்தி.

**குற. வசனம்:**

சொல்கிறேன் கேளடியம்மே

(25)

**தருவு**

**மருந்து**

சமய கரணி சந்தான கரணி
சாந்தமான பாம்பு மருந்து
இமயம் நிறைந்த கருநெல்லிமுதல்
தூயவெள்ளைச் சாரணி யுண்டு

குண்டு விளங்காய் விளக்குக் குளகு
மோகன மரம் நான்கண்ட மருந்து
வேண்டிய துண்டு இன்னம் காவேரி
நாட்டில் வாழ் அரசியே

**இரா. க. வசனம்**

கேளடி, குறத்தி நீ சொன்ன பருந்துவகையெல்லாம் கேட்டு சந்தோஷமாச்சு. அங்கே ரத்ன வகைகள் என்ன என்ன உண்டு, அவையெல்லாம் சொல்லடி குறத்தி.

**குற. வசனம்:**

சொல்கிறேன் அம்மே!

**தருவு**

**ரத்நங்கள்**

26) மலையில் இல்லாத வஸ்துவும்
நாட்டி லுண்டோ
அலையில் அமுதமே அன்னமேஎன்
சொர்ணமே 1

ஆனையில் முத்து முண்டு
கமுகினில் முத்து முண்டு
வானுலாவிய மூங்கில்மேல் எழும்
முத்து முண்டுங் காண் 2

நாகத்தின் முத்து டனே
வராகத்தில் முத்து முண்டு
நாகரீக மாகிய நவரத்தி னத்தில்
முத்து முண்டுங் காண் 3

**இரா. க வசனம்:**

கேளடி குறத்தி, நீ சொன்ன ரத்ன வகைகள் எல்லாம் கேட்டுச் சந்தோஷமாச்சு. நீ பார்த்த நதிகள் என்ன என்ன உண்டு. அவையெல்லாம் சொல்லடி குறத்தி.

**குற. வசனம்**

ஆனால் சொல்கிறேன் கேளடியம்மே,

## தருவு

### நதிகள்

27) மந்தாகினி யமுனை
பம்பாநதி முகரி
சிந்துநதி தாமிரபரணி
சந்திர படாகை பிரயாகை 1

கோதா வரிதேவி சரயுநதி
பரத்துவாசி கங்கை
கௌதமி வேணி
கௌசிகை சங்க வாகினி 2

கோமதை நர்மதை
பிங்களை துங்கபத்ரி
கோணாத்ரி கம்பை
பெண்ணை பாஞ்சாலி 3

சூர்ணி வைகை
மணிகர்ணிகை ஞானநதி
வாணிநதி கங்கைநதி
பாலிநதி நம்புகலை
நபிரஞ்சனி கோணை
மந்தாகினி குண்டலை 4

முதலான தீர்த்தங்களோடு கோடானு கோடிகண்டு

துங்கன் சகசேந்திர னாளும்
சோழதேசத்தில் விளங்கும்
துய்ய காவேரியோடு வந்தேன்
அங்குள்ள தீர்த்தங்களில்
அதிகம் இதுவே என்று
அறிந்து கொள்ளடி மானே

**இரா. க. வசனம்:**

ஆனால் கேளடி குறத்தி, நீ சொன்ன நதிகள் கேட்டுச் சந்தோஷமாச்சு. அந்த எந்தத் தலங்கள் பார்த்தாய் சொல்லடி குறத்தி.

**குற. வசனம்:** ஆனால் கேளடி யம்மே!

**தருவு**

28

**தலங்கள்**

சகந்நாதம் காஞ்சி புரம்
சிதம்பரம் காளத்தி
திருப்பதி அகோபிலம் பொன்
திருத்தணி ஸ்ரீரங்கம்
வகையான பதரி வனம்
காசி வடமதுரை
மல்லிகார்ச் சுனம் பழனி
மதுரை பரங்குன்று
சேது கன்யா குமரி
அனந்த சயனம் — அம்மே

செய்ய நவ திருப்பதி
சிவாயம் கதிர்காமம்
பூதலத்தில் உண்டான
புண்ய தலங்கள் — கண்டு
போசல சகசேந்திரன் மகிழ்
பொன்னி வளநாட்டில்

ஐயாறு பூந் துருத்தி
ஆரூர் சீர்காழி

அருமறைக் காடு ஓங்கி
வளமாரும் புகலூரும்

திருக்கடந்தை யிடை மருதூர்
திருப்பனந்தாள் சேறை

செங்காடு பனங்காடு திரு
வெண்காடு நாகை
மருக்குலவும் சோலை மிகும்
தஞ்சை நகர்மேவி
மருவு தெய்வங்களைப் பணிய
வந்தேன் காண் அம்மே

**இரா. க. வசனம்:**

கேளடி குறத்தி, நீ சொன்ன தலங்களெல்லாம் கேட்டு மிகவும் சந்தோஷமாச்சு. உங்கள் சாதி வளப்பம் சொல்லடி குறத்தி.

**குற. வசனம்:**

ஆனால் சொல்கிறேன் கேளடியம்மே

**தருவு**

29 குறச்சாதி பெரி தென்று
குலலயம் அறியாதோ
பிறசாதி யென்னென் றாலும்
குறச்சாதிக் கிணையாமோ (1)

ஆமை அரவம் பூனை
அரிய முதலை நண்டு
ஊமன் கூகை யழுங்கும்
ஓங்கும் காகமும் தின்னோம் (2)

ஆனைக் கொம்பால் தினைகுத்தி
அரிசியை யமுதாக்கிக
தேனைக் கலந்து "போ" வென்று
தேக்குடன் ஏப்பமிடுவோம் (3)

வெள்ளி பொன் பரிசமிடோம்
வெள்ளியும் பொன்னும் பூணோம்

துள்ளிய கழுதை தானே!
துளங்க பரிசம் செய்வோம் (4)

சங்குத் தாலியைக்
கட்டுவோம்
சங்கின் ஓலையை
அணிவோம் (5)

சங்குப்பாசி பூனைக்காய்ச்சி
தாவடம் பூணுவோம் — அம்மே
குறத்தி பிள்ளை பெற்றால்
குறவன் காயம் குடிப்பான்
குறத்தி தேடி வந்திட
குறவன் சாப்பிடுவான் காண் (6)

எழுந்த முலையைக் கட்டோம்
இங்கிதமா யெங்களுடைய
கொழுந்தன் மாருடன் கூடிக்
குலாவி இசையோம் (7)

வள்ளியைக் கொண்ட முருகன்
மாப்பிள்ளை யல்லவோ காண்
வள்ளலும் பார்வதியும்
மகிழ்ந்த சம்பந்த மென்றால் (8)

மன்னன் சகசேந்திரன் நாட்டில்
வாழும் தெய்வக் குறவர்தமைப்
பார்க்க வேணு மென்று
தயவுடன் வந்தேனடி யம்மே (9)

குற. வசனம்:

இன்னும் கேளடி யம்மே.

### தருவு

30) தேசக் குறச் சாதியென்றும்
காட்டுக் குறச்சாதி யென்றும்

மலைக்குறச் சாதி யென்றும்
தேவக்குறச் சாதி யென்றும்
இப்படி நாலு வகைக்
குறச்சாதி உண்டடி யம்மே (1)

அதிலே நான் எந்தக்
குறச்சாதி யென்றல்லவோ கேட்கிறாய்?
நான், மலைக்குறச் சாதியடியம்மே!
எங்கள் சாதிவகையெல்லாம்
தெரியச் சொன்னேன்; ஆனால்
சகசேந்திரன் ஆளும் நாட்டில்
வாழும் தெய்வக் குறச்சாதியைப்
பார்க்க வந்தேனடி யம்மே

**இரா. கண். வசனம்**

கேளடி குறத்தி, உங்கள் சாதிவகை கேட்டுச் சந்தோஷமாச்சு. முன்னே நீ யார் யாருக்குக் குறிசொன்னாய்? யார் யார் உனக்கு வெகுமானம் பண்ணினார்கள்? அவையெல்லாம் எனக்குத் தெரியச் சொல்லடி குறத்தி!

**குற. வசனம்:**

ஆனால் தெரியச் சொல்கிறேன் கேளடியம்மே!

### தருவு

31 அங்க தேசததில் வங்க தேசத்தில்
இங்கிதக் குறி சொன்னேன் (1)
அட்டியும் தங்கக் கட்டியும் ரத்னச்
சுட்டியும் அவர் தந்தார் (2)
அச்ச நாட்டில் மச்ச தேசத்தில்
உச்சிதக்குறி சொன்னேன் (3)
ஆடையும் சில மாடையும் குறக்
கூடையும் அவர் தந்தார் 4

கேரளத்திலில் ஆரியத்திலில்
பாரியார்க்குக் குறி சொன்னேன் (5)

தண்டையும் முத்துக் கொண்டையும் தங்கக்
கெண்டையு மவர் தந்தார் (6)

ஒட்டதே சத்தில் அட்டமாதர்க்கு
இட்டமாய்க் குறி சொன்னேன் (7)

ஓலையும் தங்கச் சேலையும்
முத்து மாலையும் அவர் தந்தார் (8)

மகர கேதனர் சகசி பூபதி
வாழும் நாட்டினில் அணங்கே

மனதில் எண்ணிய
குறிகள் சொல்லிநல்

வரிசை வாங்கவும்
வந்தேனடியம்மே (9)

**இரா. கன். வசனம்**

ஆனால் கேளடி குறத்தி, அனேகம் இராசாக்களுக்கெல்லாம் குறி சொல்லி வெகுமானம் வாங்கினேன் என்று சொல்லி வந்தாயே, நான் ஒருகாரியம் நினைச்சிருக்கேன், இந்தக் காரியம் நிலவரமாகச் சொல் குறப் பெண்ணே.

**கு வசனம்;**

ஆனால் கேளடியம்மே, நான், குறி சொல்லும் குறத்திக்குச் செய்யவேண்டிய காரியம் சொல்கிறேன் கேளடியம்மே.

**தருவு**

**ராகம்: ஸ்ரீராகம்**

32 பவளத்தால் கால் நிறுத்தி
பாவிய பந்த லிட்டு

துவளமேல் கட்டுக் கட்டி
துய்யமலர் மாலை தூக்கி (1)

கமுகும் வாழையும் நட்டு
கனத்த இளநீர் கட்டி
குமுகுமு வென்ன மணம்
குலவி நாற்காதம் வீச (2)

தரை மெழுகி நல்ல
சந்தனத்தால் கோல மிட்டுப்
பெருக திரு மெழுகுப்
பிள்ளையார் பிடித்து வைத்து (3)

அருகும் சிரசில் சூட்டி
ஐங்கரனை யாவா கித்து
நறிய மலரும் சார்த்தி
நல்ல சந்தனம் சாத்தி (4)

நூறு தேங்கா யுடைத்து
நுவலும் மந்திரம் சொல்லி
பேருடனே தூப தீபம்
பெருகக் கொடுத்து நல்ல (5)

தாம்பூலம் நிவேதித்துச்
சாலிகை யிரண்டு வைத்து
பூம்பட்டு நாலும் வைத்துப்
பொன்னா பரணம் வைத்து (6)

மனதில் குறி நினைத்து
வணங்கிக் கைகட்டி நின்று
தனக்குக் குறி கேளாய்
சகசேந்திரன் நாட்டணங்கே (7)

**இரா. கண். வசனம்:**

கேளடி குறத்தி, நீ சொன்னாற் போல சகலமும் அனு கூலம் பண்ணியிருக்கிறது. குறி சொல்லடி குறத்தி.

**குற. வசனம்:**

ஆனால் சொல்கிறேன் கேளடியம்மே! நீ நினைத்த காரியம் கூடுகிறது. என் இஷ்டதேவதைகளை நினைத்துக்கொள்கிறேன். நீ பக்தியுடனே தெண்டனிட்டுக் கேளடியம்மே.

## தருவு

(33) வள்ளி நாயகியே
மாணிக்க நாச்சி
தெள்ளிய கருணை
சண்டிகா தேவி (1)

கங்காளி காளி
கௌரி ஓங்காரி
தங்கு பிடாரி
சரசுவதி யம்மே (2)

நீலி மாதங்கி
நிட்களா னந்தி
சூலி பகவதி
துர்க்கா மகேசுவரி (3)

அந்தி வீரனே
ஐயனா ரப்பா
சந்தி வீரப்பா
சாமுண்டி யம்மே (4)

கால பைரவா
காத்தா ரண்ணனே

மூலைவாழ் முனியே
முன்னோடி யப்பா (5)

கொல்லா புரத்தம்மா
குறக் கூடைத் தாயே
உல்லாச மான
உச்சிட்ட கலைபதியே (6)

நன்று நன்றாக
நயந்திடு குறிகள்
ஒன்று ஒன்றாக
உரைத்திடு வீரே (7)

**இரா கன். வசனம்**

கேளடி குறத்தி. உன்னுடைய இட்ட தெய்வங்களைச் சொல்லக்கேட்டுச் சந்தோஷமாச்சு. என்னுடைய கை பார்த்துச் குறி சொல்லடி குறத்தி.

**குற. வசனம்.**

ஆனால் சொல்கிறேன் கேளடியம்மே!

(34) அம்மன் கை பொன்னின் கை
பொன்னான கை
பாக்கிய முள்ள கை
பௌவுசுள்ள கையடி யம்மே

**இராகம் தோடி** **தருவு**

கை பார்க்க வாடியம்மே!
துய்ய பதும ரேகையிது
நல்ல சுவர்ண ரேகை யிது
அங்குச ரேகையிது
தீர்க்கா யுசு ரேகை யிது
சங்குசக்கர ரேகை யிது
திகழ் தானிய ரேகையிது

புத்திரேகை யிது
மச்ச ரேகையிது இளம்பூவே
நல்லார் பணிவர்
வித்தியா ரேகையிது
ஜய ரேகையிது
மெத்தவும் நல்லது காண்
லோக நாதன் உன்னைச்
சேர்வான் சொன்னேன்
ஒருகாலும் பொய்யாது
நாகரிக மோங்கி வளர்
சோணாட்டில்
வாழ ணங்கே.

**இரா. கன். வசனம்**

ஆனால் கேளடி குறப்பெண்ணே, நீ சொன்ன ரேகை வகை கேட்டுச் சந்தோஷமாச்சு. இது எனக்கு நிலவரமாகத் தெரிவதற்கு நான் நினைத்த காரியம் இன்னதென்று அடையாளமாகச் சொல்லடி குறத்தி.

**குற. வசனம்:**

ஆனால் சொல்கிறேன் கேளடியம்மே.

*35* **தருவு**

ஒன்றே இரண்டே மூடே நாலே
ஒன்றொன் றாகச் சொல்லடி
வண்டாரும குழ லம்மையே எங்கள்
வள்ளி நாயகி யம்மையே
கண்ணல்ல வயிறல்ல தோளல்ல
வேறுண்டு சொல்வேன் காண்

வண்ணத் தாலி யிலங்கும்
செம்பொன் மணிக் கழுத்தை
நினைத்தா யம்மே நீ
நினைத்தபடிக் கெல்லாம் வந்து
நேருங்காண் அம்மே
நான் உரைத்தது நல்லது
காவேரி நாட்டில்
வாழும் மின்ன ணங்கே
மாமன் என்றால் கண்ணு-உடன்
பிறப்பென்றால் தோள்
குஞ்சென்றால் வயிறு
அமுக் கென்றால் கழுதது-இதிலே
நீநினைத்த காரியம்
எந்தக் காரிய மெப்படிக்கொத்த காரியம்
என்று நீ கேட்கிறாய்
இப்படிக் கொத்த
காரிய மடி யம்மே

**இரா. கன்: வசனம்**

கேளடி குறமாதே. நீ சொன்ன குறிவகையெல்லாம் கேட்டு மெத்தச் சந்தோஷமாச்சு. நான் நினைத்த நாயகன் எப்படிக் கொத்த நாயகன், எந்த வடிவுள்ளவன் சொல்லடி குறத்தி.

**குற. வசனம்:**

சொல்கிறேன் கேளடி யம்மே.

## இராகம்: ரேவகுப்தி

### தருவு

36 அடையாளம் கேளடி யம்மே
உண்மையாய்ச் சொல்வேன்
கடலாரமுதமே தென்
காவேரி நாட்டணங்கே

சியாமள மான மேனியான்
கமலம்போல்
பூமன்னர் பணி தாளினான்

தளிரைப் போலக் கோமளம்சேர்
கையினான்
குளிர் சந்திர முகத்தினான்

பொன்னின் மலை நேர் புயத்தினான்
மந்தகாசம் செய்
மன்யன் விசால லோசனன்

கிளிமூக் கென்ன மின்னும்
கூர் நகத்தினான்
இன்னார்க் கெல்லாம் பாஞ்சாலன்

புருவம் வளைத்த வில்லனான்
விசாலமாக
மருவும் லலாட முள்ளவன்

பவளம் போல விரவும்
அதரத்தினான்
மின்னே நீ நினைத்தவன்

**இராசகன்னிகை வசனம்:**

கேளடி குறத்தி, இப்படிக்கொத்த அடையாளங்கள் அனேக இராசாக்களுக்கு உண்டு. அதனாலே நீ சொன்ன குறி எனக்கு நிலவரமாகத் தோன்றவில்லை. ஆகவே, அவருடைய தேசமும்

அவருடைய பெயரும், அவருடைய ஸ்தலமும இவையெல்லாம் எனக்குத் தெரியச் சொன்னால் சந்தோஷமாக முடியுமம்மே.

குற. வசனம்:

கேளடி மாதரசே, நீ முதலில் கேட்ட குறி மாத்திரம் சொல்கிறதல்லாமல் இவையெல்லாம் சொல்லக் கூடுமா? இப்போது என்னை,வேவுகாரனைக் கேட்பதுபோல கேட்கிறாய். நான், என்னவானாலும் பார்த்து வந்தவளடி யம்மே.

இரா. க. வசனம்:

குறமாதே. இதுமாத்திரம் சொல்லாத போனால் உன் னுடைய தேவதாபலம் எம்மாத்திரமோ?

குற. வசனம்

கேளாய் கன்னிகையே, என்னுடைய திராணை அறிய வேண்டுமென்றா கேட்கிறாய்? என்னுடைய தேவதா பலத்தி னால் இன்னும் நீ என்னென்ன குறியைக் கேட்கிறாயோ அதுவும் இப்போது கேட்ட குறியும் நிலவரமாகச் சொல் கிறேன் கேளடியம்மே.

இராகம்: காம்போதி

தருவு

37 பேருரும் சொல்கிறேன்
பெண்ணமுதே கேளாய்
பேரான காவிரி நாடன் (1)

தாரூரும் திண் புயத்தான்
தஞ்சை நகர்வாழும்
சத்திரபதி எனவந்த போசன் (2)

போசல குலத்தில் வந்த
புண்ணிய விசாலன்
புகழ்சகசி மகாராசன் பேரன் (3)

தேச மெல்லாம் பணியும்
ஏகராசன் மகிழ்
தீபாம் பிகையளித்த பாலன் (4)

மகரகேதன சதுரன்
மண்டலீகப் பெருமாள்
மங்கையர்க் கெல்லா மொருகாமன் (5)

சகல குண சம்பன்னன்
சகசி மகா ராசன்-தையலே
நீ யாசை கொண்ட நாதன் (6)

**இரா. கன். வசனம்:**

குறத்தியே, நீ சொன்ன வார்த்தையைக் கேட்டு மிகவும் சந்தோஷமாச்சு இன்னும் அவருடைய குணாதிசயங்கள் சொல்லடி குறத்தி.

38

## தருவு

கொற்றவேள் சகசி மகிபன்
குணத்தைக் கேளாய்
கொடைக்குக் கர்ணனே நிகராக

கற்ற வித்வஞ் சனங்களுக்கே
கருணை செய்து
கனகம் சொரியும் கையினான்

தியாகராசர் பதம் பணிந்தே
பூசனை செய்து
சபதபமும் புரிகுவோன்

லோக மெல்லாம் தன்னுயிர்போல்
செங்கோல் செலுத்தி
லோக மெல்லாம் காத்தருளுவோன்

பூ மடந்தை தனைப் போலவே
பொறுமை யுள்ளோன்
பொய் சொல்லாத அரிச்சந்திரன்

வீமசேனன் விக்கிரமாதித்தன்
ரண முகத்தில்
வில்லுக்கு விஜயனாவான்

புகழும் அமுத வசனன்
அனந்த குணன்
புகழ என்னால் முடியுமோ

சகல வித்தையு மறிவோன்
சகசி ராசேந்திரன்
சரச குண சம்பன்னன் காண்

**இரா. க; வசனம்**

கேளடி குறமாதே. நீ சொன்ன வார்த்தை கேட்டு என் காதுக்கு அமுதம் தெளித்தாற்போலச் சந்தோஷமாச்சு. நான் நினைத்த சகசி மகாராச தேவேந்திரனுக்கு இன்னும் என்னென்ன சந்தோஷம் உண்டு, அதையெல்லாம் சொல்லடி குறத்தி.

**குற. வசனம்;**

சொல்கிறேன் கேளடியம்மே

39 **தருவு**

இன்னம் இன்னம் வெகு
பாக்கியங்க ளனைத்தும்-தஞ்சை
ஏகராசன் பாலன் சகசி
ராசனுக்கே

பொன்னும் மணியும் பூஷணமும்
துகிலும் மெத்த
புட்ப விமானனுக்குப்
போலவே வளரும் (2)

துங்கமத வாரணமும்
பரியும் படையும்
சோமாஸ் கந்தர்
திருவுளத்தா லோங்கும் (3)

அங்கம் கௌடம் மகதம்
குகுதமென்னும் தேசம்
ஐம்பத் தாறும் இவளை,
வந்து சேரு மம்மே (4)

பல பல தீவும்
கோட்டையும் அரணும்-சீமை
பலவு மிவளைவந்
தடையுமம்மே (5)

வலிமையான அரசரெல்லாம்
பணிவர் நாளும்
வாழும் காவேரி தழையும்
அம்மே (6)

பட்டாபி ஷேக நாயகி
தனக்கும் இன்னும்
பத்தாறு சந்ததிகள்
வளரு மம்மே (7)

தட்டாது நான் சொன்ன
குறியு மம்மே தெய்வ
சாட்சியிது தஞ்சை நாட்டில்
வரும் அணங்கே.

**இராச: க: வசனம்**

கேளடி குறமாதே, நீ சொன்ன வார்த்தை கேட்டு மிகவும் சந்தோஷமாச்சு. அந்தச் சகசிராச தேவேந்திரன் எத்தனை நாளிலே என்னைக் கல்யாணம் செய்து கொள்வான் சொல்லடி குறத்தி.

**குற. வசனம்**

சொல்கிறேன் கேளடியம்மே

40 **தருவு**

அன்னமே வளர்
சொர்ணமே கடல்
அமுதமே இனி-கேளடி (1)

மன்னு கர்விரி
நாடு காவலன்
மகர விருதுடையோன் (2)

போசல குல
ராச சேகரன்
புத்தியா லிசைபெற்ற சீவகன் (3)

ஆசை மாதர்கள்
ஆசை மன்மதன்
ஐயன் சக சேந்திரன் (4)

மூன்று நாழிகை
தன்னிலே வந்து
மோக மாகி விநோத மாகவும் (5)

மூன்று நாழிகையில்
கல்யா ணந்தனை
முடிப்பேன் காண் அம்மே (6)

பாலும் தேனும்
கலந்து உண்ணவே
களிப்புடன் மிக வாழ்வீர் காண் (7)

மாலும் தாமரை
மாது போலவும்
வாழ்க வாழ்க காண் அம்மே. (8)

**இரா. க. வசனம்:**

கேளடி குறத்தி, நீ சொன்ன வார்த்தை கேட்டுக் கர்ணா மிருதங்களாச்சு. பெண்ணே, இதோ வெகுமானம் வாங்கிக் கொள்; பின்னர் சகசி மகாராசன் வந்தால் அவர் கையினாலே வேண்டிய வெகுமானமும் வாங்கிக் கொடுக்கிறேன்.

**சூ. வசனம்**

இந்தப்படிக்குக் குறத்தி சொன்ன வார்த்தைகளால் சந்தோஷம் கொண்டு அவளுக்கு வெகுமானம் கொடுத்துவிட்டு, தன்னுடைய சகியை இராச கன்னிகை, சகசி ராசனிடம் தூது அனுப்புகிறாள். அதன்பின் கதா சம்விதானம் எப்படியென் றால் சிங்கன் நானாதேசங்களிலும் சிங்கியைத் தேடிக் காணா மல் சகசேந்திரன் ஆளுகிற சோழதேசத்திலே இருக்கிறாள் என்று வார்த்தை கேட்டுத தேடிக்கொண்டு வருகிற மார்க்கம்.

41

**உள் தருவு**

**சிங்கன் பிரதேச தருவு**

*(1)*

ஆடவர் திலகனாம் என்னையன்
சக சேந்திரன் நாட்டினில்

பாடிய குறங்கள் பாடிப்
படித்துவிஸ் தாரம் பேசி

நாடிய குறங்கள் சொல்லும்
நங்கை யெங்கள் சிங்கியாரைத்

தேடியே காண வேண்டி
சிங்க னுடனே வந்தானே

(2)

**வெளி தருவு**

சிங்கன் வந்தானே—ஒய்யாரச்
சிங்கன் வந்தானே

மேனி மினுக்கிக் கொண்டு
மீசை முறுக்கிக் கொண்டு

பூனை மிரட்டிக் கொண்டு
புகையுங் குடித்துக் கொண்டு

கூனிக் கூனிக் கொண்டு
குருவிக் கூட்டங்களைக்

கானு கானு வென்று
கருவிக் கொண்டு வந்து 1

துங்கன் சகசி ராசன்
துளங்கும் சோழ நாட்டில்

சங்குப் பாசி களும்
தழையும் ஒட்டிக் கொண்டு

பங்க மான பட்டை
நாமம் தீட்டிக் கொண்டு

சிங்கி தன்னைத் தேடி
எங்கும் பார்த்துக் கொண்டு 2

மேயினுமையே இனம்கூடி மேயினுமையே
சேருதையே பறவைகள் சேருதையே

தூயன் அளகைப் பதிவாழும் மன்னன்
சகசேந்திரன் பொன்னி நாட்டில்

சாயும் திரிக்கையும் தெள்ளியும் கண்ணியும்
சாடி முக்கி முக்கி விக்கி விக்கி

மேயினும்மையே இனம் கூடி மேயினுமையே
சேருதையே பறவைகள் சேருதையே (3)

கூ. வசனம்:

இந்தப்படிக்கு, சிங்கன் வந்து பட்சிகளை வேட்டையாடுகிறான். இப்படி வந்த சிங்கனை, தெலுங்கு, கன்னடம், உத்தராதி மூன்று பாஷைகளிலும் கூப்பிட, சிங்கன் பேசாமல் இருக்கிறான். தமிழ்ப் பாஷையால் 'குறவா நீ யாருடா' என்று கூப்பிட்டால் பேசுவானோ?

கூ. வசனம்

குறவா, நீ யாரடா?

சிங்கன். வசனம்

இப்போதான் ஒரு பூனையைக் குத்தித்தின்னுப் போட்டு வந்தேன்.

கூ. வசனம்

பூனையல்ல! நீ யாருடா?

சிங். வசனம்

எங்கள் கழுதைக்குட்டி இத்தனையுண்டு !
(என்று கையால் காட்டுகிறான்)

சூ. வசனம்

கழுதைக் குட்டி யல்லடா, உன் பெயரென்னடா?

சிங். வசனம்

அடே தம்பி, அடேயண்ணே, என்னடா கத்திக்கொண்டிருக்கிறாய்?

சூ. வசனம்

அடே பேரு சொல்லும் பிளாய்!

சி. வசனம்

பேரு பேரு என்கிறாயே, நீ என்ன பொண் கொடுக்கப் போறியா?

சூ. வசனம்:

அட எங்கள் ஜாதியிலே குறவனுக்கு எங்கேனாலும் பெண் கொடுப்பாங்களா? சும்மா நீ இங்கே ஏனடா வந்தாய்?

சி. வசனம்

நீ தான் ஏண்டா வந்தாய்?

சூ. வசனம்

நாங்கள், எங்கள் வவுத்து வளர்ப்புக்கு வந்தோம்.

சி. வசனம்

நானும் என் வவுத்து வளர்ப்புக்கு வந்தேன்

சூ. வசனம்

உன்னை அறியாமல் கேட்டோம், உன் வவுத்து வளர்ப்புப் பார்ப்போம் பிளாய்!

சி. வசனம்

களரி சுத்துவது, முறம் கட்ட, ஓடடப்பானை கட்ட, ஓட்டைச் சட்டி கட்ட, காது கட்ட

சூ. வசனம்:

வாரும் பிளாய் குறவா, எங்க வீட்டிலே பழைய முற மிருக்குது, கட்டிப்போடறயாடா?

சி, வசனம்

பழமுறம் கட்டற தில்லேடா!

சூ. வசனம்

பழைய முறம் கட்டாது போனால் எப்படிக் கொத்தமுறம் கட்டுவாயடா?

சி. வசனம்

புது முறமானால் நன்னா கட்டுவேண்டா! ஐயே!

சூ. வசனம்

அந்தப் புதுமுறம் எப்படிடா கட்டுவாய்?

சி. வசனம்

புதுமுறம் கொண்டுவந்து நல்லா கொத்தி, நல்லா பிச்சி: கவுத்தாலே கட்டிப்போடு வேண்டா ஐயே!

சூ. வசனம்

முறம் கட்டறது கேட்டோமே! கூடை எப்படிடா கட்டறது?

சி. வசனம்:

புதுக் கூடை கொண்டுவந்து சிறுகச் சிறுகக் கொத்தி, பிச்சி, ஒண்ணுசேர்த்துப் போடுவேண்டா;

சூ. வசனம்

கூடை கட்டறதுதானாச்சு! பானை எப்படியடா கட்டறது?

சி. வசனம்:

நல்லா புதுப்பானை கொண்டுவந்து அம்மிலேபோட்டு நல்லா நொறுக்கிச் சீலையிலே போட்டுக் கட்டிப் போடு வேண்டா ஐயே.

சூ வசனம்:

பானை கட்டறதுதான் வெளியாச்சே! காது கட்டறது எப்படியடா பிள்ளையாய்?

சி. வசனம்:

அறுத்த காதிருக்க அறாத காது குறும்பையோடே அறுத்துக் கட்டிப் போடுவேண்டா ஐயே! இந்த நாட்டுக் குறவர் அல்லடா ஐயே? மலையான் குறவனடா ஐயே!

சூ: வசனம்:

மலையான் குறவனென்று சொல்கிறாயே, வேட்டையாடு வாயாடா?

சி. வசனம்:

வேட்டையாடுவேண்டா ஐயே? ஆமைப் பிடிப்பேன், ஆந்தை பிடிப்பேன், கொக்குப் பிடிப்பேன், மான் பிடிப்பேன் பூனை பிடிப்பேன், பறந்துபோன பட்சி பிடிப்பேன் ஏண்டா ஐயே!

சூ. வசனம்:

அடே பறந்துபோற பட்சி, எப்படிடா பிடிப்பாய்?

சி. வசனம்:

கை படாமல் பிடிப்பேன்! இல்லாத போனால் சும்மா இருப்பேன்!

சூ, வசனம்:

இத்தனையும் பிடிப்பேனென்று சொல்கிறாயே, உனக்குக் கையிலே வலையுமில்லே, கண்ணியுமில்லே, எப்படிப் பிடிப்பாயடா?

சி. வசனம்:

சிங்கியை, நாலாதேசமும் தேடிக்காணாமல் [சகசேந்திரன் நாட்டிலே இருக்கிறாள் என்று கேட்டு, சிங்கியைத் தேடிக் கொண்டு வந்தேன் ஐயே! ஆனபடியினாலே கையிலே ஒண்ணும் வரயில்லையடா ஐயே!

சூ. வசனம்:

உனக்கு வலைகள் வேண்டியதெல்லாம் கொடுக்கிறோம், வேட்டையாடப் போவோம் பிளாய்!

சூ. வசனம்:

இந்தப்படிக்குச் சிங்கன் பட்சிகளை வேட்டையாடுகிற மார்க்கம்.

## தருவு

42 மேயினும் ஐயே இனம் கூடி
மேயினும் ஐயே
துய்யன் அளகைப் பதிவாழும் மன்னன்
சுந்தரன் சக சேந்திரன்
பொன்னி நன்னாட்டிலே சாயும் திரிக்கையும்

தெளியும் கண்ணியும் சாடி
மூக்கிமுக்கி விக்கிக் கக்கிக் கக்கி
மேயினும் ஐயே இனம் கூடி

சேருதையே பறவைகள் சேருதையே
பட்டப் பகலில் சேருதையே —
தரணி போற்றும்

சகசி மகிபதி
சததிரபதி வாழும்
தஞ்சை நன் னாட்டிலே

பாரிய கொக்கும்
மடையானும் உள்ளானும்
பத்தி பத்தியாகத்
தத்தித் தத்திக் கொண்டு — சேரு

கூப்புடறார் ஐயே
பொறு பொறு
கூப்புடறார் ஐயே

பூபாரம் எல்லாம்
பொறுக்கும் புரவலன்
புண்ணியன் சகசேந்திரன்
பொன்னி நன்னாட்டிலே

நாட்பா மலாரும்
நறையானும் வக்காவும்
நாடி மெள்ள மெள்ளக்
கண்ணியில் சிக்குதையே
(கூப்புடறார் ஐயே)

சிங். வசனம்

சிக்கிச்சுடா ஐயே!
சிக்கிச்சுடா ஐயே!

சூ. வசனம்

என்னடா சிக்கிச்சு?

சிங். வசனம்

பார மிருகம் சிக்கிச்சு!

சூ. வசனம்:

பூனையாடா? பூனை தானேடா?

சிங். வசனம்:

அல்லடா ஐயே!

சூ. வசனம்:

மானா?

சிங். வசனம்:

அல்லடா ஐயே!

சூ: வசனம்:

ஆனையாடா?

**சிங். வசனம்**

பார மிருகமடா ஐயே! என் பயல் பிடிப் பாண்டா ஐயே!

**சூ. வசனம்**

பின்னே அது என்னடா?

**சிங். வசனம்**

மனிதர் படுத்துக்கொண் டிருக்கிறப்போ ரத்தமெல்லாம குடிச்சுப் போடுமடா ஐயே!

**சூ. வசனம்**

அது என்னடா? மூட்டைப் பூச்சியாடா?

**சிங். வசனம்**

அதுதாண்டா? ஐயே!

**சூ. வசனம்**

போடா பைத்தியக்காரா?

43 **தருவு**

கண்ணியில் சிக்குதையே
பறவைகள்
கண்ணியில் சிக்குதையே

நண்ணும் பரத
நடன பாரீனன்
நாவேந்தர் போற்றிய
சகசேந்திரன் நாட்டிலே (கண்)

தண்ணீர்க் காக்கையும்
புலி நாரையும்
தாராவும் வந்து
சதியை அறியாமல் (கண்)

## வேறு தருவு

விழிக்கிற தையே பறவைகள்
　　விழிக்கிற தையே; — விழி

கொழிக்கும் தமிழுக் கருள்
　　சகசேந்திரன் வாழும்
குளிர் நாட்டிலே வந்து
　　குலாவிக் குலாவி

செழிக்கும் பறவைகள்
　　ரெண்டா, ஒன்றாக
திரண்டு மருண்டு
　　வெகுண்டு தப்பாமல் — விழி

சூ. வசனம்:

இந்தப்படிக்குச் சிங்கன் வேட்டையாடி விட்டுச் சிங்கியைக் காணாமல் புலம்புகிற மார்க்கம்.

44

## தருவு

ஐயோ சிங்கியைக்
　　காணேன்
ஆசை ஒருகாலும்
　　பேணேன்

செய்ய மனம்
　　மெத்த நைவேன்
சிங்கியைக் காணேன்
　　என்செய்வேன்

முத்து முலை
　　கும்ப மாத்திரம்
கொடிய வடிவு
　　போல் நேத்திரம்

வைத்த பல
    மந்திரபல சாத்திரம்
வரு மதில்
    விருது பாத்திரம் —ஐயோ (1)

பல் வரிசை
    யெல்லா முல்லை
பால் மொழிக்கு
    உவமை யில்லை

சொல்ல வந்தால்
    மெத்தத் தொல்லை
சொன்ன தானால்
    உண்டோ யில்லை

எனை யழைத்தே
    தேடி யலைந்தாள்
எனைத் தனித்தே
    எங்கும் பிந்தாள்

தான் நினைத்த
    படி முந்தாள்
சகசி ராசன்
    நாட்டில் வந்தாள் (ஐயோ) (2)

**கு. வசனம்:**

என்னடா குறவா, ஏண்டா மெத்த விசாரப்பட்டுக் கொண்டிருக்கிறாய்?

சிங்கன். வசனம்:

சிங்கியைக் காணேனடா ஐயே! சிங்கியைக் காணேனடா ஐயே!

சூ. வசனம்

சிங்கியைக் காட்டுகிறோம், மருந்து வகையில் என்னவானாலும் அறிவாயோடா?

சி. வசனம்:

நல்ல நல்ல உச்சிதமான மருந்துகளெல்லாம் சொல்றேன் என் சிங்கியைக் காட்டுறாயாடா ஐயே!

சூ. வசனம்:

என்னென்ன மருந்து அறிவாயோடா?

சி. வசனம்:

பொட்டக்கண்ணுக்கு மருந்து அறிவேண்டா ஐயே! செவிட்டுக் காதுக்கு மருந்து அறிவேண்டா ஐயே! வயத்துக் கழிச்சலுக்கு மருந்து அறிவேண்டா ஐயே! கூத்தி மருந்து அறிவேண்டா ஐயே!

சூ. வசனம்:

நீ கெட்டிக்காரண்டா! நல்லாத்தான் கண்டாய்! ஒருத்தனுக்கு வய்த்து தளுமிறது நிறுத்திப் போடறயாடா?

சி. வசனம்:

அரை நாழிகையிலே நிறுத்திப் போடறேண்டா ஐயே! நான் சொன்ன மருந்துகளெல்லாம் கொண்டுவாராயா ஐயே!

சூ. வசனம்:

அவசியம் கொண்டுவாரேன் பிளாய்!

சூ. வசனம்:

ஒரு படி விளக்கெண்ணை கொண்டுவாடா ஐயே!

சூ. வசனம்:

கொண்டு வந்தேனடா

சி. வசனம்:

நாலு நேர்வாளக் கொட்டை கொண்டு வாடா ஐயே !

சூ. வசனம்:

கொண்டு வந்தேனடா ஐயே !

சிங். வசனம்:

நையப் போட்டு அரையடா ஐயே!

சூ. வசனம்:

வவுத்துக் கழிச்சல் காரனைக் காலைப் பற்றி இழுத்து வாடா ஐயே! மல்லாக்கப் போட்டு மாருமேலே ஏறிக்கொண்டு ரெண்டு பேரைக்காலும் கையும் பிடிக்கச் சொல்லுடா ஐயே! மூங்கிக் குழாயிலே வார்த்து வாயிலே கடகட வென்று வாராடா ஐயே! முன்னே நாற்பது வாட்டி கழியும் எண்ணிக்கோ! இனி ஒரு வாட்டி கழிஞ்சா அவன் காது அறுத்துப் போடுடா ஐயே!

கு. **வசனம்:**

சபாஷ்டா, நீ கெட்டிக்காரன் பிளாய்! உன்னைப்போல யார் மருந்து சொல்லப்போறரன்? பொட்டக் கண்ணுக்கு மருந்து அறிவேனென்று சொன்னாயே, அது எப்படி? ஒருத்தனுக்குப் பொட்டக் கண்ணாயிருக்கு. மருந்து சொல்லற யாடா?

சி. **வசனம்:**

உச்சிதமான மருந்து சொல்றேனடா ஐயே!

கு. **வசனம்:**

சொல்லும் பிளாய்!

சி. **வசனம்:**

பச்சைக் கற்பூரம் கொண்டுவாடா ஐயே! ஒரு படி கள்ளிப்பால் கொண்டுவாடா ஐயே. புதுச் சுண்ணாம்பு கொண்டுவாடா ஐயே! நல்ல கண்ணுலே கற்பூரத்தைக் போட்டுக் கட்டுடா ஐயே! பொட்டைக் கண்ணுக்குக் கள்ளிப் பாலும், அந்தப் புதுச் சுண்ணாம்பும் போட்டுக் கண்ணை நல்லா குச்சியாலே கிளறி, அந்த நல்ல கண்ணுலே கட்டிப் போடுடா ஐயே! குறவன் போன மூணாம் நாளிலே கட்ட விழ்த்துப்பாரடா ஐயே! திரட்டி வாசல் திறந்தாப்போல கண்ணு இருக்குமடா ஐயே!

கு. **வசனம்**

பேஷ்! இத்தனை மருந்து சொன்னேயே, கூத்தி மருந்து சொல்லுறாயாடா?

சி. வசனம்:

சொல்றேண்டா ஐயே!

சூ. வசனம்:

அடே, நான் ஒருத்திமேல் ஆசை கொண்டிருக்கிறேன். அவள் நம்மைச் சட்டை பண்ணவில்லை. எப்படியாடா உச்சிதம்? ஒண்ணு சொல்ல வேணுமடா!

சி. வசனம்:

சொல்லுறேண்டா ஐயே! நான் சொல்கிற படியெல்லாம் கேட்கிறாயா?

சூ. வசனம்:

அவசியம் கேட்கிறோம் ஐயே!

சிங்கன்- வசனம்

நொன்றிக்காய் கொண்டு வாடா ஐயே! வேரையெல்லாம் வாங்கிப் போடுடா ஐயே! ரெண்டு வண்டுருட்டிப்பழம் கொண்டுவாடா ஐயே! முள்ளிக்காய் குடுக்கையிலே அடையடா ஐயே! வாயிலே போட்டுக கோடா ஐயே! கூத்தியார் வீட்டுக்குக் குடுகுடுவென்று ஓடு ஐயே! அவள் முகத்திலே உமியடா ஐயே! விளக்கு மாத்துக் கட்டை எடுத்துக்கொண்டு உன் பிறகே வருவாள் ஐயே !

சூ. வசனம்

அடே... நிறுத்தடா...— சிங்கியைப் பாருடா——

சூ. வசனம்:

இந்தப்படிக்குச் சிங்கன், சிங்கியை நினைத்து அவளைக் கண்டு சொல்கிற மார்க்கம்.

(45) தருவு

சிங்கன்:

சிங்கி யக்கா வுன்னை
எங்கே தேடுவது சொல்லாய்?

சிங்கி.

சிங்கி யக்கா என்றாயே
பந்தம் மறந்தாயோ -சிங்கா

சிங்கன்:

சிந்தடிக் காலுக்குத்
தெண்ட னிட்டேனடி -சிங்கி

சிங்கி:

சீமானாய் என்றும் நீ பதினாறாய்
இருடா -சிங்கா

சிங்கன்:

இத்தனை நாள் இப்படியேன்
பிரிந்தாய் - சிங்கி

சிங்கி:

இத்தனை நாளும் நான்,
சஞ்சாரம் செய்தேனடா -சிங்கா

**சிங்கன்:**

கட்டி யணைத்த கை
விட்டு ஓடிவிட்டாயே — சிங்கி

**சிங்கி:**

உன்னைக் கட்டிய ணைத்தகை
விட்டோடப் போமோ -சிங்கா

**சிங்கன்:**

தேடித் தேடி மெத்தச்
சிந்தை கலங்கினேன் -சிங்கி

**சிங்கி:**

உன்னைத் தேடிக் கண்டபின்பு
சிந்தை தளர்ந்தேனே -சிங்கா

**சிங்கன்:**

ஆனால் பிழைத்தேன் எனக்குக்
குறை யென்ன -சிங்கி

**சிங்கி:**

இனி யானால் கிரிகையில்
எல்லாம் அறியலாம் -சிங்கா

**சூ. வசனம்:**

இந்தப்படிக்கு உத்தரப் பிரத்தியுத்தரம் சொன்னபிற்பாடு, சிங்கன் திரும்பவும் சிங்கியைப் பார்த்து உத்தரப் பிரத்தியுத்தரம் சொல்கிற மார்க்கம்

46 **வேறு தருவு**

சிங்கன்:

கொண்டை தனில் கொத்துக் கொத்தாய்க்
குமுறச் சொரிந்த தென்னே — சிங்கியே

சிங்கி:

கொத்துக் கொத்தாய்ச் சொரிநதது
குளிர் முத்துக் குச்சுகாண் — சிங்கனே

சிங்கன்:

நெற்றியில் மின்மினிப் பூச்சிப் போலத்
தொங்குவ தென்னசொல் — சிங்கியே

சிங்கி:

நெற்றியில் மின்மினிப் பூச்சியல்ல
ரத்னச் சுட்டிகாண் — சிங்கனே

சிங்கன்;

காதில் துளைத்து வைத்த கல்லும்
கரடும் இது ஏது — சிங்கியே

சிங்கி:

காதில் வச்சிர ஓலை
கன்னியர் கொடுத்தது காண் — சிங்கனே

சிங்கன்:

மூக்கில் ஒரு பல்லி முட்டை
முழுதாய்த் தொங்குவ தேது — சிங்கியே

சிங்கி:

மூக்கிலது பல்லி முட்டையல்ல
முத்து மூக்குத்தி காண் — சிங்கனே

சிங்கன்:

குறட்டி லெப்போது மில்லாது
குவிந்திடும் வீக்கம் ஏது — சிங்கியே

சிங்கி:

குறட்டில் பாக்க டங்கிய
குணமல்லவோ வீக்கமில்லை — சிங்கனே

சிங்கன்:

கழுத்துப் பளிச்செனவே
காண வந்த விதமேது — சிங்கியே

சிங்கி:

கழுத்தினில் கண்ட சரம்
காணவந்த வேடிக்கை காண் — சிங்கனே

சிங்கன்:

வட்டமுலையைப் பாராமல்
கட்டிவைத்த கூடு இதேது — சிங்கியே

சிங்கி:

வட்டமுலைக் குபுசத்தை
வாங்கி வைத்துப் பார்க்கலாகும் — சிங்கனே

**சிங்கன்:**

தூது வளம் பவளத்துடன்
சங்குபழம் அணிந்ததேன்-சிங்கியே

**சிங்கி:**

தூது வளம் பழமல்ல
துய்யமுத்துப் பவள மல்லோ-சிங்கனே

**சிங்கன்:**

இடை யொடியாமல் அல்லோ
இறுகப்பூண் கட்டிவைத்தாய் - சிங்கியே

**சிங்கி:**

இறுகப் பூணல்ல
இரத்தினமிட்டா ஒட்டியாணமடா - சிங்கனே

**சிங்கன்:**

பொன்னு வண்டு போல
மின்னும் என்ன துகிலை உடுத்தாய்-சிங்கியே

**சிங்கி:**

பொன்னு வண்டு போல் மின்னும்
பொற்சரிகைச் சேலையடா-சிங்கனே

**சிங்கன்:**

காலில் இரண்டு கிடந்து
கலகலப் பேது சொல்வாய்-சிங்கியே

**சிங்கி:**

காலில் சிலம்பு பெண்கள்
பார்க்கத் தந்ததடா - சிங்கனே

**சிங்கன்:**

கூட்டு மாவைக் குழைத்துக்
கிளரப் பூசினதென்ன - சிங்கியே

**சிங்கி:**

கூட்டுமா வல்ல சந்தனக்
குழம்பு மிகப் பூசினேண்டா - சிங்கனே

**சிங்கன்:**

இந்த ஆபரண மெல்லாம்
எவர் கொடுத்ததுதான் - சிங்கியே

**சிங்கி:**

எவர் கொடுத்தது மல்ல
இராச கன்னிகை கொடுத்தது - சிங்கனே

**சிங்கன்:**

ஐயோ உவமை யிட்டால்
அழகு உன்னைப்போ லாரடி-சிங்கயே

**சிங்கி:**

ஐயோ நீ திருஷ்டி செய்தால்
ஆசை சொல்லப் போறேன்காண் - சிங்கனே

**சிங்கன்:**

கோவை யதரத்தில் தந்த
குறிவந்த விதமேது - சிங்கியே

சிங்கி:

கோவைப் பழமென்று கிளி
கோதினது காண் இது — சிங்கனே

சிங்கன்:

கிளர்ந்த கும்ப முலையில்
கிள்ளும் கிழிஇதேது — சிங்கியே

சிங்கி:

கீரிப்பிள்ளை வைத்து விளையாடக்
கிழித்தது காண் சிங்கனே

சிங்கன்:

சத்திரபதி சகசேந்திரன் தன்னைமிகக்
கொண்டாடிக் கொண்டாடிச் — சிங்கியே

சிங்கி:

சத்திரபதி சந்தானம்
தழைத்து ஓங்கிவாழும் காண் — சிங்கனே

47 தருவு

இராகம்: பைரவி

சிங்கன்:
சிங்கி:

கூடி யிருப்போம் வாடி சிங்கி
கொஞ்சிக் கொஞ்சி விளை யாடி
வேடிக்கையாகக் கொண்டாடிக் கொண்டாடி
வித விதமாய்க் களிசிந்து பாடிப்பாடி

சூ. வசனம்:

இந்தப்படிக்குச் சிங்கனும் சிங்கியும் பேசிக்கொண்டு இருக்கிற சமயத்திலே இராசகன்னிகை வந்து, சிங்கியைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்.

இரா. வசனம்:

பெண்ணே, குற மாதே, நீ சிங்கனைக் கூட்டிக்கொண்டு வேடிக்கையாக இருக்கிறாய். எனக்குச் சொன்ன காரிய மெல்லாம் இன்னும் சபலமாகவில்லை. நீ என்ன குறத்தியடி போ.

சிங்கி. வசனம்:

அம்மே, சொல்றேன் கேள் அம்மே! இப்போதே சகசி மகாராசன் வந்து உன்னைக் கல்யாணம் பண்ணிக்கொள் வானடியம்மே. அம்மட்டும் நானும் சிங்கனும் இங்கேதானே இருந்து உங்கள் கல்யாணத்தைப் பார்த்து எங்கள் தேசத்துக்குப் போகிறோம் அடியம்மே.

இரா. வசனம்:

கேளடி குறத்தி, நீ சொன்ன வார்த்தை கேட்டு மிகவும் சந்தோஷமாச்சு. அந்தச் சகசி ராசதேவேந்திரன் என்னை, எத்தனை நாழிகையில் கல்யாணம் பண்ணிக்கொள்வான் சொல்லடி.

சிங்கி. வசனம்:

ஆனால் சொல்றேன் கேளடியம்மே.

48 தருவு

அன்னமே வளர்
சுவர்ணமே கடல்
அமுதமே இனி கேளடி

மன்னு காவிரி
நாடு காவலன்
மகர விருதுடையோன் (1)

போசல குல ராசசேகரன் தன்
புத்தியால்
இசைபெற்ற சீவகன் (2)

ஆசை மாதர்கள்
ஆசைகொள் மன்மதன்
ஐயன் சகசேந்திர தீரன் (3)

மூன்று நாழிகை தனிலே வந்து
மோகமாகி விநோதமாகவும் கல்யாணம்
முடிப்பான் காண் (4)

பாலும் தேனும்
கலந்த தென்ன
வனப்புடன் மிக வாழ்வீர் காண் (5)

மாலும் தாமரை
மாது போலவும்
(வாழ்வீர் காண் அம்மே) (6)

ஆ வசனம்:

அப்புறம் சுதாசம் விதானம் எப்படியென்றால் இராச
கன்னிகை முந்தி, தூதனுப்பின வண்டு, கிளி, அன்னம்

முதலானவை தூது போய், கன்னிகையினுடைய விரக தாபம் சொல்லக் கேட்டு,சகசிராச தேவேந்திரன் சக பரிவாரத்துடனே, வந்து நிலையாக இருப்பதைக் கண்டு சகி. இராச கன்னிகையைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம் பராகு சுவாமி!

சகி. வசனம்:

கேள் இராச கன்னிகையே, குறத்தி சொன்னதுபோல சகசி மகாராச தேவேந்திரன் கொலுவிருக்கிறார். நீ போய் வேண்டிக்கொண்டு சுகத்திலே இருப்பாயாக பெண்ணே!

சூ. வசனம்:

இந்தப்படிக்குச் சகி வசனம் கேட்டு இராச கன்னிகை சகசேந்திரன் வந்து, தன்னைக் கல்யாணம் பண்ணிக்கொள்ள வேண்டிச் சொல்கிற மார்க்கம்.

49

தருவு

என்னைக் கல்யாணம்
பண்ணிக் கொள்ளும் சகசேந்திரா
இதமாக வுன்பாதம்
நம்பி வந்தேன் காண்
கன்னிகை நான், நீரும் வேறொன்றும்
ஆதி யெண்ணா தீர்
நான் காமினி யானேன்
கொங்கை யிரண்டும்
உந்தன் மார்பில் அலங்கரித்திடவே
கூடி விளையாடும்
கும்பிடுவேன் காண்

சூ. **வசனம்:**

இந்தப்படிக்கு இராச கன்னிகை சொன்ன வார்த்தை கேட்டுச் சகசி ராசேந்திரன் சம்மதம் தெரிந்து, சமீபத்திலே இருக்கிற சகிகள் மங்களம் பாடுகிற மார்க்கம் பராகு சுவாமி.

50

**மங்கள தருவு**

நாகரிக மகராச நரபதிக்கு
 வாகையணி யேகராச பாலனுக்கு
மேகநிற மாயனுக்கு
 வித்யாதி காரனுக்கு

போக தேவேந்திரனுக்கு
 சகசி பூபதிக்கு
மகர கேதன போசல
 வம்சனுக்கு

விகடமன்யர் பணியும்
 விசயனுக்கு
திகழ் சாளரங்கள் சூழும்
 தென்னளகை வாசனுக்கு

சகசி மகா ராசேந்திரனுக்கு
 சதுரனுக்கு
சோபனமே சோபனம்
 சோபனமே சோபனம்;

**சுபம்**

# விஷ்ணு சாஹராஜ விலாசம்

## தமிழ் இசை நாட்டிய நாடகம்

தஞ்சை

மராட்டிய மன்னர்

சகசி காலத்துப்

படைப்பு

*கி.பி. 1684—1712*

உ

# விஷ்ணு சாஹராஜ விலாசம்

## தமிழ் இசை நாட்டிய நாடகம்

**நாடகத்தில் வரும் கதை மாந்தர்:**

1. சூத்திரதாரன் — நாடகத்தை அறிமுகம் செய்து விளக்கம் கொடுப்பவன் நாடகம் நடாத்துவோன்

2. கட்டியக்காரன் — நாடகத்தைத் துவக்கி வைப்பவன்

3. ஸ்ரீமகாவிஷ்ணு — பூதேவி, ஸ்ரீதேவி மணாளர். ஸ்ரீவீழிநாத மகாலிங்க சுவாமியை வழிபட்டவர். சகசி மன்னனாக அவதரித்தவர்.

4. பூமிதேவி — ஸ்ரீமகாவிஷ்ணுவின் மனைவி கலிங்கராச புத்திரியாக அவதரித்தவர்

5. ஸ்ரீதேவி — ஸ்ரீமகாவிஷ்ணுவின் மனைவி கலிங்கராச புத்திரியாக அவதரித்தவர்

6. ஸ்ரீ வீழிநாத மகாலிங்கசுவாமி — திருவீழிமிழலைத் தலத்தில் கோயில்கொண்ட சிவபெருமான்

7. கலிங்கராசன் — கலிங்கதேசத்து மன்னன் சகசி மன்னனுக்குத் தன் புதல்வியரை மணம் புணர்த்தியவன்

8. கலிங்க — கலிங்க மன்னனின் புதல்விகள்
9. குமாரிகள் இருவர் — சகசி மன்னனை மணந்தவர்கள்

10. சகசி மன்னன் — தஞ்சை வளநாட்டின் அரசன் ஸ்ரீமகாவிஷ்ணுவின் அம்சமாக அவதரித்தவன்

11. சாரசாக்ஷி — கலிங்க மன்னனின் மனைவி

12. திரிகால ஞானி — சகசி மன்னனைப் பற்றி, கலிங்க ராசனுக்கு விவரம கூறுபவர்

13. சின்னப்பண்டாரம் — திரிகால ஞானியின் சீடன்

14. சகி — கலிங்கராச குமாரிகளின் பாங்கி

**கதை நிகழும் இடம்:** — தஞ்சை, திருவீழிமிழலை

**காலம்:** — சகசி மன்னனின் ஆட்சிக்காலம்

**நாடகம் நிகழ்ந்த இடம்:** — தஞ்சை சகசி மன்னனின் அரண்மனை நாட்டியசாலை

# விஷ்ணு சாஹராஜ விலாசம்

## தமிழ் இசை நாட்டிய நாடகம்

இராகம்—**நாட்டை** தாளம்—**சம்பை**

### தோடய மங்களம்

ஜய பார்வதீ ரமண
ஜய ஜானகீ ரமண
ஜய அந்தக தமன
ஜய மது ஸூதன (ஜய ஜய) 1

ஜய திரிபுர ஹரண
ஜய வேதோத் தரண
ஜய அகிலநுத சரண
ஜய ஜனா பரண (ஜய ஜய) 2

ஜய ரவிசசி நேத்ர
ஜய அகிலநுத பாதர
ஜய பாவன சரித்ர
ஜய ஜகன் மித்ர (ஜய ஜய) 3

ஜய நந்தி வரவாஹ
ஜய அண்டஜ வாஹ
ஜய நித்யோத் ஸாஹ
ஜய சமித தாஹ (ஜய ஜய) 4

**மங்கள தரு**

ரமணீய தியாகேசுனிகி மங்களம் — நித்யமு
மாபாலி தேவுனிகி மங்களம் (1)

கனக வசந்துனிகி கமனீய சரித்ருனிகி
மனஸிஜ ஹருனிகி மங்களம் (2)

சோமாஸ்கந்த மூர்த்திகி சோபன ப்ரதுனிகி
மாமீத தயஜேயு சுவாமிகி மங்களம் (3)

போசலகுல சாஹேந்திர பாஸ்கரகுல தேவுனிகி
மாசிவ தியாகேசுனிகி மங்களம். (4)

**சூத்திரதாரன் வசனம்:**

இந்தப்படிக்குச் சகல தேவதா பிரார்த்தனை பண்ணின ததனந்தரத்திலே காப்புக் கேட்பிக்கின்ற மார்க்கம்.

## விருத்தம்

திருவீழி மிழலை தன்னில் சிவனடி பணிந்து போற்றி
வரவிஷ்ணு சகசி ராச வரவிலா சத்தைப் பாட
அருள்புரி கமலால யம்மன் அளித்தபா லகனா ரூரில்
கருணைசேர் விட்ட வாசல் கணபதி காப்புத் தானே

சூ. விசனம்:

இந்தப்படிக்குக் காப்புக் கேட்பித்த ததனந்தரத்திலே விஷ்ணு சாஹராஜ விலாசம் என்கிற நாடகத்திலே சகல விக்கினங்களும் நிவாரணம் பண்ண, விக்கினேசுவரனைப் பிரார்த்தனை பண்ண விக்கினேசுவரன் வருகிற மார்க்கம்.

## ஸ்ரீ விநாயகர் தருவு

வந்தே சிவஸுதம்
வரத மமரநுதம்
ஸுந்தர குணயுதம்
ஸுப்ரஸன்ன வதனம் (1)

பாசாங்குச தரம்
பணிவர கேயூரம்
மூஷிக வாகனம்
மோதக கரம் (2)

பாலேந்து சேகரம்
பால சிந்தூரதரம்
லாலித பக்தவரம்
லீலயா விக்னஹரம் (3)

சூ. வசனம்:

இந்தப்படிக்கு விக்னேசுவரன் வந்து சகல விக்கினங்களும் நிவாரணம் பண்ணின ததனந்தரத்திலே ஸ்ரீ மகாவிஷ்ணு வீழிநாத மகாலிங்க சுவாமியைச் சேவிக்க வருகிறார் என்று சகலசனங்களுக்கும் எச்சரிக்கக் கட்டியக்காரன் வருகிற மார்க்கம்.

1

## தருவு

பட்ட நாமம் இட்டுக் கொண்டு
பட்டுத் துப்பட்டி கட்டிக்கொண்டு
கட்டியக் கோலும் ஊன்றிக் கொண்டு
கட்டியக் காரன் வந்தானே

சூ. வசனம்:

இந்தப்படிக்குக் கட்டியக்காரன் வந்து சகல சனங்களுக்கும் எச்சரித்த ததனந்தரத்திலே, ஸ்ரீ மகாவிஷ்ணு லஷ்மி தேவி, பூதேவி சகிதராய் வீழிநாத மகாலிங்க சுவாமியைச் சேவிக்க வருகிற மார்க்கம்.

2

## தருவு

விஷ்ணு தேவனும் வந்தானே — கருடன்மீதில்
வேடிக்கை யாக ஏறிக்கொண்டுதானே
அஷ்ட நாகம் குடை பிடிக்க — வைஷ்ணவர்கள்
ஆழ்வார் பாடலைப் படிக்க (1)

தத்பரன் சக்கிரம் பிடிக்க — அருச்சனைசெய்யும்
தாமரைக்கை பரிம ளிக்க
புஷ்பதூளி தேவர் தெளிக்க — லக்ஷ்மிதேவி
பூமிதேவி மனம் களிக்க (2)

துயய மணிதனில் நேர்த்தி — துளசிமாலை
தோள்தனி லணிந் தேத்தி
ஆயிரம் நாமமும் சாந்திக்கொண்டு மிழலை
அம்பிகை நாதரைப் போற்றி (3)

சூ. வசனம்:

இந்தப்படிக்கு மிழலைநாத மகாலிங்கத்தைக் கண்டு நமஸ்காரம் செய்து தோத்திரம் பண்ணுகிற மார்க்கம்.

3

## தருவு

ஆதியான சிவ சங்கரா — புவியில்
அடியார்க் கெளிய சிரீசங்கரா
சோதியாய் வளர் சங்கரா — இந்த
சுயம்பு லிங்கமான சங்கரா (1)

எள்ளுக்கு ளெண்ணைபோல் சங்கரா — உலக
மெங்கும் நிறைந்து வளர்சங்கரா
உள்ளக் கருத் தறியும் சங்கரா — நான்
உகந்து சொல்வ தேது சங்கரா (2

புண்டரிக மலரால் சங்கரா — உன்னைப்
புரிகிறே னருச்சனை சங்கரா
கண்டு ரட்சியு மையா சங்கரா என்றன்
காமித பலன் தாரும் சங்கரா (3)

சூ. வசனம்:

இந்தப்படிக்கு, பரமேசுவர தோத்திரம் பண்ணி லக்ஷ்மி தேவி, பூதேவி இருவரையும் பார்த்து விஷ்ணு சொல்கிற மார்க்கம்.

**தருவு**

நெஞ்சில் நாம்சிவ பூசைக்கு
நியமம் பண்ணினோமது
கொஞ்ச மல்ல இந் நேரமே
கோதைகாள் நீங்கள் (1)

கஞ்ச மல ராயிரம்
கருத்தி லொருமையுடன்
வஞ்சனை பண்ணாமல் கொண்டு
வந்ததைத் தாரும் (2)

சூ. **வசனம்:**

இந்தப்படிக்கு விஷ்ணு வசனத்தைக் கேட்டு ஸ்ரீதேவியும் பூதேவியும் பரஸ்பரம் சொல்லிக் கொள்கிற மார்க்கம்.

5 **தருவு**

எடுத்த பூவைக்
கொடுப்போம் வாமானே

தொடுத்த சிவபூசை
செய்தாக வேணுந்தானே

மடந்தையே மாதவன் வாய்முன் விண்டு
சொன்ன வசனப்படி யிருவரும்
மகிழ்ந்து மெய் துவண்டு (1)

நடந்து தாமரைக் குளத்தைக்கண்டு வண்டு
நறுமலரி லரும்பிதென்ன
நாம் பேசிக் கொண்டு (2)

கண்டவுடன் தண்ணீரை யள்ளிக்—குடித்து
காய மிளைப்பாறிப் பின்பு
களித் திறங்கித் துள்ளி (3)

வண்டு கோதின பூவைத் தள்ளிப்—பார்த்து (4)

மலரப் படாதே யலர்ந்த
மலர்க் காம்பைக் கிள்ளி (5)

ஆசரி தாக்ஷியாகாது—என்று
அங்கை முழங்கை யளவும்
அலம்பின பின் சூது (6)

பேசினா லதுவு மொண்ணாது
தோஷம் பேசா தேயென்று வெகு
பிரிய மாயிப் போது (7)

சூ. **வசனம்:**

இலக்குமிதேவி, பூமிதேவி இருவரும் தங்களுக்குள்ளே பேசிக்கொண்டு விஷ்ணுவைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்

6

**தருவு**

பூ வந்ததையா தேவரீர் சிவ
பூசையைச் செய்ய
கோ விந்த மதுதாரை
கொழிக்குஞ் செந் தாமரைப்—பூ (1)

சமயம் பூக்கொண்டு இனி
யுமக்குத் தாமச மேது
நிமல னான மிழலை
நீலகண்ட னுக்கேற்ற—பூ (2)

வாயி லுண்ணாமலே யன்று
வகையாய் முன் சொன்ன
ஆயிர மலரி லோர்
அணுமாத்திரம் குறையாமல் -- பூ (3)

சூ. வசனம்:

இந்தப்படிக்குச் சொன்ன லக்ஷ்மிதேவி, பூமிதேவி வாக்கியம் கேட்டு விஷ்ணு சொல்கிற மார்க்கம்.

**தருவு**

**இராகம் தோடி**

7 சந்தோஷ மாச்சுதடி மானே — உங்கள்
சாதுரியம் கண்டு யிப்போதுதானே

எந்தனுடைய சொற்படிக்கு
இருவரும் நடந்ததும்
விந்தையாய்ச் செந்தா [மரைப்பூ
மிகக் கொண்டு வந்ததும் (1)

சூ. வசனம்:

இந்தப்படிக்கு விஷ்ணு, இலக்குமிதேவி, பூமிதேவி இருவரையும் பார்த்துப் பின்பும் சொல்கிற மார்க்கம்.

8 **தருவு**

ஒருத்தி மலரைத் தாடி
ஒருத்தி நின்றெண்ணிக் கோடி
விரித்த சடைபின் முடியில் அடியோ
மின்னே யருச்சனை செய்ய (1)

அங்கே யிங்கே சாராதே
அரும் பிருந்தால் தாராதே
திங்கள் வதன மகிழ்ந்து
சித்த மொருமையாய் நின்று (2)

எந்தன் மனது போலே
ஈச னிடத்தி னிலே
அந்தரங்க மாக நாம்நினைத்
தாக வேணு மென்று (3)

சூ. வசனம்;

இந்தப்படிக்கு விஷ்ணு, ஆயிரம் கமலங்கள் நியமம் பண்ணிப் பூசை செய்கிற மார்க்கம்.

**பூசை விதானம்**

ஓம் சிவாயநம: பினாகினே நம:
விஷ்ணு வல்லபாய நம: கைலாச வாஸினே நம:
சாம்ப சிவாய நம:—

சூ. வசனம்:

இந்தப்படிக்கு ஆயிரம் கமலங்கள் அருச்சனை பண்ணுகிற இடத்திலே ஒரு பூக்குறைந்ததைக் கண்டு இலக்ஷுமிதேவியும் பூமிதேவியும் விஷ்ணுவைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்.

9

**தருவு**

பொறுத்தீ ரெனை யெந்நாளும்
கருத்தில் மறவா திருக்கும்
உலகளந்த பெருமாளே கேளீர் (1)

வருத்த மாகவே நாங்களெடுத்து
வந்த பூவிலொரு மலர்
காணோமென்ன செய்வோ மையா (2)

அந்த வாவியில் பூத்து விண்ட
செந்தா மரைப்பூ
ஆயிரத்தில் குறையாம லெடுத்தோம் (3)

எந்த வகையால் மோசம்
வந்ததோ தெரியவில்லை
எங்களை யறிந்து வந்ததல்ல (4)

சூதாகச் செய்வ தெங்கள்
நாதாவுன் மன தறியும்
சோதனையாய் வந்திருக் குதேதோ (5)

ஆதார சுவாமி யுடன்
பாதார விந்தமென்று
அடியோம் நம்பி யிருப்போங்காண் (6)

சூ. வசனம்:

இந்தப்படிக்கு விஷ்ணுவானவர், ஒரு பூவும் குறைந்ததைக் கண்டு வெகு கிலேசத்துடனே, பரமேசுவரனைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்.

10 **தருவு**

பத்து நூறு குறையாமலே
பங்கயப் புயன் கையாலே
இத்தனைநாள் சாத்திக் கொண்டீர்
இன்று சோதனையைக் கண்டீர்

மெத்த வும்மனம் நோமோ
விரத பங்கம் வரலாமோ
சித்தமினி யானென்ன் சொல்வேன்
சிவ சிவ மிழலைநாதா (1)

அரம்பையர் மற்றுள்ள தேவர்
ஆகத்தில் முளைத்து பூவர்
நிரம்ப யிவரெல்லாம் தோன்ற
நின்றுள மகிழ்ந்து காண

விரும்ப நல்லஞானம் தந்தாய்
மிக்க மெய்யாக யிருந்தாய்
திரும்ப யேனிப்படிச் செய்தாய்
சிவ சிவ மிழலைநாதா (2)

ஏவல் செய்ய மனையாட்டி
என்றிரு பேதையைக் காட்டி
பூவள மாகவே கொய்து
பூசைக்குத் தாராது போச்சு

ஆவலாதி யாகி யிப்போ
அலரொன்றை மறைத்தா் யிப்போ
தேவ ரென்னை நகைப் பாரே
சிவ சிவ மிழலைநாதா (3)

பொறுமையைப் பார்ப்போ மென்றன்றோ
உபாயம் செய்தீர்என் சொல்ல
பரியாசம் ஆகும் ஐயா
பாதத்தி லருச்சனை செய்ய

இருவிழியினி லொன்றிப்போ
திடந்து சாத்து மென்னை
திருவுளம் மகிழ்ந்தால் போதும்
சிவ சிவ மிழலைநாதா (4)

சூ. **வசனம்:**

ஆயிரம்பூக்களில் ஒரு பூக் குறைந்தது **கண்டு** விஷ்ணுவும் விசாரத்தை அடைந்து, அந்தக் கமலத்துக்கும் சரியாக, தாம் ஒரு நேத்திர கமலத்தைச் சாத்துகிறோம் என்று எண்ணு வதற்குள் விஷ்ணுவுக்கும் இலக்குமிதேவி, பூமிதேவிக்கும் உத்தரம் பிரத்தியுத்தரம் நடக்கிற மார்க்கம்.

11 **சம்வாத தருவு**

இலக் —பங்கய மலர் நாங்கள்
பறித்து வந்த போதே
எங்கள் மேல் தப்பிதம்
இருக்கு தையா சுவாமி

பூமி இருந்தா லென்ன வெல்லாம்
ஈசன் மார்க்க மிதுவே
இது தெரிந்தே யிருக்கு
தினி செய்வ தென்ன (2)

இலக் செய்வ தேது வொரு
செந்தா மரை மலர்க்கு
மெய்விழி மலர் தாரோம்
வாங்கியே நீர் சாத்தும் (3)

பூமி சாத்த நியாயம் விழியே
தானெனக் கில்லா விட்டால்
பார்த்த பேர்பரி யாசம்
பண்ணுவ ரத னாலே (4)

இலக். பண்ணின பேர்க ளந்த
பாபத் தைக்கொள்ள வுமே
எண்ண மாகுமே விழி
இடந்து கொள்ளுங்காண் (5)

பூமி: இடந்து சாத்துவ தென்விழி
இவ்விழி யகலா மலே
மடந்தை யவள் விழிசாத்த
மரி யாதை யல்ல (6)

இலக்: மரியாதை சுவாமிக்கு
மனது வர நடந்தால்
பெருமை யெங்கட் குண்டு
பேதக மேது காண் (7)

பூமி: பேதக மென் றோமோ
பெண் கவௌம் விழியை
ஆதர வாக யிப்போது
அருச் சனை செய்வோம் (8)

சூ. **வசனம்:**

இந்தப் படிக்கு விஷ்ணுவும் ஒரு கமலத்துக்குச் சரியாக, தம்முடைய நேத்திர கமலம் சாத்துகிறோம் என்று பக்தி யுடன் உத்யோகம் பண்ணுகிற வேளையில் இவருடைய பக்தியைக் கண்டு பரமேசுவரன் பார்வதி தேவியுடன் சேர்ந்து பிரத்தியட்சமாகிற மார்க்கம்.

சூ. **வசனம்:**

இந்தப்படிக்குப் பிரத்தியட்சமான பரமேசுவரனைப் பார்த்து விஷ்ணு நமஸ்காரம் பண்ணுகிற மார்க்கமும், விஷ்ணுவைப் பார்த்துப் பரமேசுவரன் சொல்லுகிற மார்க்கமும்.

வாயினால் சொன்னது
தப்பாமலே — விஷ்ணுதேவா
எந்தவகை — மோசம் செய்தாலும்
மயங்கா திருந்தாய் விஷ்ணுதேவா (1)

ஆயிரம் பூவில்
குறையாமலே விஷ்ணுதேவா
விழியான பூவொன்றுடன்
அருச்சித்தாயே விஷ்ணுதேவா (2)

துல்லிய மாயுன்னைச்
சொல்ல தெல்லாம் விஷ்ணுதேவா
இந்தச் சோதனைக் கஞ்சாமல்
துணிவ தரிது விஷ்ணுதேவா

மெத்த மகிழ்ந்து
பிறகு வந்தோம் விஷ்ணுதேவா
நீ வேண்டும் வரங்களைக்
கேட்டுக்கொள் மிக விஷ்ணுதேவா (4)

சூ. வசனம்:

இந்தப்படிக்குச் சொன்ன பரமேசுவரனைப் பார்த்து விஷ்ணு தோத்திரம் பண்ணுகிற மார்க்கம்.

*13* **சரண தரு**

சரணம் என் சுவாமி
சங்கரா தேவ சரணமென் — சுவாமி
சரணம் சரணம் சுவாமி
மிழலை நாதா (1)

நினைத்த நியம மீடேற்றி
நிறுத்த வந்தீர் மெய்தோற்றி
புனைந்தீர் சடையி லகத்தி
புலித்தோ லுடுத்திய மூர்த்தி (2)

கலை வல்ல கங்காள
கண் மலர்க் கிசை தாளா
தலைமாலை யணி தோளா
தண் கங்கை மணவாளா (3)

வேத கான லோலா
வெற்றிபெறு திரிசூலா
ஆதார வானந்த சீலா
அடியேனுக் கனு கூலா (4)

**விஷ்ணு** வசனம்,

கேளும் சுவாமி பரமேசுவரா, என் பக்திக்கு மெச்சி வேண்டிய வரங்கள் கேட்கச் சொல்லிக் கட்டளையிட்டீரே, எனக்கு வேண்டியது, எந்நேரமும் உங்களுடைய பாதாரவிந்த அருச்சனை செய்து கொண்டு இருக்கவேண்டியதே, அபிலாஷை யல்லாமல், மற்றவையெல்லாம் நீங்கள் கட்டளையிட்டிருக் கிறீர்களே. அதிலே ஒன்றும் குறையில்லை. எத்தேச காலமும் தங்களுடைய சேவை லபிக்கிறதற்குக் கட்டளையிடும் சுவாமி.

சூ. வசனம்:

அந்தப்படிக்கு விஷ்ணு கேட்டுக் கொள்ளவே பரமேசுவரன் சொல்கிற மார்க்கம்.

பர. வசனம்:

விஷ்ணுவே, நீர் கேட்டபடிக்கு வரம் கொடுத்தோம், ஆனால் சொல்கிறேன் கேளும். இந்தக் கலியுகத்தில் பூலோகத்திலே விஷ்ணு ரூபமாயிருந்து அருச்சித்தால் மட்டும் போதாது. அதற்கு உபாயம் சொல்கிறேன் கேளும்.

14 **தருவு**

ஆனா லினிக் கேளா யிந்த
    அவனிக் கொரு வேளாய்
தேனார் மலர்த் தோளா யொரு
    சன்ம மெடுத் தாளாய் (1)

சிவ பூசையின் மேலே தினம்
    சிந்தை யுனைப் போலே
எவர்செய்வர் என் மேலே வெகு
    இயற்கை யத னாலே (2)

நம் போசல குலத்தில் சோ
    ணாடா கிய நிலத்தில்
சுரர்மேவு தஞ்சைத் தலத்தில்-உரை
    துரையே கேந்திர னிடத்தில் (3)

அவதார யாய்ப் பிறந்தே யதில்
    அதிரூபமாய் வளர்ந்தே
புவி ராசர்கள் அடைந்தே தொழ
    புனை மகுட மணிந்தே (4)

ஆரூர் திரு வையாறு குத்
    தால மிடை மருதூர்
நீடூர் பொய்கை புகலூர் திரு
    நீலக்குடி குடந்தை (5)

திருமங்கலக் குடி மாந் துறை
பனைந்தாள் திருக் கடவூர்
வருமாயுரம் திருப்பாம் புரம்
மறைக் காடுக ளாறு (6)

வேளூர் திருத் துறைப்பூண்டி நல்
வெண்காடு பொன் னாம்பல்
வாளூர் திரு நறையூர் திரு
வாலம் பொழில் வழுவூர் (7)

மாகாளம் செங் காடும் திரு
மருகல் லருங் கொறுக்கை
நாகை திருக் குவளை மிக
நலஞ் சேரு மணைந்தே (8)

சாமி மலைநன் நீல மலை
வீழி மிழலை முதலா
வெகு வாலய மெல்லாம் சிறப்
பாக வினி திருந்து (9)

திருநாள் களும் நடத்தித் தினம்
மறக்காமலே துதிப்பாய் இந்த
வரம் நல்கினோ முரைப்பாய் புகழ்
விஷ்ணு தேவா (10)

**விஷ்ணு** வசனம்:

சுவாமி, தாங்கள் எப்படிக் கட்டளையிட்டீரோ அந்தப்படி நடந்துகொள்கிறேன். தங்கள் தங்கள் சேவை லபித்ததே லாபம்.

பரமேசு. வசனம்:

கேளும் விஷ்ணு தேவா, இந்தச் சங்க சக்கிரங்களைக் கைக்கொண்டு துஷ்ட நிக்கிரக-சிஷ்ட பரிபாலனம் பண்ணிக் கொண்டு எந்நேரமும் சுகத்திலே இருப்பீராக.

விஷ்ணு. வசனம்:

சுவாமி, தாங்கள் எப்படிக் கட்டளையிட்டீரோ, அந்தப் படி நடந்துகொள்கிறேன். தங்கள் சேவை லபித்ததே லாபம். துஷ்ட நிக்கிரகமும் சிஷ்ட பரிபாலனமும் தங்களுடைய ஆக்ஞையினால் அல்லவோ. அதற்குள்ளே தங்களுடைய செந்தாமரைக் கையினாலே தொட்டு சங்கமும், சக்கரமும் கொடுத்தீர்களே, அதனாலே திரைலோக்கிய சயம் பண்ண லாம். தங்களுடைய சேவகனுக்குக் குறையென்ன?

சூ. வசனம்;

இந்தப்படிக்கு விஷ்ணு சொல்லிவிட்டு, பரமேசுவரன் கட்டளைப்படி, போசலகுலத்திலே ஏக மகாராசாவின் பட்ட மகிஷியான தீபாம்பிகா குமாரனாக அவதரிக்கச் சித்தம் கொண்டார்.

இதன் பின்னர் கதா சம்விதானம் எப்படியென்றால் இலக்குமிதேவியும் பூமிதேவியும், பரமேசுவரனைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்.

இலக்-பூமி வசனம்:

பரமேசுவரா, விஷ்ணு தேவருக்கு அப்படிக் கட்டளை யிட்டீர்களே, எங்களுக்கு என்ன கட்டளையிடுகிறீர்கள்?

பரமே. வசனம்:

உங்களுக்கு விஷ்ணு வல்லாமல் வேறு பர்த்தா இல்லையே. அதனாலே, விஷ்ணு சூரிய வமிசத்திலே போசல குலத்திலே அவதரித்தால் நீங்கள் இருவரும் சந்திர வமிசத்திலே, கலிங்க ராசனிடத்திலே கன்னிகைகளாய்ப் பிறவி எடுங்கள்.

'ந:விஷ்ணு பிருதி வீபதி' என்றிருக்கிறதே அதனாலே அங்கே பிறந்திருக்கிற விஷ்ணுவுக்கும் உங்களுக்கும் கல்யாணம் பண்ணி விடுகிறோம் சுகமாக இருங்கள்.

சூ. வசனம்:

இந்தப்படிக்கு, விஷ்ணுவுக்கும் இலக்குமிதேவி, பூமிதேவி இருவருக்கும் வரங்கள் கொடுத்து, ஈசுவரன் சோழ மண்டலத்திலே அந்தந்த ஸ்தலங்களிலே விஷ்ணு அவதாரமான சகசி மகாராசர் கையினாலே அருச்சனை கொள்ள வேண்டி எழுந்திருந்தார்.

அதன்பின் கதா சம்விதானம் எப்படியென்றால் பரமேசுவரன் கட்டளையிட்டபடிக்கு, விஷ்ணுவும், சூரிய வமிசத்தில் போசல குலத்திலே ஏக மகாராசாவுக்குப் பட்டமகிஷியான தீபாம்பிகா கர்ப்ப சுதா சாகரத்திலே இருந்து, சந்திரன்போல உதித்து சகசி மகாராச தேவேந்திரனாகிற பெயரைக்கொண்டு கரகலித சங்க சக்கிரராகி சர்வம் சகசக்கிரத்துக்கு ஏக சக்கிராதிபதியாகி, சமஸ்த தர்மங்களுக்கு ஆதாரமாகிச் சிவாலயங்களுக்கு அருச்சனை மகோத்சவாதிகள் நடத்திக் கொண்டிருக்கிறார் என்று முன் சொன்னபடிக்கு இலக்குமி தேவி பூமிதேவி இருவரும், சந்திர வமிசவான கலிங்கராசனிடத்திலே கன்னிகை ரூபமாய்ப் பிறந்தாள். அவள் பிரவுடையானாள் என்று

கல்யாணம் பண்ண வேண்டி ஆலோசனை பண்ணுவதற்குக் கலிங்க ராசன் தன்னுடைய ஸ்ரீசமேதனாகத் தன் சபைக்கு வருகிற மார்க்கம், பராக்கு!

15

## தருவு

கலிங்க ராசனும் வந்தானே
மனைவி யுடன் — கலி
கலிங்க ராசன் தன்னைக்
கருநாடகர் பாஞ்சாலர்
தெலுங்கர் கூபகர் வங்கர்
சீனர் பணிய வல்ல — கலி (1)

வாணர் கவிதை படிக்க விளங்கு சக்கிர
வாளக் குடை பிடிக்க
தோரண முரச சடிக்க
துலுக்கர் காலைப் பிடிக்க
காணா யிடை துடிக்க
கன்னி யர்கள் நடிக்க — கலி (2)

சூ. வசனம்:

இந்தப்படிக்குக் கலிங்கராசன் வந்து கொலுவிருந்து, தன்னுடைய மனைவி ஸாரசாட்சியைப் பார்த்துக் கல்யாண ஆலோசனை பண்ணுகிற மார்க்கம்

16

## தருவு

யோசனை சொல்லு நீ
சார சாட்சி நீ
யோசனை சொல்லு

யோசனை சொல்—இந்த
லோகந் தனி லுள்ள
தேச மதனி லெந்த
தேச மன்ன ரதிகம் யோ 1

அஞ்சுகம் போல் பெண்கள்
அரச னுடன் மகிழ்ந்து
பஞ்சணை மேல் சேரப்
பக்குவ மானார் — யோ 2

ரு. வசனம்:

இந்தப்படிக்கு இராசாவும் இராச பத்தினியும் எந்த இராசாவுக்குக் கல்யாணம் பண்ணிக் கொடுப்போம் என்று ஆலோசனை பண்ணுகிற சமயத்திலே இது அறிந்து பூர்வோத்தரம் சொல்ல. பரமேசுவரன் ஆக்ஞையினாலே திரிகால ஞானி வருகிற மார்க்கம்

17

## தருவு

விரித்த சடையும்
புலித்தோ லாடையும்
வெண்ணீ றணிந்த
மெய்யு மாகித்
திரித்து சப
தாவடமும் கொண்டு
திரி கால
ஞானி வந்தனனே

சூ. வசனம்

இந்தப்படிக்குத் திரிகால ஞானி வந்து கலிங்க ராசாவுக்கு ஆசிகூறிச் சொல்கிற மார்க்கம்.

திரி வசனம்

சிந்தித மனோரத சித்திரஸ்து!

கிடைத்தது; கிடைத்தது கேள், இராசனே! கலிங்க ராசாவே, உன்னுடைய முகம் பார்த்தால் வெகு ஆலோசனை யோடியிருப்பதுபோல் தெரிகிறது.

சூ. வசனம்:

பண்டாரம், நீ எங்கேயிருந்து வந்தாய்?

தி, வசனம்:

நாம் ஹிமோத் பர்வதத்தில் தான் சதாகாலம்!

சூ. வசனம்:

உம்முடைய பெயர் சொல்லும்

தி. வசனம்:

நம்முடைய பெயர் திரிகாலஞானி என்று சொல்வார்கள்

சூ. வசனம்

திரிகாலஞானி என்பதற்கு விபரம் எப்படி?

தி. வசனம்:

பிராதக் காலம, மத்யான்ன காலம், சாயங்காலம், நிராகரம்

**சூ. வசனம்:**

திரிகால ஞானிகளே, பரமேசுவரன் மீது தேவாரம் ஆனந்தக்களிப்பு வருமா உமக்கு?

**தி. வசனம்:**

சகல வித்தையும் நம்மிடத்திலே உபதேசம். தேவாரம். திருச்சிற்றம்பலம், என் வாயில் தம்பலம்.

18 **திரிகால ஞானி: தருவு**

வாசி தீரவே
காசி நல்கினீர்
மாசில் மிழலை யீர்
ஏச லில்லையே (1)

தாழ்விலா மலர் தரும் வனத்தினில்
வாழு மாமுனி வோரை மயக்கிய
ஆழியான் தின மருச்சனை யேசெய
வீழி மாநகர் மேவு மண்ணலே (2)

நேசமாகவே
தோசை மீதினில்
ஆசை யாகினேன்
காசு இல்லையே
தாயும்நீ தந்தையும்நீ
உறைவாயும்நீ—இந்த
மாயச் சடலம்நீ
வேயமர்ந்திடும்
தோளி மேவி வாழ்
தூய வீழி நகர்
துலங்கிடு மீசனே

19

## ஆனந்தக் களிப்பு

ஆதாரம் வேறில்லை யையா
வீழி நாதா வுன்
பாதத்தை நம்பினே னையா

அன்று புரமெரித் தோனே — கொன்றை
அம்புலி திகழ் அரவணிந்தோனே (1)

மன்றல் கமழ் சடையோனே — கலைமான்
மழுவேந்திய வரிசை யுள்ளோனே
வெள்ளை விடை யுடையோனே — காலன்
மெய்யும் நடுங்க விலாவி லுதைத்தோனே
பிள்ளைக் கறியை யுண்டோனே — தொந்திப்
பிள்ளை முருகனைப் பெற்றெடுத்தோனே (2)

மதகரியை யுரித்தோனே — அன்று
வாதாடிய காளி மறமழித்தோனே
நதியைச் சிரசில் வைத்தோனே — அரி
நான்முகன் தேடியரிதான வல்லோனே (3)

அஞ்செழுத் தாக நின்றோனே — நஞ்சை
அமுதமாக வெண்ணி அள்ளியுண்டோனே
பஞ்சசரனை எரித்தோனே — ஆரூர்ப்
பரவைக்குத் தூது பறந்து சென்றோனே (4)

20

## வேறு தருவு

சிவனைப் பணியாய் மனமே — மெத்தக்
கவலையை விட்டுக் கருதத் — தினமே
சிந்தையில் சஞ்சலம் தீர — நல்
செங்கம லப்பெண் திருவருள் — உள்ளார
வந்தென் னிடத்தினில் சேர — சென்டு
மார்க்கண்டன்போல வாழும் — ஒய்யார
இனியெமக்கு நன்றா யிருக்க - மேலும்
இனிநர சன்ம மெடாமல் களிக்க (5)

சூ. வசனம்:

இந்தப்படிக்குத் திரிகால ஞானி பாடியபோது சின்னப் பண்டாரம், அங்கே வருகிற மார்க்கம்.

சூ. வசனம்:

ஏ, சின்னப் பண்டாரம், எங்கேயிருந்து வந்தாய்?

சி ப:

அந்த இடுக்கிலேயிருந்து இந்த முடுக்கில் புறப்பட்டேன்

சூ. வசனம்:

உன்னுடைய மடம் எங்கே ?

சி.ப,

சோத்துப் பானை யண்டையிலே

சூ. வசனம்:

உன் மடம், உன்னுடைய பேரு என்னடா ?

சி.ப.

நம்முடைய பேரு குட்டிப் பண்டாரம்

சூ. வசனம்:

உனக்கு சுவாமி பேரிலே பாட்டுக்கள் வருமா ?

சி.ப.

சகல வித்தைகளும் நம்மிடத்திலேதான் இதோபதேசம்,

சூ. வசனம்:

பாட்டுப் பாடடா !

சூ. வசனம்:

இந்தப் படிக்குச் சின்னப் பண்டாரம் பாடுகிற மார்க்கம்.

**தருவு**

21 நேச மாகவே
தோசை மீதினில்
ஆசை யாகினோம் — ஒரு
காசு மில்லையே

சூ. வசனம்:

பளா, பளா மெத்த நன்றாயிருக்கிறேதே !

**தருவு**

22 காவியமும் கணக்கும்
சொல்லும் சொற்கட்டும்
இசையும் தொங்கலும்
மெத்த நன்னாச்சு (1)

பச்சை மீனுக்கும்
மொச்சைக் கொட்டைக்கும்
இச்சை யாகினோம்
எவர்தரு வார்களோ (2)

ஆண்டி யாவது
குடுமி யில்லாதவன்
தோண்டி யாவது
குசவன் வீட்டிலே (3)

பாண்டி யாவது
    மதுரை தேசந்தான்
பூண்டி யாவது
    திருத்துறைப் பூண்டியே (4)

பிச்ச னாவது
    தருமங்கள் செய்யாதவன்
கொச்ச னாவது
    ஒன்றும் கொடாதவன் (5)

தச்ச னாவது
    மரவேலை செய்பவன்
துச்ச னாவது
    பிச்சை யெடுப்பவன் (6)

அந்தை யாவது
    காலி லணிவது
மொந்தையாவது
    கள்நீர் குடிப்பது (7)

சந்தை யாவது
    கூட்டம் கூட்டுவது
கந்தை யாவது
    சருகு தெரிந்ததா? (8)

**வேறு**

23 ஆண்டிப் பயங்க ளெல்லாம் கூடி—மெள்ள
    அந்த மாயப் புற—வேசியை நாடி (1)

வேண்டிக் கொண்டான் சுரதம் தேடி—அந்த
    வேசி யுருவத்தில் ஆசைப் பாட்டுப் பாடி (2)

கண்ணாரப் பெண்ணொருத்தி
    என்னைக்
கண்டவுடன் கடைக்கண்ணால்
    இருத்தி (3)

பின்னோடே வந்தென்னைத்
    துரத்திப்
பிடித்துச் சப்பை நூறு
    போட்டாள் (4)

இந்தச் சிறுக்கி மெத்தக்
    கள்ளி — ஆனால்
இவளை நம்ப லாகாது
    மாமாயக் கள்ளி (5)

அந்தக் காரியத்தில்
    துள்ளி
முறை மையைத்
    தள்ளி (ஆண்டி) (6)

24 **தெலுங்கு தருவு**

கொப்பனேதி வெண்ட்ருகலுடு முடுசுட
    நிப்பனேதி அண்டக வுண்டுட
வுப்பனேதி ஸமுத்ரான புட்டுட
    பப்பனேதி ப்ராம்முலு புஜியிஞ்சுட (1)

வலயனேதி சாபலு பட்டுட
    அலயனேதி சமுத்ரான பட்டுட
கலயனேதி நித்ரலோ சூசுட
    தலயனேதி பாகலு சுட்டுட (2)

குடுகுடு மணி பாரி கொட்டே
    மூலகூகுண்டி ஒக முத்தீனி பட்டதட்டே
அடக போதே செம்பட்டே
    திட்டி ஆவலபோனீகதலமிநீத மொட்டே (3)

நலுவையின கோகதீஸி சால
நரஸின தொகுருலுன முள்ள வேசி
பில்ல காயல நெல்ல டாசி
பலுபீதி புட்டிஞ்சுரயி ஏப்ராசி (4)

ஆசல பெட்டுரு தொட்டு
ஓரிஅன்ன யிதி விடுலகு வேருவித்து
காஸு தோஸவல எத்து
வாடுகடுஸு காண்டைதேனு காலத்திபித்து (5)

நெர நம்பராது ரதினி
இதி நெர ஜாண தனமுல பீதிமாலினி
வருஸக லோஜேசு கொனினீ — விட்டுல
வஞ்சிஞ்சுர சூடு இலஞ்ச ஸாணி (6)

கோபை திகிஜ காணிகூடு தீனி
குசமுலைதே சுரகாய ஜோடு
ஒப்பு சாயது மோமு ஜூடு — தீனி
ஓரிமாரி நில்லு தம்புனி தோடு (7)

தோகாலி ஏகாலி
கூடுதோ காலி மாடுதோ காலி
குருடு முரிச்சான் யிடுப்பொடிச்சான்
முன்கட்டு பின்கட்டு

சம்பாளி வம்பாளி
அச்சுதம் வுச்சுதம்
தபுசரண பரபுதராண
தோகாலி திருரிக்க யேகாள முருகு

கூடாம் மோடாளம்
குருட்டு மோட்டாளும்
முன்கிலிக்கு கிஞ்சிரிபு
காப்பாளி சப்பாணி

அதபு ஓதபு
அட்டாவ்ரம் திஷ்டாந்தரம்
ஆசனம் குக்குடாசனம் — குக்காசனம்
கர்க்கடாசனம் — மர்க்கடாசனம்

சங்காசனம் — ரங்காசனம்
மயூராசனம் — கியூராசனம்
மச்சாசனம் — கச்ச கருவாடாசனம்
கூர்மாசனம் — கீர்மாசனம்

பத்மாசனம் — சம்மணம்
கூடிக்கொண்டு சோறுதிங்கற ஆசனம்
கபாலாசனம் — மகாராசன் சீமையிலே
திருடியவனைக் கட்டியடிக்கிற ஆசனம்

சூ. வசனம்:

இந்தப்படிக்குச் சின்ன பண்டாரம் பாடிய பின், கலிங்க ராசன், திரிகால ஞானியரைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்.

தன்மம்னதே தானே வளர்க்க — இல்லை
தானண்டின பேர்க்கும் தய — வளிக்க
சுற்றமும் கூட வராது — கேடும்
தொடர்ந்து பின் வராது
நித்தம் நிலவரம் ஈது — என்றால்
நீலகண்டன் பதம் நெஞ்சா யிப்போது

சூ. வசனம்

இந்தப்படிக்குக் கலிங்க இராசன் திரிகால ஞானியைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்,

சூ. வசனம்:

கேளும் திரிகால ஞானியே,நம்முடைய கன்னிகை பிரவுடையானாள்; அவளை எந்தத் தேசாதிபதிக்குக் கல்யாணம் பண்ணுவோம் என்று ஆலோசனை பண்ணுகிறோம் ஐயா!

**தி.** வசனம்:

கலிங்க இராசவே, இதற்கு ஆலோசனை ஏன்? அதன் பூர்வோத்தரம் சொல்லுகிறேன் கேள்!

**சூ.** வசனம்

இந்தப்படிக்குத் திரிகால ஞானி சொல்லவே கலிங்க இராசனும் திரிகால ஞானியும் உத்தரப் பிரத்யுத்தரம் பேசுகிற மார்க்கம்.

25 **சம்வாத தருவு**

திரி. கலிங்க ராசனே உன்
கன்னிகைக ளிருவரும்
துலங்க ஒரு நிமித்தம்
தோற்றினர் காண் (1)

கலிங்க, தோற்றின வகை யென்ன
சொல்லும் சுவாமி — அதற்கு
ஏற்ற யிடத்தில் கொடுத்து
இயற்கை செய்ய (2)

திரி. இயற்கை யென்ன விஷ்ணு
இதனைப் பருகி மெத்த
மயக்கி மருவுவர் உன்றன்
மாதிருவர் (3)

கலிங்க. மாதிரு வரு மென்றன்
வயிற்றில் பிறந்தார் — அந்த
தீத லாத விஷ்ணு
சேதி என்ன? (4)

திரி. சேதி யானால் கேளாய்
திரு வீழி மிழலையில்
ஆதி யரனை விஷ்ணு
அடி பணிந்தார் (5)

கலி: பணிந்தா லென்ன யிப்பாரில்
விஷ்ணு வந்து
துணிந்து நரசன்ம மாய்த்
தோற்றி னாரே (6)

திரி; தோற்றா மலோ இத்தோகை
மார்க ளுமுன்றன்
ஆத்தானம் தனில் வந்து
அவதரித்த தார் (7)

கலி: அவதரித் திருக்கின்ற அரசன்
எந்தத் தேசம்
நவமாய்க் கவடில் லாமல்
நவிலு மையா (8)

திரி: நவிலக் கேளாய் விஷ்ணு
நர ரூபமாய் வெகு
தவபோ சல குலத்தில்
தான் பிறந்தார் (9)

கலி: பிறந்தா லவருக் கிப்போ
பேரென்ன ஊரென்ன
மறந்தோ மென்னா மலே
வழுத்திடு வீர் (10)

திரி: வழுத்தக் கேளாய் தஞ்சைமா
நகரப் பட்டினம்
செழித்த யேக ராசன்
செல்வன் கண்டீர் (11)

கலி: செல்வ ரானா லென்ன
சிங்கா ரமே யுள்ள
கல்வி மானும் இதைக்
கருது மையா (12)

திரி: கருத்தைக் கேளாய் விஷ்ணு
கண்ணை யிடந்து சாத்தி
புருட ரான ரூபம்
புகல்வ தாரே (13)

கலி: புகல வேண்டா மொரு
புத்தி சொல்லு மென்றன்
மகளா ரிருவரையும்
மாலை யிட (14)

திரி: மாலை யிடுவான் விஷ்ணுவான
சகசி ராசன்
காலைப் பணிந்து தாலி
கட்டச் சொல்வாய் (15)

கலி: என் றென்னைச் சொல்ல
வேண்டாம் சுவாமி
எல்லோரு மாகச் சேர்ந்
திசைத் திடுவோம் (16)

**தி. வசனம்**

கேள் கலிங்கராசாவே, உமக்கு ஆலோசனை எதற்கு? அவ்விதமே உடன் வந்து கல்யாணம் பண்ணி வைக்கிறோம். உம்முடைய கன்னிகைகளை அழைப்பித்து வருவாயாக.

**சூ வசனம்**

இந்தப்படிக்கு, திரிகால ஞானி வார்த்தை கேட்டு, கலிங்கராசன் சாரசாக்ஷியைப பார்த்து கன்னிகைகளை அழைப்பிக்கச் சொல்ல, சாரசாக்ஷி சகியிடம் சொல்ல, சகி சென்று கன்னிகைகளை அழைக்க, சகியின் வார்த்தைகளைக் கேட்டு இராச கன்னிகைகள் வருகிற மார்க்கம்.

(26) **தருவு**

மிஞ்சு பரிசனத் தோடும்
விளங்கு கலிங்க ராசன்
தஞ்சை சகசேந் திரன் (1)
சபையில் தானும் வந்தானே

சூ. **வசனம்**

இந்தப்படிக்குக் கலிங்க ராசனும் வந்து நிறைந்த கொலுவிலே யிருக்கிற சகசி மகாராச தேவேந்திரனைப் பார்த்துச் சலாம் செய்து தோத்திரம் பண்ணுகிற மார்க்கம்.

(27) **தருவு**

விஷ்ணு அவதார
சகசிரா சேந்திரா-இந்த
விவர மிவரா லறிந்தேன்
சகசிராச சந்திரா (1)

அஷ்ட திசை போற்றும்
சகசி ராச சந்திரா—இந்த
அரிவைய ரிருவ ரையும்
சகசிராச சந்திரா (2)

பாணிக் கிரகணம் பண்ணிக்கொள்ளும்
சகசிராச சந்திரா—உமக்குப்
பாரியை யாக விருக்க
சகசிராச சந்திரா (3)

பேண யிதைப் பார்க்கில்
சகசிராச சந்திரா
பொருளுடைய வளையிசைந்து (4)

சூ. வசனம்.

இந்தப்படிக்கு கலிங்கராசன் சொன்னதற்கு மேலே விஷ்ணு ரூபமான சகசிமகராசனைப் பார்த்து, கலிங்க ராச பத்தினி சாரசாக்ஷி சொல்கிற மார்க்கம்,

(28) தருவு

வளர்த்தது மாத்திரம் நானே
இந்த இரு மானை
வகையாய் வைத்திரும்
நீர் தானே (1)

இளைத்த வர்க்கருள் போசா
தஞ்சை வாசா
எங்கள் சகசி ராசனே
சோழ தேசனே (2)

பச்சைப் பட்டினி யிருந்து
வரம் கிடந்து
பரா சக்திதனைப்
பணிந்து (3)

இச்சை யாகவே திரிந்து
மனம் நெளிந்து
இசைவா யாயிரம்
பொன் முடிந்து (4)

வைத்த பிறகவள் வந்து
சுவப்பனம் தந்து
வகை பத்து மாதம்
சுமந்து (5)

மெத்த வேதனை மிகுந்து
　　பெற்றுப் பரிந்து
வேடிக்கை செய்து மகிழ்ந்து
　　உள்ளம் குளிர்ந்து　　(6)

தனித்தே யொருநாளும் அறியாள்
　　நல்ல நெறியாள்
தான் சேருங் குணம்
　　குறியாள்　　(7)

இனத்தில் தருண மறியாள்
　　தொட்டுத் தெரியாள்
என் கோடு கைப்
　　பிரியாள்　　(8)

கணைத்து லிங்கித மறியாள்
　　தானே பிரியாள்
கருத்தில் முன் கோபம்
　　அறியாள்　　(9)

அனைத்து முமக் குரியாள்
　　வகைக் குரியாள்
ஆலைக் கரும்பு செரியாள்
　　உம்மைப் புரியாள்　　(10)

கமலை மாது மேலே
　　கிருபைசெய்வது போலே
கன்னிய ரைக் கை
　　விடாமலே　　(11)

தாமத மென்ன வதனாலே
　　லீலை செய்தாலே
சுவாமி சுகம்
　　ஒருக் காலே　　(12)

அமரும் சொன்னே னுள்ளநிலை
கனப் பாரில்
அனேகம் பேருண்
டாகை யாலே (13)

நிமிடம் பிரிந்தி ராமல்
சேருமினி மேலே
நித்யம் சக சேந்திரன்
மாலே பாரமுன் மேலே (14)

சூ. **வசனம்:**

இந்தப்படிக்குக் கலிங்க இராசனும் பத்தினி சாரசாட்சியும் விஷ்ணு ரூபமான சகசி இராச உபேந்திரனைப் பார்த்துச் சொன்னதற்கு மேல் தங்களுடைய கன்னிகைகளைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்.

29

**தருவு**

மாலை யிடுங்கள் பெண்களே
மாலை யிடுங்கள்
சோலை வளரு மளகைதுரை
சகசி ராசனுக்கு (1)

மிஞ்சி யொருத்திக் கொருத்தி
விநோதம் புரியாமலே
கஞ்சமலர்க் கையி னாலே
களித்து நின்று சுகந்த (2)

சின்ன முலைமீதில் சேர
தினமும் இன்று சுதினம்
கன்னிகை லக்னம் வந்தது
கல்யாணமு கூர்த்த வேளை (3)

வாகான போசல குல
வமிசபரி பாலனுக்கு
ஏகோசி ராசன் தந்த
எங்கள் சகசி ராசனுக்கு (4)

**கலிங்கராச வசனம்:**

கன்னியர்களே, நாங்கள், சகசிராச உபேந்திரனிடம் உங்கள் நிமித்தமாகச் சொல்ல வேண்டியதெல்லாம் சொன்னோம். நீங்கள் கேட்க வேண்டியது கேட்டுக்கொள்ளுங்கள்.

**சூ. வசனம்:**

இந்தப்படிக்கு மாலை யிட்டதற்குமேல் விஷ்ணு அவதார மான சகசிமகாராச தேவேந்திரனைப் பார்த்து, இராச கன்னிகைகள் 'சலாம்! பண்ணிச் சொல்கிற மார்க்கம்.

**தருவு**

30 மங்கைப் பருவ மான
எங்கள் கொங்கைமேல் சேர
மனது தயவு பாரையா

திங்கள் வதனனான
ஏக ராசனளித்த வீர
சகசிராசனே பிராணேசனே (1)

புத்தி யறிந்து நாங்கள்
இத்தனை நாள் வரையும்
பூசை மிகவும் புரிந்து

தத்தை மொழியா ளான
பெற்றதாய் மடி மீதில்
தானே யிருந்து வளர்ந்தோம். (2)

இங்கிப் போது வந்தோம்
ஏற்றதோ ரிடத்தில்
எம்மைச் சேர்த்து ரட்சியீர்

சங்கரா என்று நாங்கள்
சிவ பூசை செய்தோம்
சாத்தின பூ மகிமை (3)

வாய்த்த தினி யிந்த
சஞ்சல மெல்லாம்
தீர்ந்தது சமயமிது

கஞ்சா சனத்தி லுறை
கமலால யம்மைதனைக்
கருதித் துதி சகசேந்திரா (4)

மிஞ்சு மனம் களிக்கக்
கொஞ்சி நீர் மாலையிடும்
மெய்வேளே தேவி நாங்களே

தவசு செய்தோம் சுவாமி
இப்படி நாங்கள்
தவசு செய்தோம்

நவ மார சக
பூ பால
நாங்கள் உன் பாதம் காண (5)

**வேறு தருவு**

அன்னமும் உண்ணாமல்
.......................... கண்ணாமல்
மின்னாரை எண்ணாமல்
விழிநித்திரை பண்ணாமல் (1

கருத்தில் ஒருமை யாகிக்
காயமும் மெலி வாகி
விரித்த சடையு மாகி
வீர மௌன மாகி (2)

திகழ் கமலையைத் தேடித்
திருவாரூர் தனைச் சூடி
சகசேந்திர வுன்னைக் கூடித்
தழுவ மனது நாடி (3)

31

## வேறு தருவு

எத்தனை பாக்கியம் செய்தோம்
சித்தஜ ரூபா சகசேந்திரா
தேவரீர் கொலுவைக் காண

மெல்லிய பாதம் பிடிக்க
வெள்ளிலைச் சுருள் மடிக்க
திண்ணிய மலர் முடிக்க

செந்தா மரைத்தாள் பிடிக்க
செப்ப மாக எங்களிடம்
செவ்விதழ் பரு கிடவே

குபசம்நீ கையால் வீட
குத்து முலைகளைத் தொட
கர்ணன் யேகேந்திரன் குமாரா

கமலைமாதைப் பணி தீரா
எந்நாளு மெங்களைச் சேர
இரங்குஞ் சகசேந்திர மாரா (1)

## வேறு தருவு

32 தினம் தினம் காணவேணும் — உன்பாத
தர்சனை யிதுவொன்றே காணும்
மனு நீதா சகசேந்திரா எங்கள்
மையல் வரவர மிஞ்சுது

திரண்ட நாளினில் ஆசை
    தெரியாம லிருந்த திப்போ
திரண்டு குரும்பைத் தனமும்
    இளநீர்போ லாச்சே

மிரண்டு சுவாமியைக் கண்டு
    வேண்டுவ தெல்லாம் மறந்து
சரசமே நாடு ததனால்
    வந்து

இளந்தையலரெங்க ளுடம்பு
    இளைத்தது — என்றால்
வெளியாகச் சொல்கிறேன்
    விவரமாய்க் கேளும்

வளமாய்த் தேவரீ ருடன்
    மஞ்சமீ திரவு பகல்
விளையாடவே மனதையா
    அதனால்

அருள் புரியும் கமலால
    யம்மன் தனைப்பணிய வந்த
இரவி குலத் தரசான
    எங்கள் சகசேந்திரா

பருவ வயதினி லிப்போ
    பக்ஷம் வைத் தணையு மையா
இரதி மதன் தனைப் போலவே
    சுகமாய் (1)

## வேறு தருவு

33 ஆசை தீரையா மிக வெங்கள்
    ஆசை தீரையா
சோழ தேச கமல வாசா
    மனதுல் லாசா

குணா சர்வேசா
    கேளீ விலாசா
சரஸ போசா
    சகசி ராச (1)

எங்கள் நேச மகிழ்ந்து
    கோடி பதங்கள் பாடி — மலர்கள்
சூடி யேவிளை யாடி — மிகமுத்
    தாடி விரக மோடி — தெரிய
நாடி யணையில் கூடி — மகிழ்ந்து

கண்டு இதழை விண்டு
    மதுவை யுண்டு — களித்துக்
கொண்டு மருவுசெண்டு — முலைபிரண்டும் வருடி
    வண்டுபோல் துவண்டு — அலைந்து (2)

மாரா தரு முதாரா
    புகழோய் யாரா — கௌரவப்
பிரம்புள கம் பீரா
    அளகை யூரா

வருகுபேர சகசி, தீர — அணைந்து
    இளந்தைய லென்று
எங்களை யெண்ணாதே — எல்லாம்
    அறிவோம் புகழ்

வளர்ந்த சக சேந்திரா
    மனதுவர நடப்போம்
வார்த்தை கேட்க
    முன் வருவோம்

வாருமென்றுகை கோத்து எங்கள்
    மனையில் நாடுவோம்
மேடையில் வைத்துத் தோத்திரம்
    மெத்தப் பாடுவோம்

தரும் நகையைப் பார்த்திது
நேர்த்தி யென்றே பரிந்து
பரிந்து கொண்டாடு வோம்
சக சேந்திரா

நாண மில்லாமல்
பேசுவோம் மன — தெங்கள் மீதில்
பூண சந்தனம்
பூசுவோம்

அதர ருசி தோண
மோகமே வீசுவோம் சரீரம்
வேர்வை காணக் கலவிசெய்து
காமனை யேசுவோம்

தேவிதனைப் பணி மார
சக சேந்திரா
மொழி சொல்லு முபகார
வகையே யெங்கள்

நாவினால் சொல்லு மொய்யார
நலங்கள் சேர்ந்த
பூவணை மீதி — லிப்போ சேரப்
புதி தறிவோம் சேர

**வேறு தருவு**

வசந்த காலங்காணிது
வசந்த காலங்காண்
இசைந்த செந்தமி ழுச்சுருள்
எங்கள் சகசேந்திரா

இங்கித மாகவே
மகிழ்ந்து இருவரு
மிருந்து நிலவினில்
குலாவுவோம் வாரும்

கொங்கைமேல் பூசும்
களபங்கள் சேரும்
குளிர்ந்த தென்றல்
வருகுது பாரும்

மாலைப் பொழுதில்
மலர்ந்ததே வேணும்
மணி தளத்தினில்
மையல் பூணும்

சோலைக் குயில்கள்
கூவவுங் காணும்
சுரதம் செய்யும்
சுகமெத்தத் தோணும்
கர கமலமு முன்
சரணம் கூறும்

களித்துள்ள சகசி பூபதி
தனதொரு விரகமாரன்
சந்நத மீறும்—மேவி யணிந்த
வேர்வைக ளாகும்.

இந்தப்படிக்குக் கன்னிகைகள் இருவரும் விஷ்ணு அவதார மான சகசி மகாராசனுடைய மனமிரங்கச் சொன்னதனாலே மகிழ்ந்து சகசிராசன் அங்கீகரித்தாரென்று, அந்தஉற்சாகத்தைக் கண்டு சகல சனங்களும் சோபன மங்களம் பாடுகிற மார்க்கம்.

(34) **சோபனம்**

நலங்கள் தரும்
நாட்டி லுள்ள—தேவ
தலங்கள் விளங்கப் பண்ணும்
தரும வானுக்கு—மங்களம்

கலிங்க ராச னளித்த
கன்னி இருவருக்கும்
துலங்கவே மாலையிட்ட
சுந்தரனுக்கு—மங்களம்

சுபம்.

# காவேரி கல்யாணம்

## தமிழ் இசை நாட்டிய நாடகம்

(பாகவத மேளா மரபு)

இயற்றியவர் : சகசி மன்னர்

தஞ்சை

மராட்டிய மன்னர்

*சகசி காலத்துப்*

படைப்பு

*கி.பி. 1684—1712*

உ

# காவேரி கல்யாணம்

## தமிழ் இசை நாட்டிய நாடகம்

**நாடகத்தில் வரும் கதை மாந்தர்:**

1. சூத்திரதாரன் — நாடகத்தை அறிமுகம் செய்து விளக்கம் கொடுப்பவன் நாடகம் நடாத்துவோன்
2. கட்டியக்காரன் — நாடகத்தைத் துவக்கி வைப்பவன்
3. கவேரராசன் — கவேர கன்னியின் தந்தை
4. கவேரராச ஸ்திரீ — கவேரராசனுடைய மனைவி
5. கவேர கன்னி — கவேரமன்னனுடைய பெண் சமுத்திரராசனை மணந்தவள்
6. கவேர ராசன் மந்திரி — அமைச்சர்
7. சமுத்திரராசன் — கடல்வேந்தன், கவேர கன்னியை மணந்தவன்
8. அகஸ்திய முனிவர் — பொதியத்து வாழும் தமிழ் முனிவர், கவேர கன்னிக்கும் சமுத்திரராசனுக்கும் மணம் புணர்த்தியவர்
9. சகி — கவேரகன்னியின் தோழி
10. பஞ்சநதீசர் — திருவையாற்றுக் கோயில் கொண்ட சிவபெருமான் கவேரகன்னியும் சமுத்திர ராசனும் மணம் புரிய அருள் செய்தவர்

**கதை நிகழும் இடம்:** திருவையாறு பஞ்சநதீசர் கோயில் (காவிரியாற்றுத்துறை)

**காலம்:** சகசி மன்னரின் ஆட்சிக்காலம்

**நாடகம் நிகழ்ந்த இடம்:** தஞ்சைச் சகசிமன்னன் அரண்மனை நாட்டியசாலை

# காவேரி கல்யாணம்

## தமிழ் இசை நாட்டிய நாடகம்

(யக்ஷ கானம்)

பாகவத மேளா மரபு

இராகம்—நாட்டை　　　　　　　　　　தாளம்—சம்பை

### தோடய மங்களம்

ஜய பார்வதீ ரமண
　　ஜய ஜானகீ ரமண
ஜய அந்தக தமன
　　ஜய மது ஸூதனா　　　　(ஜய ஜய) 1

ஜய திரிபுர ஹரண
　　ஜய வேதோத் தரண
ஜய அகிலநுத சரண
　　ஜய ஜனா பரண　　　　(ஜய ஜய) 2

ஜய ரவிசசி நேத்ர
　　ஜய அகிலநுத பாத்ர
ஜய பாவன சரித்ர
　　ஜய ஜகன் மித்ர　　　　(ஜய ஜய) 3

ஜய நந்தி வரவாஹ
　　ஜய அண்டஜ வாஹ
ஜய நித்யோத் ஸாஹ
　　ஜய சமித தாஹ　　　　(ஜய ஜய) 4

### மங்கள தரு

மஹநீய தியாகேசுனிகி மங்களம்
　　மாபாலி தேவுனிகி மங்களம்　　　　(1)

கனக வஸந்துனிகி மங்களம்
　　கமனீய சரித்ருனிகி மங்களம்
மனஸிஜ ஹருனிகி மங்களம்　　　　(2)

சோமாஸ கந்த மூர்த்திகி மங்களம்
சோபன பிருதுனிகி மங்களம்
மாமீத தயம்ஸேயு ஸ்வாமிகி மங்களம் (3)

போஸகுல சாஹேந்திர
பாஸுரகுல தேவுனிகி மங்களம்
மாசிவ தியாகேசுனிகி மங்களம். (4)

**சூத்திரதாரன்** வசனம்:

இந்தப்படிக்குச் சகல தேவதா பிரார்த்தனை பண்ணின ததனந்தரத்திலே காப்புக் கேட்பிக்கின்ற மார்க்கம்.

நீரியல் பொருமை யாற்றில் நிமலனை வணங்கு மெங் — கா
வேரிசா கரகல் யாணம் விளங்கிய தமிழால் பாட
பாரினில் கமலை மாதின் பாலனாம் விட்ட வாசல்
காரியல் வண்ண மான கரிமுகன் காப்புத் தானே

**சூ. வசனம்**

இந்தப்படிக்குச் சகசி ராசப் பிரணீதமான காவேரி கல்யாணம் என்கிற நாடகத்திலே சகல விக்கினங்களும் நிவாரணம் பண்ண, விக்னேசுவரனைத் தோத்திரம் பண்ண விக்னேசுவரன் வருகிற மார்க்கம்.

**ஸ்ரீ விநாயகர் தருவு**

வந்தே சிவஸுதம்
வரத மமரநுதம்
ஸுந்தர குணயுதம்
ஸுப்ரஸன்ன வதனம் (1)

பாசாங்குச தரம்
பணிவர கேயூரம்
மூஷிக வாகனம்
மோதக கரம் (2)

பாலேந்து சேகரம்
பால சிந்தூரதரம்
லாலித பக்தவரம்
லீலாய விக்னஹரம் (3)

சூ. **வசனம்**

இந்தப்படிக்கு விக்னேசுவரன் வந்து சகல விக்கினங்களும் நிவாரணம் பண்ணின, ததனந்தரத்திலே கதாசம்விதானம் எப்படியென்றால் கவேர இராசன் ஸ்திரீ சமேதனாக நித்தியக் கொலுவுக்கு வருகிறார் என்று சகல சனங்களுக்கும் எச்சரிக்க, கட்டியக்காரன் வருகிற மார்க்கம்.

1 **தருவு**

தவள நாமம் சார்த்தித்
சரிகை துப்பட்டிக் கட்டி
கவேர ராசேந்திரன் வாசல்
கட்டியக் காரன் வந்தானே

சூ. **வசனம்:**

இந்தப்படிக்குக் கட்டியக்காரன் வந்து எச்சரித்த ததனந்தரத்திலே கவேர இராசன் ஸ்திரீ சமேதனாகத் தன் சபைக்கு வருகிற மார்க்கம்.

2 **தருவு**

வஞ்சியர்கள் புடை சூழவே — இருபுறமும்
மருவுங் கவரிகள் வீசவே
கஞ்சமணி மார் பிலங்கவே — மனைவியுடன்
கவேர ராசனும் வந்தானே (1)

வட்ட மதிக்குடை பிடிக்கவே — புலவோர்கள்
வந்து கவிதைகள் படிக்கவே
கட்டியங்கள் சில கூறவே — மனைவியுடன்
கவேர ராசனும் வந்தானே (2)

சூ. வசனம்:

இந்தப்படிக்குக் கவேர இராசன் ஸ்திரீ சமேதனாகத் தன் சபைக்கு வந்து சிம்மாசனத்திலே இருந்து தன்னுடைய கன்னிகையான காவேரியம்மனுக்கு, யௌவன பிராதுர்பாவம் ஆயிற்று என்றும் நல்ல புருடனாகப் பார்த்து, கல்யாணம் பண்ணிக் கொடுக்க வேண்டுமென்றும் நினைத்து, தன்னுடைய ஸ்திரீயுடன் ஆலோசனை பண்ணுகிற மார்க்கம்.

3 **தருவு**

ஆசையா யெப்படி
யோசனை நீ செப்படி

எப்படியடி நாமு மிப்போ
திந்தக் காவே ரிக்கினி
மெப்புடன் கல்யாணம் செய்ய
வேணுமே மனைவியே சொல் (1)

வனிதை திரண்டு நல்ல
வடிவானாள் குறை சொல்ல
இனிசும்மா யிருப்ப தல்ல
எவருக்குக் கொடுப்போம் புல்ல (2)

நல்ல பிள்ளையாய்ப் பார்த்து
நம்பெண்ணைத் தாரை வார்த்து
வல்ல மனையில் சேர்த்து
வைக்க வேணும் தேர்ந்து (3)

குலவியற்கை நம் மாது
கூடா மன்னர்க்குத் தூது
வலியச் சொல்லப் போகாது
வருவோரு மில்லையிப் போது (4)

கூ. வசனம்:

இந்தப்படிக்குச் சொன்ன கவேர இராசனைப் பார்த்து, கவேர ஸ்தீரி சொல்கிற மார்க்கம்.

4 தருவு

என்னதான் உமக்கே னிப்போ
திந்த யோசனை
தன்னை யறிந்த பெண்ணிருந்தால்
தானே மன்னர் வருவார் (1)

மெல்லியற் கிது வல்லாமல்
மிருகசீ ரிட-நட் சத்திரம்
நல்ல யோகம் சாதகமும்
நாம் வினவ வேணுமோ (2)

நித்தியமும் சிவ பூசை
நியமமாகச் செய்து வருகிறாள்
சத்தியமா யந்தப் பலனே
சந்தோ ஷங்கள் கொடுக்கும் (3)

வாலையொரு குறத்தி நேற்று
வந்து காவேரியைப் பார்த்து
நாலுநாளி லிவளுக்கு நல்ல
நாதன் வருவா னென்றாள் (4)

அட்டியுண்டா விவள் பேச்சுக்
காலோசனை நாம் நினைக்க
எட்டு நாளாய்க் காவேரியும்
இடக்கண் துடிக்கு தென்கிறாள் (5)

அப்படித் தீவிர மானால்
ஐயா விந்த மந்திரியை
மெப்புள்ள மன்னராய்ப் பார்த்து
வினவி வரச் சொல்லும் (6)

**சூ. வசனம்:**

இந்தப்படிசுகுக் கவேர ஸ்திரி வசனம் கேட்டுக் கவேர இராசன் மந்திரியைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்.

5 **தருவு**

மந்திரி காவேரிக் கேற்ற
மண வாளனைப் பாராய்
மன்னரில் சிலாக்கியமுள்ள பேராய்
தந்திரி நியாயமே மெத்த
தானோ ரூராய்ச் சீக்கிரமாய்த்
தான் சென்று வாராய் (1)

வெளுக்கும் சுந்தர மான
மெய் யிருக்க வேணும்
வித்தை யெல்லாம் தானே
மிக வந்திருக்க வேணும்
வாளுக்கும் பின் வாங்கா
மன திருக்க வேணும்
வணக்கமு மெத்த வே தான்
வந்தி ருக்க வேணும்
குளிர்ந்த வார்த்தை சொல்லக்
குண மிருக்க வேணும்

கொடுக்கும் விதரண மான
கொடை யிருக்க வேணும்
தளர்ந்திடாத செல்வத் துடன
தானி ருக்க வேணும்
சகல சன மித்திரனாகத்
தானி ருக்க வேணும்
அரியரா தியரைப் போற்றும்
அன்பி ருக்க வேணும்
ஆஸ்திக்கம் பல மாகவே
தானி ருக்க வேணும்
சரச லீலை செய்யவும்
சமர்த்தி ருக்கவேணும்
சரிச மான மாகத்
தானி ருக்க வேணும்

சூ. **வசனம்:**

இந்தப்படிக்குச் சொன்ன இராச வசனம் கேட்டு மந்திரி, அப்படித்தானே நல்ல புருடனைப் பார்த்து அழைத்துக் கொண்டு வருகிறோம் என்று தேச தேசங்களும் தேடப் புறப் படுகின்ற மார்க்கம்.

6 **தருவு**

கவேர ராசன் சொற்படிக்குக்
காவேரிக்கு நாதன் பார்க்க
நவமத ரூப மந்திரி
நாடு நடந் தனனே

**சூ வசனம்:**

இந்தப்படிக்கு மந்திரி, தேச, தேசங்களும் தேடிக்கொண்டு வருகிற சமயத்தில், அப்புறம் கதாசம்விதானம் எப்படி

யென்றால் சமுத்திர இராசன், தனக்கு ஆன, கன்னிகையைப் பார்த்துக் கல்யாணம் பண்ணிக் கொடுக்க வேண்டும் என்று அகத்திய மகாமுனியைப் பிரார்த்திக்க அந்த வார்த்தையைக் கேட்டு, அப்படித்தானே நல்ல கன்னிகையைப் பார்த்து. உனக்குக் கல்யாணம் பண்ணிக் கொடுக்கிறோம் என்று சமுத்திர இராசனுடன் சொல்லிக் கவேர இராசனுடைய கன்னிகை, காவேரிப்பெண் இருக்கிறாள் என்று கேட்டு, அந்தக் கன்னிகையைச் சமுத்திர இராசனுக்குக் கல்யாணம் பண்ணிக் கொடுக்க வேண்டுமென்று கவேர இராசனைக் கேட்பதற்காக அகத்தியர் வருகிற மார்க்கம்.

### தருவு

அகத்திய மாமுனி வந்தனரே<br>
சடையும் விரித்து வரிப்<br>
  புலித் தோலு முடுத்து<br>
தவள நீறும் பூசிக்கொண்டு<br>
  அடிமே லடி நடந்துகொண்டு (1)

மிரட்டிக் கண்ணை விழித்துக்கொண்டு<br>
  விளங்கு ருத்திராக்க மாலையணிந்து<br>
அர அர அர சிவனே யென்று<br>
  அகத்திய மாமுனி வந்தாரே (2)

சூ. **வசனம்:**

இந்தப்படிக்கு வந்த அகத்திய மகா முனியைக் கண்டு நமஸ்காரம் பண்ணி, பக்தியுடனே சமீபத்தில் நின்ற மந்திரியைப் பார்த்து, 'வாரும் பிள்ளாய் நீ யார்? இங்கு ஏன் வந்தாய். சொல்' என்று கேட்கிற அகத்தியரிடம் மந்திரி சொல்கிற மார்க்கம்.

### தருவு

வந்த காரிய மிதுதான்
 மகிழ்ந்து கேளு மையா
மந்தார புயன் கவேரன்
 மந்திரி நா னையா (1)

எங்கள் தூரைக்குக் காவேரி
 என் றொரு பெண்டு
இருக்கிறா ளவள் திரண்டு
 இரண்டு மாத முண்டு (2

மங்களம் செய்ய வவட்கு
 மன்னரே நேற்று வந்து
மாப்பிள்ளை விசாரி யென்றார்
 வந்தே னது கொண்டு (3)

நானா தேசங்களுஞ் சுவாமி
 நடந்து நான் விளையாடி
நாளு மன்னவர் குணமும்
 நன்றா யறிந் தோடி (4)

தானே யிங்கு வந்தீரெங்கள்
 தைய லுற வாடித்
தழுவயிவ ரியற்கை சொல்லும்
 தரணியில் நான் தேடி (5)

கோதை குணமு மமிருத
 குணம் வடிவில் மாது
கொஞ்சு கிளி சங்கீதத்தில்
 குயி லெதிர் நில்லாது (6)

காதல் மிஞ்சு முன்னே — அந்தக்
    கன்னி முலை மீது
களப மணிந்து மருவக்
    கணவன் வேணு மிப்போது (7)

சூ. **வசனம்**

இந்தப்படிக்குச் சொன்ன மந்திரியைப் பார்த்து அகத்தியர் சொல்லுகின்ற மார்க்கம்.

9

## தருவு

நாமிது நிமித்த மாகவே தான்
    நாடி வந்தோ மடா—நாளும்
தான மிகுந்திடு சுந்தர காவேரி
    தன்னை அறிவோ மடா (1)

சமுத்திர ராசன் நம்மை நோக்கித்
    தவசு புரிந்தா னடா—அதை
அமர்த்த வந்த நாம் என்ன வேண்டுமென்றோம்
    அப்போது சொன்னது கேளடா—வெகு (2)

சமர்த் தாக எனக்கேற்ற பாரியை,
    தயை செய்யு மென்றாளடா—நல்லது
உமக்குக் கல்யாணம் செய்விக் கிறோமென்று
    ஒருவழி செய்தோ மடா (3)

தண்ணிக்குப் பள்ளமே வாய்த்தது போலிந்த
    சம்பந்தம் வாய்த்த தடா—உங்கள்
பெண்ணுக்கும் பிள்ளைக்கு மேற்றதே யல்லாமல்
    பேதக மில்லை யடா—அவனைக் (4)

கண்ணுக் கெதிராகக் காவேரி கண்டாலும்
    கனமைய லாவா ளடா—அந்த
வண்ண முலையாள் தந்தை தாயரிடத்துக்கு
    வருகிறோம் நீயும்வாடா. (5)

**சூ. வசனம்:**

அகத்தியரும் மந்திரியும் அன்யோன்யமாய் வார்த்தை சொல்லி இருவரும் கவேர இராசனுக்கு அருகில் வருகிற மார்க்கம்.

10 **தருவு**

விரி சடை அகத்தியரும்
வினவப் போன மந்திரியும்
வரு கவேர விராசனிடம்
வகை யாக வந்தனரே (1)

**சூ. வசனம்:**

இந்தப்படிக்கு வந்த அகத்தியருக்குக் கவேர இராசன் நமஸ்காரம் பண்ணி மந்திரியைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்

11 **தருவு**

என்ன சேதி சொல்லு — நீ போனது
என்ன சேதி சொல்லு
மன்ன ரியற்கை யெல்லாம் சிந்தைகொண்டு
வகையாய்ப் பேசிக் கொண்டு (1)

**சூ. வசனம்:**

இந்தப்படிக்குச் சொன்ன கவேர இராசனைப் பார்த்து மந்திரி சொல்கிற மார்க்கம்.

12 **தருவு**

சேதியெல்லாம் இந்த முனிதானே — உமக்குத்
தெரியச் சொல்லுவார் கேளும்
பாதி வழியில் கண்டே னப்பால்
போகா மலே மறித்தார் (1)

மாது நம் காவேரிக் கொரு
மன்ன னையுங் குறித்தார்
எங்கே விசாரித் தாலு முண்மை
இவர் சொல்லுக்குச் சமானமில்லை (2)

அங்கும் நாம் கண்ணாரக் கண்டு
அறிந்து வந்த தல்லவே
பொங்க மாய்த் தேவரீர் உள்ளம்
பூரித் திடச் சொல்லவே (3)

சூ. வசனம்:

இந்தப்படிக்குச் சொன்ன மந்திரி வார்த்தைகளைக் கேட்டுக் கவேர இராசன் அகத்தியரைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்.

13 தருவு

ஆரையா சொல்லு மென்
னரிவை காவேரிக்கு
சேரு மண வாளனை
சிந்தித் துரை செய்தீராம் (1)

கருப்போ சிகப்போ பிள்ளை
கண் ணாரக் கண்டீரோ
உருட்டி விழியாதீர்
உள்ள தையே சொல்லும் (2)

சேர்க்கும் மன்னவன் வந்தால்
சேருவேன் என்று நான்
பெற வந்த கன்னியும்
பேசி யிருக்கிறாள் காண் (3)

சரி சமான மில்லாத
சம்பந்தம் நான் செய்தால்
பரியாசம் செய் வார்கள்
பார்த்த பேரெல்லாம் (4)

மரி யாதை யுண்டான
மன்ன னானால் சொல்லும்
பெரியா ரென்று சும்மா
பேச வேண்டாம் சுவாமி (5)

யாரென்ன குல மவன்
அல்லாமல் அவனு ரைக்கும்
பேரென்ன ஊரெ ன்ன
பெருமை யுள்ள வனோ (6)

நீரென்ன சொன்னா லும்
நிசமா யிருக்கு மவன்
பேரென்ன சொல்லு மென்
பூவைக்கு மணம் செய்வோம் (7)

14

**வேறு தருவு**

ஆனால் சொல்கிறோம் கேளாய்
அணிமாலை புனை தோளாய்
மானாமுன் காவே ரிக்கு
மணவாளனா மந்தச் சேதி (1)

விட்டுணு மேனியும் போலவே
மேனியு முள்ள வன்
மெத்த விதரணிகன் அல்லால்
சட்டமா யெந்நே ரமும் (2)

சங்கீதம் ஓயாமல் தான்
தானே பாட வல்லான் — ஆளும்
மட்டமே யல்லா மல்
நெட்டையு மல்ல — (3)

வடிவில் மதராசன் — வெகு
அஷ்டைசு வரிய
சம்பன்னன் — புவிமீதில்
அனைவ ருக்கு முபகாரன் (4)

பூமியைச் சுற்றி யவனாக நின்று
புரக்கும் துரந் தரிகன் — பெரும்
சாமி யென்றனை வணங்கி
வரம்பெற்ற சமுத்திர இராசன் — வெகு (5)

காம விகாரமா யிருக்கிறா னுன்னுடைய
கன்னிகைக் கேற்ற புருடன்
ஆமென்றால் இப்போதே என்னுடன் சொல்லு
அவ்விடத்தில் சேதி யெல்லாம் (6)

**சூ. வசனம்:**

இந்தப்படிக்குச் சொன்ன அகத்திய மகாமுனி வசனம் கேட்டுக் கவேர இராசன் சொல்லுகின்ற மார்க்கம்.

**க. வே. இரா. வசனம்:**

கேளும் சுவாமி அகத்திய மகா முனீசுவரரே, சமுத்திர இராசனுக்கு என்னுடைய கன்னிகையைக் கொடுக்கலாம் என்று சொன்னீரே. அந்த வசனம் கேட்டு மெத்த சந்தோஷமாயிற்று. சகல குணங்களிலும் சமுத்திர இராசனுக்குச் சமான

மான பேர் இல்லை. ஆகையினாலே நமக்குச் சந்தோஷம் ஆயிற்று. என்னுடைய கன்னிகை விவரம் அறிந்தவள் அல்லள். அவளிடம் இந்த விருத்தாந்தம் சொல்லிச் சம்மதி பண்ண வேண்டும். அவளிடம் இப்போது சொல்வோம் என்றால் அந்தக் கன்னிகை இங்கே இல்லை. பஞ்சநதித் தலத்திலே, தனக்கேற்ற புருடன் வேண்டுமென்று பஞ்சநதீசுவரரைப் பூசை செய்யப் போயிருக்கிறாள், நாம் அழைத்தால் வரமாட்டாள். ஆகையால் தேவரீர் தயை செய்து அங்கே வந்தால் நாங்களும் கூட வருகிறோம். கன்னியிடம் இந்தச் செய்தி சொல்கிறோம். அவள் சம்மதித்தால் அந்தப்படியே கல்யாணம் ஆகட்டும்.

சூ. வசனம்:

இந்தப்படிக்குச் சொன்ன, குவேர இராசனைப் பார்த்து அகததியர் சொல்லுகின்ற மார்க்கம்.

அகத். வசனம்:

நல்லது. அப்படித்தானே வந்து கன்னியைக் கேட்போம்.

சூ. வசனம்:

இந்தப்படிக்கு அகத்தியரும் குவேர இராசனும் பஞ்சநதத்துக்குப் போவோம் என்று இருக்கிற சமயத்தில், அப்புறம் கதாசம் விதானம் எப்படியென்றால் திருவையாற்றில் காவேரியம்மன் சகியோடு கூட, பஞ்சநதீசுவரரைப் பூசை பண்ண வருகிற மார்க்கம்.

15 **திரை தருவு**

காவேரி வந்தாள் சகியுடனே—

காவேரி வந்தாள் நல்ல
களப மெய்யி லணிந்து
பூவார் குழ லிலங்க
பூர்ண சந்திரோ தயம்போல (1)

கரிய விழி புரள
கனக பணி திரள
வரிசையா யணி திரள
மாலை முலைமேல் துவள (2)

16 **வேறு தருவு**

காவேரி யம்மன் வந்தாள்
கனக வடிவு டனே
ஆவலாய்ப் பஞ்ச நதி
அரனுக் கருச்சனை செய்ய

சந்திரகாவிச் சேலை கட்டி
சரிகை ரவிக்கை யணிந்து
அந்தை காலி லணிந்து
அன்னம் போல் நடந்து (4)

கொவ்வை யிதழ் துலங்கக்
கொடிபோ லிடை துவளச்
செவ்விள நீரைப் போலத்
திரண்ட முலை குலுங்க (5)

திலகம் நுதலி லிட்டுச்
சேல்விழிக் கஞ்சனம் தீட்டி
நிலவுப்பூப் போல் குறு நகை
நின்று நின்று நகைத்து (6)

சூ. **வசனம்:**

இந்தப்படிக்குக் காவேரியம்மன் வந்து பஞ்சநதீசுவரரை நமஸ்காரம் பண்ணி, பக்தியுடனே தோத்திரம் பண்ணுகிற மார்க்கம்.

*17*

**தருவு**

கங்கை வேணிய கங்காளா
— பஞ்சநதீசுவரா

காலகாலா நீலகண்டா — ப

துங்க வரவ பூஷணா — ப கையில்

சூல கபால மேந்திய — ப

அம்புலி தன்னைத் தரித்த — ப

புலித்தோலை யாடையாக வுடுத்த — ப

சம்பராரியைப் பார்த்த கண்ணால்— ப நல்ல

தலைமாலை யணிந்த புய — ப

நேமி நாதன் நான்முகன் — ப தேட

நீள்முடி பாதம் காணாத — ப

சாமவேத கானப் பிரிய — ப எங்கள்

சகசிராசன் குல தெய்வமே — ப

தேனுடன் பாலும் கலந்த — ப உன்றன்

சிரசிலபி ஷேகம் செய்தேன் — ப

நானருச் சனை செய்கிறேன் — ப எனக்கு

நல்ல புருடனாகத் தாரும் — ப

**சூ. வசனம்:**

இந்தப்படிக்குக் காவேரியம்மன், பஞ்சநதீசுவரரைத் தோத்திரம் பண்ணிப் பூசை பண்ணுகின்ற மார்க்கம்.

18

**தருவு**

மவுனமாய் நின்றபி ஷேகம்
வகை யாகச் செய்கிறேன்
புலிராசர் பணிராச னையெனக்குப்
புருட னாகப் பண்ணும் (1)

அம்புயக் கையால் சுகந்தம்
அருச்சனை செய்கிறேன்
கம்பீர புருட னென்னைக்
கிட்டவரப் பண்ணும் (2)

சந்தனம் கற்பூ ரத்துடன்
சாத்துகிறேன் சுவாமி
சந்தோட மாக யிருக்கும்
தலைவன் வரப்பண்ணும் (3)

நல்லதொரு கனிக ளெல்லாம்
நைவே தனம் செய்கிறேன்
எல்லா மீதலுள்ள புருஷன்
மேவவரப் பண்ணும் (4)

தீபமெல்லாம் வகை வகையாய்ச்
சிறக்கப் பணி மாறுகிறேன்
கோபமில்லாப் புருட னென்னைக்
கூட வரப் பண்ணும் (5)

மறவாமல் பஞ்சாட் சரத்தை
மகிழ்ந்து சபிக் கின்றேன்
பிரியாமல் நித்த முத்தாடும்
பிரியனை வரப் பண்ணும் (6)

சூ. **வசனம்:**

இந்தப் படிக்குக் காவேரியம்மன் பஞ்ச நதீசுவரரைப் பூசை பண்ணிக்கொண்டிருக்கிற சமயத்திலே கவேர இராசனும் அகத்திய மகாமுனீசுவரரும் கவேர இராசனுடைய மனைவியும் மந்திரியும்மற்றுமுள்ள பந்து சனங்களோடு கூட, பஞ்சநதீசுவரருடைய தலத்துக்கு வருகிற மார்க்கம்.

19 **தருவு**

பஞ்ச நதீசுவரரை நித்தம்
பணிந்து புருடன் கேட்கும்
வஞ்சி யிட மவர்கள்
எல்லா ரும் வந்தனரே (1)

சூ **வசனம்:**

இந்தப்படிக்குக் கவேர இராசன் வந்து பஞ்சநதீசுவரைப் பணிந்து காவேரியம்மனைப் பார்த்துச் சொல்லுகின்ற மார்க்கம்.

20 தருவு

ஆசை கொண்டாலும் சம்மதியோ
காவேரி சம்மதியோ
அம்மா சமுத்திர ராசன்
அதிரூப வானாம் (2)

இந்த அகத்திய முனி
இது நிமித்த மட்டும்
வந்தவன் சரித்திர வகை
வகையாய்ச் சொல்லுகிறார் (3)

கண்ணுக் கித மாகிய
கணவனைச் சேர்வே னென்று
பெண்ணேநீ முன் சொன்ன
பேச்சுப்படிப் பேசுகிறார் (4)

எங்களுக் கிது தானே
யியற்கை யாய்க் காணுது
மங்கையே யுன்ற னுடைய
மனதில் வாஞ்சை எப்படி (5)

வாசமா மல ரெடுத்து
மானே யிந்த ஹரனை
பூசை செய்வது நல்ல
புருடனை வேண்டி யன்றோ (6)

சூ, வசனம்:

இந்தப்படிக்குச் சொன்ன கவேர இராசனைப் பார்த்து "நல்ல புருடன் வேணுமென்று இந்தப் பரமேசுவரனைப் பூசை பண்ணின விதமெல்லாம் சொல்லுகிறேன் கேளும் ஐயா" என்று காவேரியம்மன் சொல்லுகின்ற மார்க்கம்.

**தருவு**

இப்படிநான் சிவ பூசை
செய்தேன் — மெத்த
மெப்புள்ள புருடனை நான்
மேவ வேணு மென்று (1)

நந்தவனத் தினில் நானே
அடுத்தேன் — அடுத்து
நறுமல ரங்கிருந்த ததிலே
நல்ல தெல்லா மெடுத்தேன் (2)

பந்துபோல் சுருட்டும் படி
தொடுத்தேன் — தொடுத்துப்
பங்கயக் கையாலே சாத்திப்
பார்த்தேன் உள்ளம் களித்தேன் (3)

முன்னே நெய்யினால் விளக்கு
வைத்தேன் — வைத்து
முத்து ரத்னாதி களிலே
முக மங்கி யமைத்தேன் (4)

அன்னவகை யுள்ள தெல்லாம்
படைத்தேன் — படைத்து
அஞ்சடுக்குத் தீப முதல்
ஆலத்தியு மெடுத் தேன் (5)

சிறப்பாகப் பிரதட் டிணம்
புரிந்தேன் — புரிந்து
திருச் சிற்றம் பலமோடு
தேவாரம் சொரிந் தேன் (6)

மறக்காமல் நந்தி யரு
கிருந்தேன் — இருந்து
மனத்தினில் பஞ்சாட்சரத்தை
வகையாக நினைந்தேன் (7)

சூ. **வசனம்:**

இந்தப்படிக்குச் சொன்ன காவேரி யம்மனைப் பார்த்துக் கவேர இராசன் சொல்கிற மார்க்கம்.

**கவே. இரா. வசனம்:**

வருவாய், மா காவேரியே, நீ பஞ்சநதீசுவரனை எத்தனைப் பிரயாசமாய்ப் பூசை செய்தாயோ அத்தனைச் சந்தோஷம் வந்து லபித்தது. இந்த அகத்திய மகாமுனீசுவரர் சகல குணங் களிலேயும் ஈடு எடுப்பில்லாமல் இருக்கிற சமுத்திர இராசனுக்கு உன்னைக் கேட்க வந்திருக்கிறார், எங்களுக்கு மிகவும் சந்தோஷமாயிருக்கிறது. உன்னுடைய அபிப்பிராயம் சொல்லு பெண்ணே.

**கவேர கன்னி வசனம்:**

ஆனால் நான் சொல்கிறேன் கேளும் ஐயா.

22 **தருவு**

பஞ்ச நதீச ருடன்
நெஞ்சம் சம்மதி யாமலென்
சம்மதி எதுக் காகும்
ஐய வென் சுவாமி (1)

தஞ்ச மென் றவரிரு
கஞ்ச மலர்ப் பாதத்தைக்
கொஞ்சி யேத்தும் நான்
அல்லவோ அனுதினமும் (2)

ஈசன் சம்மதி யாமல்
    பேசேன் உங்க ளுக்கென்
விசு வாசம் இன்னும்
    தெரியாது மனதில் . (3)

ஆசை யுட னவரைப்
    பூசை செயு மெனக்கு
நேசன் வலிய வாரானோ
    மருவ நல்ல (4)

என்னாணை யிவர் வந்து
    சொன்னா லல்லாமல் எங்கள்
மன்னா நான் சம்மதிப்
    பேனோ இது காரியம் (5)

உன்னாலே தான் நமது
    மின்னா ளென்றோ வெண்ணிக்
கன்னி தானம் செயப்
    போமோ தேவரீராலே (6)

சூ. வசனம்:

இந்தப்படிக்குக் கன்னிகை சொன்னவார்த்தை கேட்டுக் கவேர இராசன் அகத்தியரைப் பார்த்துச் சொல்லுகின்ற மார்க்கம்.

க: இராச வசனம்

வருக அகத்திய மகாமுனீசுவரரே நமக்குச் சம்மதம். கன்னிகையைக் கேட்டால் பரமேசுவரன் வந்து சொன்னாலல்லாமல், தனக்குச் சம்மதியில்லை என்று சொல்கிறாளே. பரமேசுவரனைப் பிரத்தியட்சம் பண்ணிக்கொண்டு, அவராலே இந்தக் கன்னிகைக்குச் சொல்லி வைக்க என்னால் ஆகாதே, நீர் தபோதனர் அன்றோ. உம்மாலேயே இது ஆகும். இனிமேல்

இந்தக் கன்னிகை சொன்ன வார்த்தைக்கும் உத்தரவு சொல்லிப் பஞ்சநதீசுவரரையும் பிரத்தியட்சம் பண்ணிக் கொண்டு அவராலே இந்தக் கன்னிகைக்கும் சம்மதி பண்ணிவைத்து முகூர்த்தம் நிர்ணயம் பண்ணிக் கன்னிகையைத் தானம் பண்ணுகிறேன். இப்போது நான் சொன்ன காரியங்களுக்குக் கெல்லாம் யத்னம் பண்ணுமையா சுவாமி.

சூ. வசனம்:

இந்தப்படிக்குச் சொன்ன கவேர இராசனைப் பார்த்து ''வாரும், கவேர இராசாவே, நம்முடைய தபோபலத்தினாலே நீ சொன்ன காரியங்களெல்லாம் நிர்வாகம் பண்ணி இந்தக் கன்னிகைக்கு விவாகம் பண்ணுகிறோம்'' என்று இராசனிடம் சொல்லி, கவேர கன்னிகையைப் பார்த்து அகத்தியர் சொல்லுகின்ற மார்க்கம்.

23

**தருவு**

பஞ்ச நதீசரைக்
கெஞ்சி நாம் சம்மதி
பண்ணிக் கொள்கிறோம்
பெண்ணே வுன் (1)

நெஞ்சில் ஒருமையாய்
வஞ்சனை பண்ணாமல்
நீயுங் கூட
நினை பெண்ணே (2)

உத்தரம் சொல்லாதே
முத்து முத்தாட
உனக்கேற்ற நாயகன்
பெண்ணே அல்லால் (3)

சத்திய வாசகன்
உத்தமன் பேரும்
சமுத்திர ராசன்
காண் பெண்ணே (4)

நித்தம் சிவ பூசை
பண்ணாம லாகாரம்
நித்திரை பண்ணான்காண்
பெண்ணே வுன்றன் (5)

அத்திர விழிக்கவன்
ரூபத்தைக் கண்டால்
அப்போது தெரிய
வரும் பெண்ணே (6)

வந்து வெகுநேர
மாச்சுது பேச்சில்
வழிவிடாதே சொல்லு
பெண்ணே மனம் (7)

சந்தோஷ மாகவே
சமுத்திர ராசனைத்
தா ன ழை த் து
வருவோம் பெண்ணே (8)

சூ. **வசனம்:**

இந்தப்படிச்சுச் சொன்ன அகத்தியரைப் பார்த்துக் காவேரியம்மன் சொல்லுகிற மார்க்கம்.

**கா. கன். வசனம்**

வரவேண்டும் அகத்திய மாக முனீசுவரரே. பஞ்சநதீசுவர சுவாமி சொன்னால் அல்லாமல் நான் சுயமாகக் கல்யாணம் பண்ணிக்கொள்கிறதில்லை சுவாமி:

**அகத். வசனம்**

கேள் பெண்ணே காவேரி, பஞ்சநதீசுவரரைப் பிரத்தியட்சம் பண்ணிக் கொண்டு அவராலே உனக்குச் சம்மதியாகச் சொல்லி வைக்கிறேன். என் திறமையைப் பார் பெண்ணே.

**சூ. வசனம்:**

இந்தப் படிக்கு அகத்தியர் கன்னிகையைப் பார்த்துச் சொல்கின்ற மார்க்கம்.

*24* **தருவு**

மெத்த வொருமை யாக
விஷ்ணு வொரு பூநிமித்தம்
விழியிடந்து சாத்தும் வேளையில்
பக்திக் கிரங்கி வந்தநீரன்றோ
— ஹர பரமசிவ பஞ்சநதீசா (1)

பிச்சிப் பூவா லருச்சனை
செய்த மார்க்கண் டேயனைப்
பிடிக்க வந்த நமனை யுதைக்கவே
பக்ஷமாக வந்த நீரன்றோ — ஹர (2)

கோட்டு முலைச்சி பரவை
நாச்சி யார்தனைக் கூடிக்
கும்பிட்டுப் போற்றும் சுந்தரன்
பாட்டுக் கிரங்கி வந்த —ஹர (3)

வாக்கி சைந்த கொங்கை
யுமையாள் தனைப் புணர்ந்த
மணவாளக் கோலத் துடனே
ஏழை நான் பார்க்க வந்த நீரன்றோ —ஹர (4)

வேதம் படிக்கு மம்ப
லந்தணர் யக்ஞத்தில்வர
வேணுமென்று வருந்தும் வேளையில்
பாதம் காட்ட வந்த நீரன்றோ —ஹர (5)

சீல முனிவர் வேஷமாகவே
வந்து செங்காட்டில்
சிறுத் தொண்டன் கறியு முண்டபின்
பாலனுடனே நின்ற நீரன்றோ —ஹர (6)

திசைபெறு சோழன் மனசைச்
சோதிக்க நமனெனும்
கன்றைத் தேரிலுற வைத்தபின்னும்
பசுரூபங் கொண்டு வந்த நீரன்றோ —ஹர (7)

ஆரடி யடிதேவி உன்பிள்ளை
புவியின் மீதியில்
அவதரித் ததோ வழுகிறான்
பாரம் என்று சொன்ன நீரன்றோ —ஹர (8)

முதலை யுண்ட பிள்ளை
தனை யழைத்துக் கல்யாணம்
முடித்து அவனுடைய காணியாகிய
பதியில் வைத்த நீரன்றோ —ஹர (9)

சித்தம் மகிழ்ந்து சமுத்திர
ராசனை இந்தக் காவேரி
சேரக் கல்யாணம்செய்யத் தேவரீர்
பிரத்தியட்சமாக வேணுங்காண் —ஹர (10)

சூ. வசனம்:

இந்தப்படிக்குப் பிரத்தியட்சமான பரமேசுவரர் அகத்தியரைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்.

**பரமேசுவரர் வசனம்**

வருக, அகத்திய மகாமுனியே, நீ பண்ணின தோத்திரத்திற்கு மிகவும் சந்தோஷம். அப்படியே காவேரி கன்னிகையை, சமுத்திர ராசனுக்குக் கல்யாணம் பண்ணி வைக்கிறோம். நீ சீக்கிரம் போய், சமுத்திரனை அழைத்துக்கொண்டு வருக.

**அகத். வசனம்:**

மகா பாக்கியமாயிற்று சுவாமி !

**சூ. வசனம்**

இந்தப்படிக்குப் பரமேசுவர வசனம் கேட்டு அகத்தியர் சமுத்திர இராசனை அழைக்கப் போகிற மார்க்கம்.

25 **தருவு**

அமைக்க வந்த கன்னி
அமைந்ததென்று
அகத்தியமுனி சமுத்திர ராசனை
அழைக்கத்தான் நடந்தாரே (1)

சூ. வசனம்:

இந்தப்படி அகத்திய மகாமுனி சமுத்திர ராசனுடன் இந்த விருத்தாந்தமெல்லாம் சொல்லிச் சமுத்திரனை உடன் கூட்டிக்கொண்டு, பஞ்சநதீசுவர தலத்துக்கு, கல்யாணத்துக்கு வருகிற மார்க்கம்.

26 தருவு

சமுத்திர ராசன் வந்தான்—சுந்தரமான
சமுத்திர ராசன் வந்தான்
சமுத்திர ராசேந் திரன்
தனக்கே காவிரியை (1)

அமர்த்தும் அகத்தியர் போல்
அழைத்த படியே கூட
மனத்தில் மகிழ்ச்சியுங் கொண்டு—சிவனைக்காண
வலம்புரிச் சங்கும் கொண்டு (2)

கனக பணியுங் கொண்டு
கஞ்ச மலருங் கொண்டு
தினக ரோதயம் போலே
திருவை யாற தனிலே (3)

சூ. வசனம்:

இந்தப் படிக்குச் சமுத்திரராசன் பஞ்ச நதீசுவரரைத் தோத்திரம் பண்ணுகின்ற மார்க்கம்.

27

## தருவு

சரணம் சுவாமி சரணம்
சௌந்த ரேச சரணம்
அரவு கங்கை திங்கள் சடையில்
அணிந்த பஞ்சை நதியீசா (1)

விடை யேறி வரு துங்க
விபூதி தவ ழங்க
துடி மானும் மழுவும் சிரசும்
சூலமு மேந்து கையா (2)

மறை யோனும் மானும் காணா
மகா தேவர் மலர்ப் பாதா
அற மளித்த நாயகி பங்கினில்
அமர்ந்த பஞ்ச நதியீசா (3)

புகழ் பஞ்ச நதி வாசா
போசல குல யீசா
சகசி ராசனிரவும் பகலும்
தான் பணியுஞ் சர்வேசா (4)

சூ. வசனம்:

இந்தப்படிக்குத் தோத்திரம் பண்ணின சமுத்திரராசனைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்.

28

## தருவு

உனக்கேற்ற புருட னிவன்
உகந்து பார் காவேரி
எனக்கேற்ற புருட னருள்
என்று சொன் னபடி (1)

வித விதமாய் மல ரெடுத்து
விடியு முன்னே நமையடுத்து
இது நிமித்தம் வெகு பூசை
இச்சை யுடன் செய்து (2)

தந்தை தாய் இருக்கிற பேர்
தானே வேண் டியது செய்வார்
சிந்தனை யென் னென்றிரா மல்
தினம்வந் தெனைப் பணிந்த (3)

அவன் மெய்யும் சல ரூபம்
உன் மெய்யும் சலரூபம்
கவலை யில்லை இருவ ருக்கும்
கலவி செய்து கூட (4

சூ. வசனம்:

இப்படிச் சொன்ன பஞ்சநதியீசனைப் பார்த்துக் காவேரி யம்மன் சொல்கிற மார்க்கம்.

29 **தருவு**

சந்தோஷ மாச்சு சுவாமி
என்றன் மனது
சந்திர சேகரா இந்தச்
சமுத்திர ராசனைக் கண்டு

இஷ்டமாகு முன்னே பேச்சுப் — பேசிமுத்தாட
எண்ணுவ தென் மையல் நீச்சு
திருஷ்டிப் பிரியமாய் வாய்த்து
சிந்தைத் துயரம் போச்சு

கடைடாய்ப் பார்த்தா னொருபார்வை—யவன்முகம
 கனம்கொண் டுருகுது வேர்வை
இவனு மெனக்குக் கோர்வை
 என்முலை யிலனுக் கேர்வை

தரு கமலைமா தருளாலே புவியை—யாளும்சகசி
 இராச தேவேந் திரன் மேலே
கருணை செய்வது போலே
 கல்யாணம் செய்யுமினி மேலே

சூ. வசனம்:

இந்தப்படிக்குச் சொன்ன கன்னிகை வசனம் கேட்டுப் பஞ்சநதியீசுவர சுவாமி சொல்கிற மார்க்கம்.

பரமேசுவர வசனம்:

வருக சமுத்திர இராசாவே, நீ நினைத்தாற்போல இந்தக் கன்னிகை உன்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளச் சம்மதி பண்ணினோம். நம் முன்னிலையில் தானே சீக்கிரமாய்க் கல்யாணம் பண்ணிக் கொள்வாயாக.

சூ. வசனம்:

இந்தப்படிக்குச் சமுத்திர இராசனைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்.

பரமேசுவர வசனம்:

வருக கவேர இராசனே, உனக்கு நல்ல மாப்பிள்ளையாக வந்தான். இந்தக் கன்னிகையைச் சீக்கிரம் கல்யாணம் பண்ணும்.

ரு. வசனம்

இந்தப்படிக்குச் சொன்ன பரமேசுவர வசனம் கேட்டுக் கவேர இராசன் சமுத்திர இராசனைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்.

30

## தருவு

மலைக்கு மலை யண்டை
கொடுத்தாற் போல் நீவந்து
வாய்த்ததே நேர்த்தியையா-சொல்லும்

கலைக்கொரு வாணி யைப்போல்
வந்த வென் னுடைய
கன்னி காவேரி யம்மனுக்கு — பல்லவி

செப்பு முலையுள்ள யென்தேவி யென்னுடன்
சிங்கார மாகக் கொண்டு
சப்பிர மஞ்சத்தி லேயிருந்து விளை
யாடும் வேளை யிலே — தங்கக்

குப்பா சத்தி லடங்காது நம்கன்னிக்குக்
கொங்கை யென்று சொன்னபின் — இனி
எப்படிக் கொத்த புருடன் வாரானோவென்று
எண்ணி யெண்ணி யிருந்தேன் (1)

அஞ்சு வயது முதற்கொண்டு நித்தம்
அலர்ந்த மல ரெடுத்து
பஞ்ச நதீசருக் கருச்சனை செய்திரு
பாதந் தனைப் பணிந்து

கெஞ்சிக் கெஞ்சி நல்ல புருடன் தாருமென்று
கேட்டி ரிந்நா ளிவட்கு — எங்கே
கொஞ்சத் தனமுள்ள புருஷ னாகவே
கொடுக்கிறா ரோவென் றிருந்தேன் (2)

அகத்தி லிருந்து மந்திரி யுடனிது
ஆலோ சனை புரிந்து
சகத்தில் நமக்குச் சரிமன்ன ராரினி
தேடிவா போவென் றேன்

அகத்தியர் வந்து சமுத்திர ராசனெனன்
றாரப்போ தொரு மட்டும் — உன்றன்
முகததைக் கண்டதும் சந்தோஷம் மட்டல்ல
முகவிச்ச வார்த்தை யன்றோ (3)

அகத்திய மாமுனி யேதேவ ரீருக்
கனந்தம் சரண மைய
சகத்திலே நாங்கள் சுகத்தையே மென்மேல்சேர்த்
திருக்கவே செய்து மகிழும்

மதி யணிந்திடு வேணியர் தேவிக்கு
மாலையிடு மப்போ — தந்த
பொதியமா மலைதன்னி லிருந்து பாதி
பூமியைச் சரிசெய் தீரே (4)

இனிய யக்ஞங்கள் செய்யும் பெரியோர்க்கு
இப்புவி மீதி லுள்ள — நல்ல
முனிவர்க்கு மாதி சைவர்க்குங் கொழுந்தான
மூர்த்தி யாக வந்தீர் (5)

கு. வசனம்

இந்தப்படிக்குச் சொன்ன கவேர இராசனின் வசனம் கேட்டுச் சமுத்திர இராசன் சொல்கிற மார்க்கம்.

சமு வசனம்:

வருக கவேர இராசாவே, உமக்கும் நமக்கும் சம்பந்தம் பண்ணுவித்தது இந்த அகத்தியமகா முனீசுவரர். இவரே இந்தக் கல்யாணத்துக்குக் காரணம் சுவாமி.

சூ. வசனம்:

இப்படிச் சமுத்திர இராசனும் கவேர இராசனும் அன்யோன்யமாய் வார்த்தை சொல்லி அகத்திய மகா முனியைத் தோர்த்திரம் பண்ணுகின்ற மார்க்கம்.

சூ. வசனம்:

இந்தப்படிக்குக் கவேர இராசன், சமுத்திர இராசன், கவேர கன்னிகை, மந்திரி, கவேர இராசன் மனைவி மற்றுமுள்ள பேரும் அகத்தியரைத் தோத்திரம் பண்ண, இந்தச் சமயத்திலே பஞ்சநதீசுவரர் அகத்தியரைப் பார்த்துச் சொல்கிறமார்க்கம்.

பரமேசுவர வசனம்:

வருக அகத்திய மகாமுனியே, சமுத்திர இராசனுக்குக் கர்த்தா நீர்தானே. சீக்கிரமாகக் கல்யாணம் பண்ணிவையும்.

அகத் வசனம்

மகா பாக்கியமாயிற்று, சுவாமி

சூ .வசனம்

சொன்ன பரமேசுவர வசனம் கேட்டபடி அகத்தியர் சமுத்திர இராசனுக்கும் காவேரிக்கும் கல்யாணம் பண்ணுகிற மார்க்கம்.

இந்தப்படிக்கு முகூர்த்த சமயத்திலே கவேர கன்னிகையைப் பார்த்துச் சொல்கிற மார்க்கம்.

31 தருவு

மாலை யிடடி பெண்ணே மாலையிடடி
வால மன் மதன்
போலவே வரும் — சமுத்திர ராசனுக்கு (பல்)

மெத்த நல்ல நாதனாக
வேணுமென் றிவ ரிடத்தில்
பக்தி செய்தா யேநீ யிந்தப்
பஞ்ச நதி யீசர் பார்க்க (1)

பட்ச மாய்த் தினமு மிந்தப்
பஞ்ச நதி யீச ருக்கு
அருச் சனை செய்த கையால்
அலர்ந்த செந் தாமரைப்பூ (2)

தானு முன்னே யுன்னை யிந்த
சமுத்திர ராச னுக்குப்
பாணிக் கிரகணம் பண்ணப் பணம்
பாக்கு வெற்றிலை யெடுத்தேன் (1)

சூ. வசனம்

இந்தப்படிக்குக் காவேரியம்மனுக்கும் சமுத்திர இராசனுக்கும் கல்யாணம் பண்ணுவித்து, கவேர இராசன் சமுத்திர இராசன் முதலானவர்கள் பரமேசுவரனுக்கு நமஸ்காரம் பண்ணித் தோத்திரம் பண்ணுகிற மார்க்கம்.

32 தருவு

ஏழை பங்காள கங்காள — நம் பஞ்சநதீசுவரா
விடையேறும் பரமசிவ — பஞ்சநதீசுவரா
வேழ முகத்தானைப் பெற்றிடும் — பஞ்சநதீசுவரா
வேதாந்த வேத்ய ஜகன்மய — பஞ்சநதீசுவரா

பன்னக பூஷண பரமேச —பஞ்சநதீசுவரா

பாவஜ கர்வ தமனாதீசுவரர் —பஞ்சநதீசுவரா

புன்னாக வர சர்ம பூஷித — பஞ்சநதீசுவரா-தினம்

போசல குல கசேந்திரன் பணி

—பஞ்சநதீசுவரா

**சூ. வசனம்**

இந்தப்படிக்குத் தோத்திரம் பண்ணி, சமுத்திர இராசன் முதலானவரை யெல்லாம் பார்த்துப் பரமேசுவரன் வாழ்த்துகிற மார்க்கம்.

33

**தருவு**

**இராகம் - மத்யமாவதி**

ஆல் போலவே தழைத்து நல்ல

அருகு போலவே வேரோடி

மால் போலவும் லக்ஷ்மி போலவும்

வையகந் தனில் வாழ்ந்தி ருப்பீர்

இந்திரன் போலவே வாழ்ந்திருப்பீர்

—இருவரும்

இருக்குவேள் போலவே வாழ்ந்திருப்பீர்

சந்திரன் போலவே வாழ்ந்திருப்பீர்

—எழு

தாரகை போலவே வாழ்ந்திருப்பீர்

வனிதையே எங்கள் காவிரியே

சகசி மகா ராசனால்

சோழ மண்டலத்தில்

தினமு மிந்தப் புவி

விளையச் செய்து

ஸ்திரமாக யெப்போதும்

வாழ்ந்திருநீ

**சூ. வசனம்**

இந்தப்படிக்குப் பரமேசுவரன் ஆசீர்வாதம் பண்ண, சகல மானபேரும் விளங்கி சந்தோஷாதி சயத்தினால் மங்களம் பாடுகிற மார்க்கம்.

34 **மங்கள தருவு**

வரு சமுத்திர ராசனுக்கு மங்களம்

—எங்கள்

வனிதை கா வேரிக்கு மங்களம்

தானவர் வீரனுக்கு மங்களம்

சகல லோக பாவனிக்கு, பவானிக்கு

மங்களம்

மானோர்கள் மித்திரனுக்கு மங்களம்

தண்டமிழார் சகசேந்திரன்

தானாக வளரும் சோழ

மண்டலத்தை வளர்க்கும்

தேவிக்கு மங்களம்,

சுபம்.

௨

# கட்டியக்காரன் அறிமுகமும் உரையாடலும்

தமிழிசை நாட்டிய நாடக மரபு சகசி மன்னர் காலத்தில் எவ்வாறு இருந்தது என்பதை அறிய இதிலுள்ள உரையாடல்கள் சான்று பகர்கின்றன.

நாடகம் துவக்கப்படுவதற்கு முன் அரங்கில் கட்டியக் காரனைச் சூத்திரதாரன் அறிமுகம் செய்து வைக்கிறான்: கட்டியக்காரனுக்கும் சூத்திரதாரனுக்கும் நிகழ்ந்த உரையாடல் கள் பின் வருபவை. கட்டியக்காரன் நாடகத்தைத் துவக்கி வைப்பவன். இந்த உரையாடல்களால் 17-ம் நூற்றாண்டில், நாடக மரபில் பேச்சு மொழி எவ்வாறு இருந்ததென்பதைத் தெரிந்து கொள்ளமுடிகிறது. சகசி மன்னர் காலத்தில் நடை பெற்ற ஒவ்வொரு நாடகத்திலும் இந்த உரையாடல்கள் இடம் பெற்றவை: இந்த உரையாடலில் சூத்திரதாரன் முன் நின்று, கட்டியக்காரனுடன் பேசுகிறான். இசைக் குழுவினர், தலைமை நட்டுவன், தாளக்காரன் ஆகியோர் இடம் பெறுகின்றனர்.

இந்த உரையாடல்கள், இசை நாட்டிய நாடகங்களுக்குப் பொதுவானவை எனினும், விஷ்ணுசாகரராஜ விலாசம் என்ற நாடகத்தைத் துவக்குமுன் அமைக்கப் பெற்றுள்ளது இந்த உரையாடல்கள் என்பது குறிப்பிடத்தக்கது விஷ்ணுசாகரராஜ நாடகச் சுவடியில் இந்த உரையாடல்கள் காணப்படுகின்றன.

தமிழ்நாட்டு நாட்டிய நாடக மரபு, நாட்டியாசாரியர்கள் எவ்வாறு நாடகத்தை நடத்தினார்கள் என்பதற்கு இந்த

உரையாடல் ஆதாரமாக உள்ளது. நாடகத்தைக் கண்டு, கேட்டு ரசிப்பவர்களுக்கு ஏற்ற நாட்டு நடப்பில் உள்ள பேச்சு நடையில் உள்ளது. மற்றும் 17-ம் நூற்றாண்டில் தஞ்சை நகரில் நாட்டிய நாடக மரபு பின்பற்றப்பட்டதற்குச் சான்று இது.

தமிழர், தெலுங்கர், மராட்டியர் ஆகிய மும்மொழியாளர்களால் ஆட்சிபுரியப் பெற்ற தஞ்சையில் இத்தகைய உரையாடல்கள் 17-ம் நூற்றாண்டில் பேசப்பட்டதை அறிய இது சான்றாக உள்ளது. நாட்டியாசாரியரின் குறிப்பே இந்த உரையாடல்கள்.

முதலில் சூத்திரதாரன், அரங்குக்கு வருகிறான். நாடக அரங்கை மக்கள் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். அப்போது கட்டியக்காரன் அரங்குக்குள் நுழைகிறான். பேச்சுத் தொடர்கிறது.

## உரையாடல்

சூ. **வசனம்:**

(கட்டியக்காரனை நோக்கி) எங்கேயிருந்து வாராய் சொல்லடா?

**கட். வசனம்:**

மகாவிஷ்ணு சாமியண்டையிருந்து வந்தேனையா.

சூ. **வசனம்:**

நீ வந்த காரியமென்ன தெரியச் சொல்லடா?

**கட். வசனம்:**

நம்முடைய மகாவிஷ்ணு வீழிநாத மகாலிங்க ஸ்வாமியைச் சேவிக்க வருகிறார் என்று சகல ஜனங்களுக்கும் எச்சரிக்க வந்தோமையா!

சூத்திரதாரனிடம் கட்டியக்காரன் பேசிக்கொண்டிருக்கும் போது, நட்டுவனார் அரங்குக்கு வருகிறார். அவரைப் பார்க்கிறான் சூத்திரதாரன்.

**சூ. வசனம்**

நட்டுவனாரே, நாம் ஆடற பாடற சபையிலே இவன் ஆரோ தெரியாது வந்திருக்கிறானே! இவனுடைய பட்டை நாமம் என்ன, `பட்டுத் துப்பட்டி என்ன, தாடி, என்ன, கட்டியக் கோலென்ன, இவனுடைய பூர்வோத்தரம் கேட்கவேணுமே!

**சூ. வசனம்**

சரி, அரே பாய்! தூம் கோன்றே (ஹிந்துஸ்தானியில் நீ யாருடா?)

**கட். வசனம்**

(காதில் வாங்காமல்) அம்மம்ம? இந்தப் பந்தல் பார்த் தால்மெத்த நன்னாயிருக்கே!

**சூ. வசனம்**

ஓய் நட்டுவனாரே, இவனுக்கு உத்தராதி பாஷை தெரியாது. மராட்டி பாஷையாலே கூப்பிடவேணும்! அஹா தூ கோடூன்? (எங்கேயிருந்து வந்தாய்) ஆலாஸ கா!
(கட்டியக்காரன் அதையும் கேட்காமல் நிற்கிறான்)

**நட். வசனம்**

ஐயா, அப்படிக் கூப்பிட்டாலும் பேசவில்லையே. இனி மேல் கன்னட பாஷையிலே கூப்பிடவேணும் போலயிருக்கு!

**சூ. வசனம்**

ஏலே தம்பி (கன்னட பாஷையில்) எல்லித்து பந்தயோ? (கட்டியக்காரன் பேசாமல் நிற்கிறான்.)

**நட். வசனம்**

ஐயா, அப்படியும் பேசவில்லையே? வடுக பாஷையினாலே கூப்பிடுவோமே!

**சூ. வசனம்**

(வடுகில்) ஓயி நாயடா? ஏடனுண்டி வொஸ்தி வோயி? (கட்டியக்காரன் பேசவில்லை)

**நட். வசனம்**

ஐயா, அப்படியும் பேசவில்லை. சோழ மண்டலம் தமிழிலே கூப்பிடவேணும். அப்போ பேசுவான்.

**சூ. வசனம்**

(தமிழில்) ஓநோய் நாயக்கரே, எங்கேயிருந்து வந்தீர் காண்?

கட்டியக்காரன் பேசவில்லை. ஒருகால் இவனுக்குக் காது கேட்கவில்லையோ என்று சூத்திரதாரன், ஒரு காதுப்பக்கம் போய்க் கூப்பிடுகிறான். பதிலில்லை. மற்றொரு காதுப்பக்கம் போய்க் கூப்பிடுகிறான். அதற்கும் பதிலில்லை. சூத்திரதாரன் கட்டியக்காரனைச் சுற்றி வருகிறான்: அப்போது, தன்னை அடிக்க வருகிறானோ என்று கட்டியக்காரன் கையில் கம்புடன், சூத்திரதாரனை அடிக்க ஓங்கி மிரட்டுகிறான்.

**சூ. வசனம்:**

அடே பைத்தியக்கார? உன்னோடு சண்டையில்லை உன்னை இனிக் கூப்பிடமாட்டேன் நாங்கள் எல்லோரும் இங்கே கூடிக்கொண்டு வீழிநாத ஸ்வாமி ஸந்நிதியிலே நாட்டிய நாடகம் ஆடுகிறோம். நீ யார் என்று கேட்டோம்.

**கட். வசனம்:**

ஒகோ! நீ யாரடா?

**சூ. வசனம்:**

நான் வித்வானடா!

**கட். வசனம்:**

என்ன வித்வாங்கனை? நம்மிடம் சொல்லுடா?

**சூ. வசனம்.**

நான் சொல்றதிருக்கட்டும். நீ எங்கேயிருந்து வந்தாய் முதலில் சொல்லடா?

**கட். வசனம்:**

வடக்கே போ (கையை ஒருபுறம் காட்டி)

**சூ. வசனம்:**

பீஜாபுரத்திலேயிருந்து வந்தாயோ?

**கட். வசனம்**

சே! அங்கே யார் மகனாகப் போனாய்? இங்கே திரும்படா? (மற்றொருபுறம் கையைக்காட்டி)

**சூ. வசனம்:**

ஆனை மலையாளமா?

**கட். வசனம்:**

இப்படித்திரும்பு (வேறு திசையைக் காட்டி)

**சூ. வசனம்:**

ராமேச்வரத்திலேயிருந்து வந்தாயா?

**கட். வசனம்:**

இப்படித் திரும்பு (பின்புறம் காட்டி)

**சூ. வசனம்:**

வேதாரணியமா?

**கட். வசனம்:**

சற்றே இப்புறம் போ!

**சூ. வசனம்:**

திருவாரூரா?

**கட். வசனம்:**

ரெண்டு முழம் இப்படித் திரும்பு

**சூ. வசனம்:**

கும்பகோணமா? கௌரி மாயூரமா. திருவிடைமருதூரா, சீர்காழியா, வைத்தியநாதன் கோவிலா.

**கட். வசனம்:**

அடேடே நில்லு. அத்தனை தூரம் யார் மகனாய்ப் போகிறாயடா? சற்றே இப்புறம் (என்று கட்டியக்கோலால்) கோடு போடுகிறான்)

**சூ. வசனம்:**

சாலியமங்கலமா? மாரியம்மன் கோயிலா? தஞ்சாவூரா?

**கட். வசனம்:**

சபாஷ்டா ! நம்ம பின்னே வா, (என்று ஒருபுறம் அழைத்துப் போகிறான். ஒரு கம்பத்தைக் காட்டுகிறான்) உசக்க ஏறு ! கெட்டியாய்ப் பிடிச்சுக்கோடா, (சூத்திரதாரன் ஏறுகிறான்.)

**கட். வசனம்:**

ஒரு கால் !விடு, இந்தக் காலையும் விடு. அந்தக் கையை விடு, இந்தக் கையையும் விடு ! கீழே விழு !

**சூ. வசனம்:**

ஓய் ! பலே ! நன்னாச்சு ! காலொடிஞ்சால் எப்படி ?

**கட். வசனம்:**

ஒரு பந்தக்கால் கொடுக்கிறோம். (சூத்திரதாரன் அரங்கில் முன் வருகிறான். கட்டியக்காரனும் வருகிறான்)

**சூ. வசனம்:**

இதெல்லாம் இருக்கட்டும் ! நீ எங்கேயிருந்து வந்தாய் ? நிலவரமாய்த் தெரியச் சொல்லுடா?

**கட். வசனம்:**

அந்த வீட்டிலேயிருந்து இங்கே வந்தேன்.

**சூ. வசனம்:**

உன்னுடைய வாசம் எங்கே?

**கட். வசனம்:**

வாசுதேவனிடத்தில் !

**சூ. வசனம்:**

வாசுதேவனென்றால் எனக்குத் தெரியாது!

**கட். வசனம்:**

சின்னப்போ மண்டி போட்டுக்கொண்டு அரி நரி என்று படிக்கவில்லையா ? அதாவது மகாவிஷ்ணு வாசலிலே இருக்கிற கட்டியக்காரன் நானடா !

**சூ. வசனம்:**

அட பைத்தியக்காரா! ஏண்டா இப்படி நாலு மூலையிலும் சுத்துகிறாய் நம்மை?

**கட். வசனம்:**

பைத்தியக்காரன் நானோ நீயோ ? நம்ம மகாவிஷ்ணு எங்கே பார்த்தாலும் அங்கெல்லாமிருப்பாரடா !

**சூ. வசனம்:**

அதுசரி — நீ வந்த காரியம் என்ன சொல்லுடா?

**கட். வசனம்:**

நம்முடைய மகாவிஷ்ணு வீழிநாதமகாலிங்கத்தைச் சேவிக்க வரார் என்று சகல ஜனங்களுக்கும் எச்சரிக்க வந்தேண்டா!

**சூ. வசனம்:**

அதற்கு என்னென்ன செய்யவேணும்டா?

**கட். வசனம்:**

ஸதிரு. கிதிரு, மெத்தே, கித்தே, தலகணி பூ, சந்தனம், கிந்தணம், தூபம், தளிகை, நட்டு முட்டு, தீவட்டி —

**சூ வசனம்:**

அடே சகலமும் இங்கே இருக்கிறது. நீ போய் மகாவிஷ்ணுவைக் கூட்டிக்கொண்டு வா போ!

**கட். வசனம்:**

பாக்கி எல்லோரையும் நீ இழுத்துக்கொண்டு வா.

**சூ. வசனம்:**

இதோ வந்துவிட்டார்கள் (மகாவிஷ்ணுவைத் தவிர யாவரும் வருகிறார்கள் அரங்குக்கு) **(கட்டியக்காரன் ஒவ்வொருவனையும் பார்க்கிறான்)**

**கட் வசனம்:**

**நீ யாரடா? மெட்டுக்காரனா முட்டிக்கோ! ஐயா மத்தளக் காரா, இந்தப்பக்கம் தட்டு! அந்தப்பக்கம் தட்டு! நடுவே தட்டு! (மத்தளக்காரன் ஓசை எழுப்புகிறான்).**

**கட். வசனம்:**

பூனைக்காரப் பொட்டி மவனே! இந்தப் பக்கம் 'டும்'! அந்தப்பக்கம் டும்! நடுவிலே ஒண்ணுமில்லேடா!

**கட். வசனம்:**

(ஒருவனைப் பார்த்து) நீ யாரடா?

**நட். வசனம்:**

நான்தான் நட்டுவம்

**கட். வசனம்:**

கையிலே என்னடா?

**நட். வசனம்:**

தாளம் ஐயா!

**கட். வசனம்:**

அடி!

**நட். வசனம்:**

தித்தித்தே! (தாளம் கொட்டுகிறான்)

**கட். வசனம்:**

இது எந்தத் தாளம்?

**நட். வசனம்:**

இது திருபுடை

**கட். வசனம்:**

எங்கே திருடிக்கொண்டு வந்தாய்? இந்தத் தாளம் பேரு சொன்னால் உச்சிதம் (உயர்வு) என்ன?

**நட். வசனம்:**

உன் மேலே பாட்டுப் பாடறோம்!

**கட். வசனம்:**

இந்தத் தாளம் பேரு

**நட். வசனம்:**

ஒன்று இரும்பு ஒன்று வெண்கலம்!

**கட். வசனம்:**

(வேறு ஒருவனிடம்) நீ யாரடா?

**பாட. வசனம்:**

நான் தான் பாடகன்!

**கட். வசனம்:**

ஆ! — பாடு

**பாட. வசனம்:**

ஆ!

**கட். வசனம்:**

நிறுத்தடா ஆங்காதே! வாய்மூடி, கண் மூடிக்கொண்டு ஆகாசம் பார்த்துக்கொண்டு பாடு!

**சூ. வசனம்:**

சரி சரி! நீ வந்து அனேக நேரமாச்சு ! மகாவிஷ்ணுவைக் கூட்டிக்கொண்டு வா போடா!

**கட். வசனம்:**

அந்தத் தாளம் பேரு சொன்னால் நம்ம மேலே பதம் பாடறோம் என்றாயே, இப்போ பாடு ! நம்முடைய பட்ட நாமம், பட்டுத்துப்பட்டி, கட்டியக்கோல் இதெல்லாம் வச்சு ஒரு மேளம் நீளமாக ஏலபதம் திரி.

**சூ. வசனம்**

நல்ல காரியம் !

**கட். வசனம்:**

"பட்ட நாமம் இட்டுக்கொண்டு" (பாடுகிறான்)

**சூ. வசனம்:**

வாடா கட்டியக்காரா ! உன்மேலே பாடினோம் ! சீக்கிரமாகப் போய் மகாவிஷ்ணுவைக் கூட்டிக்கொண்டு வா

(கட்டியக்காரன் போகிறான்)

---

பின்னர், விஷ்ணு சாகராஜ நாடகம் துவக்கத்தில் கட்டியக்காரன் வருகிறான்.

---

இந்த உரையாடல் T. M. S. S. சுவடி நெ. 639–ல் உள்ளது. (இப்புத்தகம் 161–ல் பக். பார்க்க)

# *விஷ்ணு சாகராஜ விலாசம்

—— ——

### ஆனந்தக் களிப்பு

வேண்டிக் கொண்டேன் தினமம்மா—உந்தன்
மைமலர் பாதத்தை நம்பினேனம்மா
ஆண்டென்னை ரட்சியுமம்மா—தஞ்சை
ஆனந்தவல்லி எந்தனம்மா

அன்னையும் தந்தையும் நீயே யம்மா
எண்ணிய உறவெலாம் நீயே
என்னுடைய தெய்வமும் நீயே—கஞ்சி
ஏகாம்பரன் பங்கிருக்கும் என்தாயே

அவனியர் போற்றிய தாயே
அமராபதி பராசக்தியானாய் தாயே
கவலையெல்லாம் பொறுத்தாயே
முத்துக் கமலையம்மா கருணை செய்வாயே

ஒருவர் துணையையும் காணேன்
நித்தமுண்ணாமல் நானிருக்கக் காத்தருள் தாயே
தருணம் வைத்தீசர்தான் மகிழ்
தையல் நாயகி உன்தஞ்சம் நானே

சங்கரன்பால் உகந்தாளே—நித்தம்
சகசேந்திரனை ரட்சித் தன்பு புரிந்தாளே
துங்கமலர் பாதத்தளே—எங்கள்
திருவாஞ்சியத்தில் வாழவந்தாளே.

—— —

---

இந்தப் பாடல் ஷெ நாடகச் சுவடியில் காணப்பட்டது.

# ஐந்து இசை நாட்டிய நாடகங்கள்
## விசேடக் குறிப்புரை

பக். 1 தததனந்தரத்திலே — அதன் முடிவில் (அதற்குப் பின்னர்) நாட்டிய நாடகத்தில், இசைப்பாக்களுக்கு இடையே கதைத்தொடர்பை ஆங்காங்கே விளக்கி உரைநடையில் கூறுதல் மரபு. இதைச் சந்தி வசனம் என்பர். சிலப்பதிகாரத்தில் உரைபெறு கட்டுரையில் (1) "அன்று தொட்டு.......... நீங்கியது. (2) அது கேட்டு கொங்கிளங்கோசர் (3) அதுகேட்டு கடல் சூழிலங்கைக் கயவாகு, (4) அதுகேட்டு சோழன் பெருங்கிள்ளி" என - வருதல் அறியற்பாலது. மார்க்கம்-(வழி) சொல்கிற வழி [மோடி - பெருமைக் குரிய ஊடல்]

தருவு:— தரவு, தருவு என்றாயிற்று தரு, தர்வு என்றும் இசைப்பாவினத்தில் வரும் வடமொழியில் பரத முனிவர் 'த்ருவம்' என்று கூறுகிறார் தெலுங்கு மொழியில் தர்வு என வழங்குவர்.

பக். 6 அளகம் — கூந்தல் (தரு 2)
களபம் — வாசனைச் சாந்து (த.2)
மதன் — மன்மதன் (த.3)
இரதி — மன்மதன் மனைவி
அந்தம் — அழகு

பக். 7 சந்திரகாவிச் சேலை-வெண்மை பரவிய சிவப்புநிறப் புடவை (த 3) சந்திரகாவிச் சேலையும், சந்திரகாவிக் கச்சும் அணிந்து என்பதைக் குறிக்க இரட்டித்துக் கூறப்பட்டது.

கலுகலெனெ-சிலம்பின் ஓசையைக் குறித்தது. (கல்- ஒலிக்குறிப்பு) வேள் - மன்மதன்.

சிங்காடி — கணுமிக்குள்ள கரும்புக்குப் பெயர். மன்மதனின் கரும்பு வில்லுக்குப் பெயர் (த.4)

வங்கணம் — நட்பு (த.4)

நாண் — அம்பு விடுதற்குரிய நரம்பு. வண்டுகளே மன்மதனின் நாண் கயிறாகும்.

பக். 8 மையலானவர் — காதல் மயக்குற்றவர்கள் (த 4)

வாளி — அம்பு (புஷ்ப பாணம்)

கிட்டாதே — நெருங்காதே

வங்கணக்காரன் — தோழன்

பக். 9 பொன்னம்பூ நிசார் — பொன்போன்ற அழகிய பூக்களால் ஆன அரையங்கி. நிசார்: வழக்குச் சொல் தொடுத்து — வரிசையாக வைத்து அணிந்து

பூவங்கி — பூக்களால் ஆன சட்டை

ஓலைப்பூ சமுதாடு — தாழைப் பூவாலான வாள் போன்ற ஆயுதம்; மன்மதனுக்குரியது. சமுதாடு என்னும் பெயர் வழக்கு உண்டு (த 5)

சிங்கி — சிக்கி: நாடக வழக்குச் சொல்லில் மாற்றம்
உத்தரப்பிரத்யுத்தரம் — வினா விடையாக ஒருவர் கேட்க ஒருவர் பதில் கூறுவது.

வங்கணக்காரன் —

பக். 10 சம்வாத தரு — மன்மதனும் ரதியும் ஒருவருக்கொருவர் வாதம்புரியும் தருவுப்பாடல் இது.

திராணை — வல்லமை (த 7)

உகந்து — விரும்பி

அரவிந்தசரம் — தாமரையாகிற அம்பு

வனிதையே என்றது ரதியை

அசோகவாளி — அசோகத்தளிராகிற அம்பு

முனைந்து — வேகத்துடன்

பக். 11 சம்மோகனாஸ்திரம்—பிறரைக் காம விகாரமடையச் செய்யும் அஸ்திரப் பிரயோகம் (அம்பெய்வது) மன்மதனுடையது. த. 8
கனமோடி—மிக்க ஊடல்
பேதகம்—வேறுபாடு
விருதாய்—கருவத்துடன். விருது பெற்றவளாக எனலுமாம்

பக். 12 கெட்டி — உறுதியான
சத்திரபதி — மராட்டிய முடிமன்னர்களுக்குரிய பட்டம்
சத்திரம்—குடை. முதன்முதல் சிவாசிக்குக் கூறப் பட்ட பட்டம்
சகசேந்திரன் — சகசி மன்னன் ஷாஹஜிக்குப் பெயர்'
சுந்தரம் —அழகு

பக். 13 பெண்மதி—பெண்புத்தி த. 11
தண்மதி—குளிர்ந்த சந்திரன்
சேதி—செய்தி; வழக்குச் சொல்
பூலோக தேவேந்திரன் — சகசிமன்னன். இந்நாடகத் தலைவனான சகசியைக் குறிப்பிட்டது.
சாகேந்திரன் — சகசிமன்னன்
காமதேனு—இந்திரனிடமுள்ள பசு, கேட்டதைத் தரும் தெய்வத் தன்மை கொண்டது.
கைக்காமதேனு — கேட்டதைக் கொடுக்கும் தன்மை யால் சகசிமன்னனின் கை காமதேனுவாயிற்று.
கற்பகதரு — தேவவிருக்ஷம். இந்திரனுக்குரியது
தேக கற்பகதரு — தன்னை அடைந்தவர்களை ஆதரித்து வேண்டியதை அளிப்பவன் சகசிமன்னன் என்பதால் தேக கற்பகத் தரு என்று கூறப்பட்டது.

பக். 14 மெப்புயானை—பெருமையுள்ள யானை இந்திரனின் யானைக்குப் பெயர் ஐராவதம். மதிப்புள்ள என்பது மெப்பு என்று வழக்குச் சொல்லாயிற்று த. 12

வீரத்வம் — வீரத்தன்மை கொண்டசிறப்பு. வட மொழிச் சொல்லாட்சி

மந்திரவாள்–மந்திரசக்தியால் செயலாற்றும் வாள்; இந்திரனுக்குரியது

வீரமாற்றுள்ளவாள் — போர்க்களத்தில் வீரச்சிறப் புள்ள ஆற்றலைக் காட்டுவதில் உயர்ந்தவாள்– சகசி யுடையது.

சுந்தர ரம்பை — ரம்பை இந்திரனிடம் உள்ளவள்.

சுரதம் —காமச்செயல்

அமரதர்சனை — தேவர்களால் வழிபடப்பெறும் இந் திரனைக் குறித்தது த 12

அவன் அந்த முனிபத்னியை அணைந்தான் — இந்திரன் கௌதம முனிவரின் மனைவியான அகலிகையைத் தழுவினவன்.

இந்திரனையும் சகசி மன்னனையும் ஒப்பிட்டுக் கூறி இறுதியில், பிறர் மனைவி நயந்த இந்திரனைக் காட்டிலும் பிறர்மனை நயவாத சகசி உயர் வுடையவன் என்று சிறப்பித்துக் கூறப்பட்டது.

பக். 15 சந்ததம் — எப்போதும் த 13

சுமித்திராத்வஜர் — அனைவரையும் பந்துக்களாகக் கருதி இருப்பவன் சகசி

தட்சிண சிம்மாதனம் — சோழநாட்டில் தஞ்சையில் சகசியின் சிம்மாதனம்.

பக். 16 அவன்மீதில் பிரத்யட்சமாக இருக்கிறார் இறைவன் சகசி மன்னனிடம் குடிகொண்டிருக்கிறார் என்பது குறிப்பு த 14

முன்னே சங்கரனாலே மோசம் வந்தது — முன்பு சிவ பெருமானால் மன்மதன் எரிக்கப்பட்டதைக் குறித்தது.

சும்மாபோடி — வெறிதே போவாயாக, சும்மா வழக்குச் சொல்

சிலாக்கியம் — சிறப்புள்ள செயல்

பக். 17 தென்னளகைச் சகசேந்திரன் — தென்னளகாபுரி என்று பெயர்பெற்ற தஞ்சை மன்னனான சகசியைக் குறித்தது. தஞ்சைக்கு அளகாபுரி என்பது பழமையில் தஞ்சைக்கு இயற் பெயர் குபேரன் ஆட்சிப்புரிந்த போது இப்பெயர் தஞ்சைக்கு வழங்கியது.

குலோத்துங்க சோழன் கோவை. பிள்ளைத் தமிழ் முதலிய தமிழ் நூல்களிலும், தஞ்சபுரி மகாத்மியம் முதலிய வடநூல்களிலும் அளகை என்ற பெயர் தஞ்சைக் குரியதாகக் கூறப்பட்டுள்ளது.

செப்பு முலையாளை — செப்பைப்போன்ற சிறிய முலையுடையவளை த 16

சிங்கிக்கொள்ளல் — சிக்கிக்கொள்ளுதல்

போங்காண் — போம்காண், போவீராக

பக். 18 வாதாடித் தெருட்டு ஈதல்ல என்று படிக்கவும். தெருட்டுதல் — பிறரைச் சொற்களால் அடக்குதல் தாட்சண்யம் — தயக்கம்

வாடி — வருவாயாக: வழக்குச்செல்

துடுக்கு — அதிகப்பேச்சு; வழக்குச்சொல்

வல்லி — வல்லிக்கொடி போன்றவள்

வாது திரட்டுதல் — வாதத்துக்குரிய விஷயங் களைச் சேகரித்தல்.

பக். 19 கனகபணிகள் — பொன்னாலான அணிகள்.

மையல்— காதல்

விரகபதங்கள் — காமச்சுவைகூறும் இசைப்பாடல்கள்.

உள்தருவு — நாடக அரங்கின் முகப்பில் திரை போடப்பட்டு திரைக்கு உள்ளே கதாபாத்திரங்கள் பேசுவதும் பாடுவதுமான நிகழ்ச்சிகளைக் குறிப்பது.

வெளிதருவு — திரைக்கு வெளியே கதாபாத்திரங்கள் அபிநயத்தோடு பாடி நடிப்பது.

பக், 20 சசிகிரணம் — சந்திரகிரணம்
வடம் — மாலை
தரளம் — முத்து
நிரை — வரிசை
பவளக்கொடிபோல் இடை துவள என்க.
வேர்மருக் கொழுந்து — மருக்கொழுந்து வேர்

பக். 21. கங்குல் — இரவு
மதிகாய — நிலவொளி பரந்து விளங்க
கன்னன் — கர்ணன்
கந்தவேள் — மன்மதன், கந்தம் — வாசனை, வாசனைப் பூக்களை அம்பாக உடையவன் த 20

பக். 22 அங்கணையும் — அழகிய அம்பும்
சல்லாபம் — இன்பவிளையாட்டு
புல்லாதமாதர் — ஆடவரைத் தழுவாத கன்னியர்
அஞ்சுகணை — ஐந்து அம்புகள் (பஞ்சபாணம்) த 23

பக். 24 கந்தவேள் — (இங்கே) முருகனை த 25
வேதவன் — பிரமன்
சப தாவடம் — சபத்துக்குரிய மாலை.தாவடம்- மாலை த. 25
கவடில்லாமல் — வஞ்சனையில்லாமல்

பக். 26 தையல் — இளம்பெண்; இராச கன்னிகை
அஞ்சுவாளி — புஷ்பபாணங்கள் ஐந்து
வாகாகவே — யுக்திக்குப் பொருத்தமாகவே

பக். 27 சௌரியம் — வீரப்புகழ் த. 28

பக். 23 வரசிவபூஜை — உயர்வான சிவவழிபாடு

பக். 29 போசலகுலேந்திரன்—போசலகுலத்தில் இந்திரனைப் போன்ற சகசி மன்னன். போசல என்பது மராட்டிய மன்னருக்குரிய பட்டம்.

ஏகேந்திரன் தருசுதனை — ஏகோசி மன்னன் பெற்ற புதல்வனான சகசி மன்னனை

தருசுதன் -- தரப்பெற்ற புதல்வன் த. 30

தீபாம்பிகை தனயன் — ஏகோசி மன்னனின் மனைவி யான தீபாம்பிகையின் குமாரனான சகசி மன்னன்.

திரிலோசனா — முக்கண்ணா

பாலகா — காப்பவரே

சூலதரா — சூலத்தை ஏந்தியவனே

கங்காளா — கங்காளத்தை ஏந்தியவனே. உடுக்கை போன்ற ஒருவாத்தியம் தரித்த சிவன் (ஸாரஸ்வதீய சித்திரகர்ம சாஸ்திரத்தில் காண்க) கங்கையைத் தரித்தவனே என்பதுமாம்.

வேணியன் — சடையையுடையவன்

பக். 30 அங்கஜகர்வஹர — மன்மதனின் கருவத்தைப் போக்கியவன்

ஆனந்தவல்லியீசுவரர் -- ஆனந்தவல்லியைத் துணைவியாகப் பெற்ற தஞ்சபுரீசர்.

பரவைக்கு எளியதூதா — சுந்தரமூர்த்தி நாயனாருக்காகப் பரவை என்னும் கணிகையிடம் தூது சென்று அடியார்க்கு எளிய கருணை கொண்ட இறைவா

கண்டத்தில் மையா — பாற்கடலில் புறப்பட்ட விஷத்தைக் குடித்து அதனால் கறுத்த கழுத்தை உடையவனே

பக். 31 விகச கமலநயனன் — விரிந்த தாமரை போன்ற கண்களையுடைய சகசி.

பக். 32 மகரகேதனன் — மீனக் கொடியுடையவன் த. 33
சகசி மன்னனின் பவனி வீதியில் வருவதைக்கண்டு
என்க.
திராணன் — காப்பாற்றுபவன்
அமரகத்தில் — போர்க்களத்தில்
விசயன் — அருச்சுனன்
கருணாசுதா சமுத்திரன் — கருணா சமுத்திர சுதன்
என்க. கனகாத்திரி — பொன்மலை
சரசிச மித்திர வமிசன் — சூரிய குலத்தவன்
சரசிசம்—தாமரை – மித்திரன்—சூரியன் த. 33
மின்னரசி — மின்னல் போன்ற ஒளியுடைய இராச
கன்னிகை

பக். 34 மடிபிடிப்பேன்—வழிமறிப்பேன் என்பது குறிப்பு
மலர்முடிப்பேன்—பூச்சூடுவேன் த. 34
பங்காளிக்குயில் என்றது, காமவேதனையை மிகைப்
படுத்தும் தன்மையால் பகைமை தோன்ற பங்காளி
எனக் கூறப்பட்டது.
வங்கார என்ற பாடமும் உள்ளது.

பக். 35 கர்த்தன் — தலைவன்
கலைமாது—திருவாரூர் தியாகேசரின் துணைவிக்குப்
பெயர் கமலாம்பிகை
கலவி — இன்பம்
சயத்தம்பம் — வெற்றித்தூண்
சிக்கி அகப்படுத்தி
காமா — மன்மதனே த. 36
ஈசர்மேல் — சிவபெருமான் மீது
அன்னம் — மன்மதனின் வாகனம்
அனங்கன் — உடம்பில்லாதவன், மன்மதன்
குபேரன் — இங்கே சகசி மன்னனைக் குறித்தது.
தஞ்சையில் குபேரன் ஆட்சிபுரிந்தவன் என்பதால்
சகசியைக் குபேரன் என்று கூறப்பட்டது.
பயலே போடா — வழக்குச்சொல் த. 36

பக். 36 மதப்பயல் — மன்மதனாகிற பயல் என்று இகழ்ச்சி தோன்றக் கூறியது. த. 37

ராஜஸவிப்தை — காம மயக்கத்தை ஏற்படுத்தும் கலை

பக். 37 அமரமேளம் — தேவ வாத்ய விசேஷம்

மார்பாணி — மதாணி எனப்படும் மார்பில் அணியும் அணி வகையில் ஒன்று

பன்னூறு அரி — பலநூறு சிங்கங்கள்

பக். 38 அவனதாச்சே — அவனுடையதாயிற்று. ஆச்சே என்பது சொற்சிதைவு; வழக்குச்சொல்

சிங்கிக்கொள்வது — அகப்பட்டுக்கொள்வது

திக்கெண்குறி — எட்டுத் திக்குகளிலும் காணப்படும் குறி. சகுனம்

பக். 40 சலாம் (ஹிந்துஸ்தானிச் சொல்) வணக்கம் என்ற பொருளுடையது. குமரகுருபரசுவாமிகள் நூலில் 'சலாம்' பதப்பிரயோகம் வந்துள்ளது. த. 42

கைவாரதருவு — கட்டியம் கூறும் இசைப்பா இவை இசைநாட்டிய நாடகங்களில் பெரிதும் பயன் படுத்தப்பெறும் மரபு உள்ள பாடல் மணிப்பிரவாள நடையில், பாடல் தலைவனையும்; இறைவனையும் வேத்தியல் பொதுவியல் இரண்டிலும் பாடப்பெறும் இசைப்பாடல்கள் இவை.

பக். 42 அப்யனுக்ஞை: சம்மதத்தைக் குறிப்பாகத் தோன்றக் கூறுவது

சித்தசன் — மன்மதன் த. 44

தெள்ளு மலைமகளை — தூய வெள்ளிய மலையாள இமயம் பெற்ற உமாதேவியை

அரனுக்கு — சிவனுக்கு

பக். 43 கைக்கனகம் — கனகக் கை: — பொன்னான கை
சாதகபட்சி — சந்திரகிரணத்தை உண்ணக் காத்திருக்கும் பறவை
சோபனம் — நன்மை உண்டாகட்டும் என்று கூறப் படும் வாசகம்

பக். 48 அந்தம் — அழகு
விட்டவாசல் — திருவாரூர்க் கோயிலில் உள்ள வாயிலில் ஒன்றுக்குப் பெயர் அங்குள்ள கணபதி விட்டவாசல் கணபதி என்று கூறுவது மரபு
மதகரி — மதம்பிடித்த யானை. கணபதி

பக். 49 அடரு கந்தம் — திண்ணிதான வாசனைப்பொருள்
நாமம் இலங்க — நாமக்குறி விளங்க த. 1
வன்மீகநாதசுவாமி: திருவாரூரில் புற்றிடங்கொண்ட சிவபெருமானுக்குப் பெயர்

பக். 50 இராசஹம்ஸம் — அரச அன்னம்
அந்தை: காலில் அணியும் அணி த. 3
செங்காவிச் சேலை: சிகப்புநிறப் புடவை
சிந்து பதங்கள்: இசைப் பாடல்களான சிந்து, பதங்கள் ஆகியவை த. 4
மயலாட — மயக்கத்துடன் தடுமாற
தத்தை — கிளி
வாசவஸந்நுதா, சாமகானப்பிரியா — சிவபெரு மானைப் போற்றும் பெயர்கள்

பக். 52 அரவிந்தம் — தாமரை
மதுவதனால் — தேனைக்கொண்டு
சந்தனம் திணிந்த தோள்களையுடை சகசிமன்னன் என்க.
சந்தனத்திண்புயம் என்றும், சந்தனத்தெண்புயம் என்றும் பாடம்

பக். 53 நேமம் — நியமம்

பக். 54 புனித கௌடம் — தூயமாலை
துறவிகள் அணியும் மாலை
சப தாவடம் — சபத்துக்குரிய மாலை த. 7
பூர்வோத்தரம் — முன் வரலாறு

பக். 55 ஞாதயவ்வனி — தெரிவை என்னும் பருவமாது
எனலாம்

பக். 68 இராதேயன் — கர்ணன்

பக் 59 தருமதனூசன் — தருமபுத்திரன்
பும்பாவ சரசுவதி: ஆண்மைத் தன்மையுள்ள —
கல்வியில் கலைமகளாயிருப்பவன்
சரணாகத ரட்சணம் — சரணடைந்தவரைப்
பாதுகாத்தல்
திரமான — ஸ்திரமான, நிலையான
விபவம் — நற்காரியம்; சிறப்பான செயல்

பக் 60 அம்புலி — சந்திரன்
சங்கை — வெட்கம்
புச சிரங்களை — தோள் குவடுகளை, சிகரங்களை
எனலுமாம்
துங்கன் — தூயவன்
அங்கசன் — மன்மதன்

பக். 61 கோகத்தனி — சக்கரவாகம் (சக்கரவாகப் புள்)
போன்ற தனம் உடையவள்
ராகேந்துமுகி — பூர்ணிமையின் முழு நிலவு போன்ற
முகத்தை உடையவள்
சச்சனர் — சத்சனர் — நல்ல மனிதர்
சுதாப்தி தீரன் — இனிமையான கடலின் எல்லை
(அ) இன்பக்கடலில் மூழ்குவதில் வல்லவன்
சுதாகரன் — சந்திரன்
மாணியன் — மதிப்பிற்குரியவன்

பக். 62 முத்துமுலை—முத்துமாலையணிந்த முலையகம்
சுவர்ணபூஷணம்—பொன்னாபரணம் த. 13
கபோலம்—கன்னம்

பக். 64 பணியணி– ஆபரணங்களையணிந்த
சுகவாணி: சந்திரிகா ஹாசையின் பாங்கி

பக். 68 சன்மசாபல்யம்– பிறவிப் பயன்

பக். 69 சங்கட்டகணை—தீர்மானம்

பக். 70 போசலாம்புதி சந்திரா—போசல வம்சமாகிய கடலுக்கு (மகிழ்ச்சி அளிப்பதில்) சந்திரனானவனே.
நானாகலை– பல்கலை
தீனசனமந்தாரா--எளியோர் வேண்டுவதை அளிப்பதில் கற்பக தருவே.
மானினீபாஞ்சால — உயர்ந்த பெண்கள் விரும்பும் அழகுள்ளவன்

பக். 72 சந்திரசமானவதனை—சந்திரனை ஒத்தமுகமுடையவள்

பக். 73 சின்னம் சிறியாள்—மிகச்சிறியவள்
நறையார்—தேன் நிரம்பிய
நேசாள்—நேசம் உடையவள் (சொல்சிதைவு)
மதி ஒளிகிண்டும் –சந்திரனின் ஒளி புறப்படுகின்ற
எண்கலயையாள்-எட்டாம்பிறை போன்றவள் (அஷ்டமி சந்திரன்)

பக். 74 தனித்தாள்—தனியே இருந்தாள்
அமலக்குயில் குறையில்லாத குயில். அழகுள்ள குயில் என்றுமாம் அளகைப்பதியூரா—அளகாபுரி எனப்படும் தஞ்சையை ஊராக உடையவனே.

பக். 75 தேவசன பாலன்—தேவர்களைக்காப்பாற்றுபவன்
தாவரமாய்-நிலையாக. ஸ்தாபரம் என்பதன் சிதைவு

பக். 76 சதுரன்—திறமையுள்ளவன்
மதனசந்நிபன்: மன்மதன் போன்றவன்
சதயன் — சதய நக்ஷத்திரத்தில் பிறந்தவன், சகரி மன்னன். முதலாம் இராசராசனும் சதயத்தில் பிறந்தவன்.

பக். 77 சப்பிரமஞ்சம் — (அலங்கரித்தகட்டில்) படுக்கை
கலையை—ஆடையை

பக். 78 மிடறு—கழுத்து
உளவளவு ஒலிதர உள்ள அளவு ஒலி உண்டாக
நளினம்—தாமரை
அளி—வண்டுகள்

பக். 79 நீதம்—நீதி, நெறி
வீதம்—பங்கு த. 27

பக். 80 தங்க மார்பிடம்-தங்கநிறமான மார்பகம் எனலுமாம்
நீதம்—பாக்கியம்
கதம்பம்—கொத்து: கூட்டம்; (கதம்பமலர்)
மெய்—உடம்பு. உடம்பே கோயில்
பிம்பம்—மூர்த்தி; மனதே பிம்பம்
வதனமாகிற தாமரைப்பூ
வியர்வையே மார்ச்சனம்
ஆதுரமே நைவேத்யம் பி. 29
மார்ச்சனம்—அலம்புதல்—துடைத்தல்
ஆதரம் – ஈடுபாடு
இன்பசுரதம்—இன்பம் தரும் விளையாட்டு
இந்திரனைப் போன்று ஆதிக்கம் கொண்டவன் என்க. த. 28
நாரி—பெண்
மிண்டு—நெருங்குதல்
முத்துமுத்தாய்க்கூட—முத்தும் முத்தும் ஒன்றாய்க் கூடுவதைப்போல

இருமுத்துமுலை—முத்துமாலையணிந்தயிருமுலை
அத்திரம்—அஸ்திரம்

பக். 82 தென்சோழமண்டலாதிபதி: சகசி த. 31

பக். 86 கதாசங்கிரக அகவல்: குறவஞ்சி நாடகத்தின் கதைச் சுருக்கத்தைக் கூறும் அகவல் பா.
தருவளர்—கற்பகத்தைப்போல் கொடுக்கும் தன்மை வளர்கின்ற.
மகபதி—யாகங்கள் செய்த தலைவன்;- சகசி-இந்திரன்

பக். 87 இயல் குறவஞ்சி—இசையிலக்கணமுள்ள குறவஞ்சி நாடகமாக,
பொங்கம்—புது அழகு
அங்கிதம்—உரிமை
அருந்தமிழால் கருதிய முத்துக்கவி என்க.

பக். 89 சங்கீதக் கிள்ளை—இசையில் கிளி
வால கோகிலம்—இளங்குயில் (வால—பால)
கீத வண்டு—இசை பாடும் வண்டு
கிளரும்—நல்லதை அறியும்
மதன சஞ்சீவி—மன்மத மூலிகை.
பவளம் போன்று சிவந்தும் சுவையில் கரும்பாகவும் உள்ள வாய்.
குவளவேல் விழி—குவளை போன்ற நிறமும் வேல் போன்ற கூர்மையும் உள்ள விழி.
முடித்தகூந்தல்—பின்னிவாரி முடித்த கூந்தல்
மொய்ம்மலர்ச் செருக்கும்—நெருங்கிய பூக்கள் செருகிய தன்மையும்; மொய்மலர் என்பதற்கு வண்டுகள் மொய்க்கின்ற என்றுமாம்.

பக். 89 படிந்த பால்மொழி—பேசும்போது பால்படிந்தாற் போன்ற சொற்கள்
பசுங்குழை—பசுமை நிறம் பரவிய பொன்னாலான காதணி

கட்டிய கட்டி — நெற்றியில் கட்டிய கட்டி என்னும் அணி. பொட்டு—திலகம் த. 2

பக். 90 ஆரம் – மாலை
கோரமதி—காமம் மிக்கவருக்குச் சந்திரன் கோரமாகத் தெரிவதால் கோரமதி எனப்பட்டது.
வேலை ஒலி – கடல் ஓசை
விட்டெறிக்க—ஒளிவீசிக் காட்ட
மட்டு—அளவுக்குட்பட்ட அங்கங்கள்
திட்டவட்டம்— தீர்மானித்தபடி
கட்டழகு—ஒன்று சேர்ந்த அழகு
நட்டணை— கொடூரமாக (கர்வமாக) த. 4

பக். 91 பிஞ்சுமதி—இளம்பிறை
பிரசமலர்—தேனைக் கொண்ட பூ

பக். 92 செந்தனம்—சிவந்த தனங்கள்
வெந்தணல்—வெம்மை மிக்க அனல்
ரோசத்தால் சொல் ஒட்டாது

பக். 93 காற்று—தென்றல்
அஞ்சுகம்—கிளி

பக். 95 கோலவரி—அழகிய கோடுகள்
வாவிதோறுமாக மலர்ந்து என்க
தென்னாதெனாவென—தென்னா என்னும் சொல் இசை
ஆலாபத்தைக் குறிப்பது. தென்—அழகு
பவனிக்கே—பவனியைக் கண்டு

பக். 96 மாவிளஞ்சோலை—இளமைகொண்ட மாமரங்கள் நிறைந்த சோலை.
வசந்தகாலத்தில் குயில் ஆர்வத்துடன் கூவும்
இன்னம்—இப்பொழுதே
இசைந்து—விரும்பியது
வாசவன் – இந்திரன்

பக். 97 நயமுத்தமிழ் நாவாணரே புகழ் ஏத்தும் நரபதி-- இனிமைமிக்க முத்தமிழால் நாவன்மை பெற்ற புலவர்கள் புகழ்பாடுகின்ற அரசனான சகசி.

பக். 97 விகாரமதவேள்: மன்மதன்; சகசி
விண்ணு—பொருமுகின்ற
மண்ணுமணி கழுவப்பட்ட மாணிக்கம். தூய்மைப் படுத்தப்பட்டமணி.
தருணி—இளமையுள்ளவள். தருணம்—இளமை

பக். 97 கஞ்சமாது—இலக்குமி
மகபதி—சகசி, இந்திரன்
தாழ்குழல்—நீண்டு தொங்கிய கூந்தல்
தயங்கு—ஒளி விளங்குகின்ற

தார்—மார்பில் அணியும் மாலை; தொங்கும் மாலை எனலுமாம்.

கற்ற பால் மொழி—இளமையில் பயின்ற மழலைப் பேச்சு.

பங்கய முகத்தில் ஒளி பரந்து ஒளிர

சிங்கன் — குறவன். குறவனைச் சிங்கன் என்றல் தமிழ் மரபு.

சாத்திய — அணிந்த

சங்குத்தாலி — சங்கினால் கோத்துக் கட்டிய திருமணக்கயிறு,

பூனைக்காச்சி — ஓர் அணி (ஒருசெடி)

மாறாப்பூ — ஓர் அணி

குறக்கூடை — குறத்தி இடையில் வைத்திருக்கும் கூடை.

பொன்னால் இழைத்த மாத்திரைக் கோல் — குறி சொல்லப்பயன்படுத்தும் பிரம்பு.

மலைக்குறவஞ்சி - மலைநாட்டுக்குறத்தி, குறிஞ்சிநிலத்துக்குறவஞ்சி

குறச்சாதியில் பிறந்து வஞ்சிக் கொடிபோல் உள்ளவள் குறவஞ்சி. குறி சொல்லும் குறத்தியின் பாட்டுக்குக் குறம் என்று பெயர். குறம்பாடுகின்ற குறத்தியை அழகுபெற வஞ்சி என்று அழைத்தனர் புலவர். இது தமிழ் இசைத்துறை மரபு. குறமகள் இளவெயினி என்ற தமிழ்ப்புலவர் பெயர் நினைவு கூர்தற்குரியது. குறமகளைக் குறவஞ்சி எனல் பொருத்தமன்றோ! வேறு வகையில் கூறுவது பொருத்தமன்று.

பக் 99 ஒய்யாரம்—அழகு

தடிக்கும் உததி—கனமான ஓசை எழுப்பும் கடல்

அடிக்கும் அலை—ஒன்றன்மேலொன்றாக அடித்து மோதும் அலை.

வடிக்கும் அமுது—வார்த்தெடுத்த தெளிந்த அமுதம்

நாடவே—வருகை தரவே

வெடிக்கும்—இதழ்விண்ட

மரு—வாசனை

தொடை—பூக்கள் தொடுக்கப்பட்ட மாலை

முடுக்கும்—பின்னிவிடப்பட்ட

முருகுழல் — நல்ல வாசனையுடைய கூந்தல் முருகு வாசனை

சோரவே — அங்குமிங்கும் அசைந்தாடவே. காம வகை சிலவற்றைப் படித்துப் பிறரைத் தாக்கும் மன்மதனையும் என்க.

முடிக்கி—முடித்து,

அரி—சிலம்பின் உள்கிடக்கும் மணிகள். சிலம்பின் அரியிடை முடிக்கி ஒடுக்கி என்க.

நவமணி அடுக்கி நிரவத் தொடுத்து என்க.

ப. 100 காவிரியாளுவோன்—காவிரி நாட்டை ஆள்பவன்.
தகரமாகுழலியர்— புனுகு பூசிய கரிய கூந்தலை யுடைய மகளிர்
சிகரம்—சிறுமலை; மலைமுகடு
துகள்—தூசு
மின்னல் கொடியென, மயிலெனக் கலந்த நடையுடன் வருதலை விரவியே என்று கூறியதாகும்.
கொஞ்சுவது கிளி
கூவுதலில் விஞ்சுவது குயில்.
அஞ்சுநடை—பயந்து பயந்து நடக்கும் நடை: பிறர் அஞ்சும்படியாக நடந்து எனலுமாம்.
மிஞ்சுவடிவு—எல்லை கடந்த அழகு
அஞ்சு மலர்—மன்மத பாணங்களாகிற ஐந்து பூக்களின் ஒருவடிவமாக.
நஞ்சுவிழி—தன் அழகால் பிறரை வருத்துதலால் விஷம் போன்ற விழி

ப. 101 நேத்திரப்பொடி திமிர்ந்து — கண் இமைகளில் வண்ணப்பொடிகளை அழகுபெறப் பூசி
காத்திரம்—பெரிய
மாத்திரைக்கோல் — குறவஞ்சியின் குறியுரைக்கும் கோல்
உன்னியக்குறிகள்--கருதியதைக் கூறும் குறிகள்.

ப. 102 மாரன் கலைக்கு இனிதாகிய—மன்மதனின் காமக் கலைக்கு மூட்டவல்ல
உளவு-உண்மை (மறைத்துக் கூறப்படும் உண்மை)
புல்லி—பொருந்தி; அணைந்து
மெல்லி — மென்மையான தன்மையையுடைய குறத்தி

ப. 103 தப்புரை—தவறான சொல்
மெய்ப்படி—உண்மைத் தன்மையாக
உசிதம்—பொருத்தம்
உந்தி—தொப்புள்

ப. 104 வேதன்—பிரமன்

ப. 104 ஆகாயம் முதலில் தோன்றி அதில் உப்புவிதை தோன்றியது. த. 19
தேயு—அக்கினி
பிருதிவி—மண்
பூமி—நவகண்டம் எனப்பகுப்புடையது
சம்புத்தீவு—நாவலந்தீவு
தக்கிணம்—தெற்கு
பச்சிமம்—மேற்கு
பகரசந்தி—பசபிக்கடல்
உத்தரம்—வடக்கு
மேருமலைக்குக் கீழ்புறம் சம்புத்தீவு
19—வது தருவு பூகோளப் பிரமாணம் கூறுகிறது.

ப. 105 இருள்உலகு—இருண்ட உலகம்
சக்கரவாளம்—சக்கரவாளகிரி

ப. 106 20-வது தருவு தேசங்கள் வருணனை கூறுகிறது
திரிலிங்கம்—தெலுங்கம்: ஆந்திரநாடு
முச்சீனம்—மூன்று பகுப்பான சீனநாடு
மலையாளங்கள்—மலை நாடுகள் த. 20

ப. 107 21-வது தருவு மலைகளைப்பற்றிக் கூறுவது
சுவாமிமலை—குடந்தைக்கு அருகில் உள்ள முருகன் மலை. ஆறுபடை வீடுகளில் ஒன்று. த. 21
சிகரம்—மலையுச்சி

ப. 109 ஆர்—ஆத்தி த. 22

ப. 109 23வது தருவு விலங்குகளைப் பற்றிக் கூறுவது
பாரா: ஒரு பறவை
அசுணம் இசைக்கு மயங்கும் ஒரு பறவை
கேகயம்—மயில்
கண்ட பேரண்டம்—ஒரு பறவை
உமாபட்சி—ஒரு பறவை
25-வது தருவு மருந்து வகைகளைப் பற்றிக் கூறுவது,
வெள்ளைச் சாரணி முதலியவை மூலிகைகள் த. 26

ப. 111 26-வது தருவு ரத்ன வகைகளைக் கூறுகிறது
கமுகு—பாக்கு மரம்
நாகத்தின்முத்து—நாகரத்தினம்
வராகத்தில் -பன்றியினிடத்துப் பற்களில் த. 25

ப. 112 27-வது தருவு நதிகளைப் பற்றிக் கூறுவது
28-வது தருவு தெய்வத் தலங்களைப்பற்றி கூறுவது
29-வது தருவு குறத்தியின் சாதிவளப்பம் கூறுவது
தேக்கு — ஒப்பம் — 'போ' வென்பது ஓசைக்குறிப்பு

ப. 115 தாவடம்—மாலை
காயம்—பெருங்காயமருந்து
தெய்வக்குறவர் என்பது தஞ்சை வளநாட்டு அடியார்களை.
தேசக் குறச்சாதி—மருத நிலத்துக்குறவர் இனம்
காட்டுக்குறச்சாதி—முல்லைநிலத்துக்குறவர் இனம்
மலைக்குறச்சாதி—குறிஞ்சி நிலத்துக்குறவர் இனம்
தேவக் குறச்சாதி—இறையடிமை கொண்ட சிவனடியார்களைக் குறிப்பிடுவது த. 30

ப. 116 அட்டி—அட்டிகை
உச்சிதக்குறி-உயர்வானகுறி, உச்சிதம்-உயர்வு
மாடை-ஒருவகைப் பொன்

ப, 117 ஆரியத்தினில் — ஆரியநாட்டில்
பாரியார் — பெருமைமிக்கவர்
தண்டை: காலணி
நிலவரமாக —· உள்ளபடி
பரவிய - பரந்த த 32

ப. 118 மெழுகினால் பிள்ளையாரைப் பிடித்து வைத்து
அருகு - அருகம்புல்
ஐங்கரன் — விநாயகன்
நறிய — வாசனையுள்ள
நுதலும் — கூறுகின்ற
சாலிகை — கும்பம் த 32

ப. 120 கொல்லாபுரத்தம்மா — கொல்லாபுரம் என்ற தலத்தில் உள்ள லஷ்மிதேவி
மராட்டியர் வழிபடு தெய்வம்
உச்சிஷ்ட — மேலான
பௌவுசுள்ள — மதிப்புள்ள

ப. 121 மூடே — மூன்றே (தெலுங்குச் சிதைவு)
அமுக்கு — அமர்த்தித் தள்ளுதல் (பரிபாஷை)

ப. 123 இன்னார் — பகைவர். லலாடம் — நெற்றி

ப. 324 வேவுகாரன் — ஒற்றன்
தார்ஊரும் — மாலை அசைகின்ற த. 37

ப. 125 கொற்றவேள் — வெற்றியைக்கொண்ட தலைவர்
வேள் — வள்ளமையுடையவன்

ப. 127 புட்ப விமானன் — புஷ்யக விமானத்துக்கு உரிய குபேரன்.

ப. 128 புத்தியால் இசை பெற்ற சீவகன் — தன்னறிவால் இசைப்புலமை பெற்ற சீவகனைப் போன்றவன்:
சீவகசிந்தாமணிக் காப்பியத்தலைவன் சீவகன்

ப. 129 மாலும் — திருமாலும்

ப. 130 பாடிய குறங்கள் — தமிழ் மொழியில் பழமையில்
பாடப்பெற்ற குறவஞ்சிப் பாடல்களை
படித்து — சந்தி வசனங்களான உரைநடையைப்
படித்து.
விஸ்தாரம்பேசி — விரிவாகக் குறவஞ்சியின் சிறப்பைச்
சொல்லி

ப. 130 நங்கையாகிய சிங்கியை. சிங்கி என்றது குறத்தியை.
சிங்கன் — குறவன்
கானு — எங்கே
சங்குப் பாசி — சங்கினால் செய்த பாசிமணி

ப. 131 மேயினும் — பறவைகள் இரைதேடிச் செல்லுதலை
மேய்தல் என்று கூறப்படும்
இனம்கூடி — பறவைகள் தம் இனத்துடன் சேர்ந்து
திரிக்கை, தெள்ளி, கண்ணி — பறவைகளை பிடித்தற்
குரிய கருவிகள் த. 41

ப. 136 பாரிய கொக்கு — பெருத்த கொக்கு
மடையான் — ஒருவகைப் பறவை
உள்ளான் — ஒருவகைப் பறவை
பத்தி — வரிசை த. 42

ப. 137 நாப்பாமலார் — ஒரு பறவை
பாரமிருகம் — பெரிய விலங்கு

ப. 138 நாவேந்தர் — புலவர் த. 43

ப. 139 தமிழுக்கருள் — தமிழ் வளர்ச்சிக்கும் எண்ணம்
கொண்டு புலவர்களுக்குக் கொடுத்து ஆதரிக்கின்ற
த. 43

ப. 140 பிந்தாள் — பின் தங்காள்
முந்தாள் — முன்செல்லாள்

ப. 146 கிரிகை—செய்கை

ப. 147 முத்துக் குச்சு—முத்துக்குஞ்சம்
கரடு; காது அணியில் ஒருவகை
பல்லி முட்டை: மூக்கிலணிவதைக் கூறியது

ப. 148 குறட்டில்—கன்னத்தின் உட்புறத்தில்
கண்டசரம்—கழுத்து மாலை
கூடு; ஒருவகை உள்கச்சு
குப்பசம்—மேல்கச்சு

ப. 149 தூதுவளம் பவளம்—தூதுவிளம் பவழம் போன்றது

ப. 151 கிழி—கோடு விழுந்த குறி

ப. 154 ஆதி—பூர்வோத்திரம்

ப. 155 விகடமன்யர்—பலவேறு உயர்ந்த அரசர்களைக் குறித்தது

ப. 160 திருவீழிமிழலை—சிவத்தலம்

ப. 161 தத்பரன்—தனக்கு மேலான தலைவன் இல்லாதவன்

ப. 162 காமிதபலன்—விரும்பிய பொருள்

ப. 163 கஞ்சமலர்—தாமரைப்பூக்கள்

ப. 164 வண்டு கோ்தினபூ—பூசைக்குரியதன்று
ஆசரிதாக்ஷி—அனுசரிக்கின்ற நிலை
கோவிந்தமதுதாரை—கோவிந்தமென்ற சொல்லாகிற தேனொழுக்கு

ப. 165 எண்ணிக்கோடி—எண்ணிக்கொள்
பங்கயப்புயன்—திருமால்

ப. 168 ஆகத்தில்—உடலில்

ப. 169 இடந்து—பெயர்ந்து

ப. 170 சாத்த—அணிய
பேதகம்—வேறுபாடு

ப. 171 துல்லியமாய்—பரிசுத்தமாய்
சரணதரு என்பது, இறைவனைச் சரணாக அடைந்து
அவன் பாதங்களைப் புகழ்பாடும் பாக்கள்

ப. 172 மெய்—வடிவம்
சடையில் அகத்தி புனைந்தீர்

ப. 173 எடுத்து ஆளாய் என்க
துரையாகிய ஏகேந்திரனிடத்தில்

ப. 177 காணாயிடை—காட்சிக்கு அரிதான மெல்லிய இடை

ப. 180 வாசி—மூச்சுக் காற்று
வேயுமர்ந்திடும் தோளி: வேய்—மூங்கில்
மூங்கிலைப் பெண்கள் தோளுக்கு உவமை
கூறுவதுண்டு

ப. 181 புரம்—திரிபுரம் வனம்—தாருகவனம்
கொன்றையும் அம்புலியும் அரவும் அணிந்தோனே
மன்றல்—வாசனை
தொந்திப்பிள்ளை—விநாயகர்
பிள்ளையையும் முருகனையும் என்க

ப. 183 இசை—பாட்டின் இசை
தொங்கல்—தலைமயிர் அல்லது காதணி

ப. 193 என்கோடு—என்பக்கம்
ஆலைக்கரும்பு செரியாள்—ஆலையில் கரும்பு ரசம்
போல் சுவை குறையாதவள்

ப. 197 வெள்ளிலை—வெற்றிலை
குபசம்—மேல் கச்சு

ப. 199 கௌரவப்பிரம்பு, சகசி மன்னன் கையில் இருப்பது

ப. 200 தோண—தோன்ற
புதிதறிவோம்—புதுமையறிவோம்

ப. 203 பாகவதமேளாமரபு—யக்ஷகான நாடகத்தின் ஒரு பிரிவே பாகவதமேளா என்பது. பொதுவியல் மரபில் பெண்கள் இல்லாமல் ஆடவர்களே பாடி அடி நடிப்பது

ப. 206 நீர் இறல் பொரும் ஐயாறு என்க. காவிரி நீர் பொங்கிப் பெருகி மோதும் தன்மையை உடைய ஐயாறு.
நிமலன்—பஞ்சநதீயசர்.
காவேரியும் சாகரனும் செய்துகொண்ட கல்யாணம் என்னும் பெயர் கொண்ட நாடகத்தை
சாகரம்—கடல்: சமுத்திர இராசன். கமலைமாது; திருவாரூரில் கோயில் கொண்டுள்ள கமலாம்பிகை.
பாலனான கரிமுகன்.
கார் இயல் வண்ணமான—மேகத்தின் கருமை நிறத்தைத் தன் நிறமாகக் கொண்டதான
கரி—யானை

ப. 207 தவளம்—வெண்மை
கவேர இராசேந்திரன்—கவேர இராசமுனி
கஞ்சமணி—தாமரைமணி

ப. 209 கூடாமன்னர்—பகைவர்
குலவியற்கை: பெண்தேடி ஆடவர் வருதல்
காவிரியின் நட்சத்திரம் மிருகசீரிடம்
வாலை—இளம் பெண்
நாலு நாட்களில் காவேரிக்குரிய கணவன் தேடி வருவான் என்று குறத்தி குறி கூறினாள்

ப. 210 இடக்கண் துடித்தல் பெண்களுக்கு நலம் பயக்கும்

ப. 211 விதரணம்—இன்னபடி என்று குறியறியும் தன்மை

ப. 213 மந்தாரபுயன்—மந்தாரமாலையைத் தோளில் அணிந்த காவேரி அரசன்

ப. 214 தண்ணுக்குப் பள்ளமே வாய்த்ததுபோல—தண்ணீர்
பாய்வதற்குப் பள்ளம் கிடைத்தது போல
கள மையல்—மிக்க காதல்

ப. 216 பொங்கம்—மிக்க அழகு

ப. 217 விதரணிகன்—அறிவு ஆற்றலுள்ளவன்
சட்டமாய்—ஏற்படுத்திக்கொண்ட முறைப்படி

ப. 218 மட்டம்—நடுத்தரமான உயரம்

ப. 220 களபம்—கலவைச் சாந்து
நிலவுப்பூ—நிலவுக்காலத்துப் பூக்களைப்போல

ப. 221 சம்பராரி—சம்பாசுரனைக் கொன்ற இறைவன்
நேமிநாதன்—திருமால்

ப. 224 முத்தாடும்—முத்தமிடுகின்ற

ப. 225 முத்துக்களாலும் ரத்தினங்களாலும் முக அலங்காரம்
செய்தேன் என்க
அன்னவகை: சித்திரான்ன வகைகள்
ஆலத்தி—ஹாரத்தி; மஞ்சள் நீரிலே சுண்ணம்
கலந்த செந்நீரை
தட்டிலே வைத்து வலம் சுற்றுவது
திருச்சிற்றம்பலமோடு தேவாரம்—திருக்கோவை
யாருடன் தேவாரம் பாடி என்க
சொரிதல்—பாடி அருச்சனை செய்தல்

ப. 228 உத்தரம்—பிரதிவார்த்தை

ப. 229 அத்திரவிழி—மோகனாஸ்திரம் போன்று கவர்ச்சி
ஏற்படுத்தும் விழிகள்

ப. 231 அம்பல்—ஒருதலம்
திசைபெறு சோழன்—திக்கெல்லாம் புகழ் பெற்ற
மனுநீதிச்சோழன் 'உன் பிள்ளை அழுகிறான்'
என்றது. திருஞான சம்பந்தர் சீர்காழியில் குளக்
கரையில் பாலுக்காக அழுதது

ப. 234 துடி—உடுக்கை
அறமளித்த நாயகி—திருவையாற்றில் கோவில் கொண்டுள்ள அம்பிகையின் திருநாமம் தர்ம ஸம்வர்த்தனி

ப. 237 காவிரிக்குக் கடல் பொருத்தம்: மலைக்குமலை சேர்க்கைப் பொருத்தம் போன்றது
கொஞ்சத்தனம்—அற்பத்தனம்

ப. 238 ஒருமட்டும்—ஒன்றுமட்டும் (சொல் சிதைவு)
முகவிச்ச வார்த்தை—முகம் மலரக்கூடிய வார்த்தை
ஆதி சைவருக்குக் கொழுந்தான மூர்த்தி அகத்தியர்

ப. 240 வால மன்மதன்—பால மன்மதன்

ப. 241 இருக்குவேள்—புள்இருக்கு வேளூரின் இறைவன்; சகசி மன்னனுக்கு, வைத்தீசர் கோயிலில் ஈடுபாடு மிக்கிருந்தது.

# பாட — பிரதி பேதங்கள்

| | | |
|---|---|---|
| பங்கார | பகைக்கார, பங்காளி | ... 34 |
| தெண்புய | திண்புய | ... 52 14 |
| அரசியே | அணங்கே | ... 110 |
| நாட்டில் | மண்டலத்தில் | ... 111 |
| நாகத்தின் முத்துடனே | நாகத்தின் முத்துண்டு காண்ண | ... 111 |
| சந்திரபடாகை | சந்திரபாகை | ... 112 |
| கோனாத்ரி | கோணபத்ரி | ... 112 |
| காவேரியோடு | காவேரியாட | ... 111 |